

பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

இது

# மஅரிபத்து மாலை

## பொழிப்புரை.



இதில்

நற்கலை மெய்ஞ்ஞான சொரூபரான குதுபுல் ஆலம்
ஹலரத்து பீர் முஹம்மது சாஹிபு ஒலியுல்லா
அவர்கள் பாடிய

மஅரிபத்துமாலையும்,

அதற்கு

பாண்டிமண்டலம் செவ்வல்மாநகரம் மஹாவித்துவான்
ஸ்ரீலஸ்ரீ
எம். ஏ. நயினா முஹம்மதுப் பாவலர்
எழுதிய பொழிப்புரையும் அடங்கியிருக்கின்றன.

இதனை

யூனானி டாக்டர் எம். ஏ. ஷேக்மதார் ஸாஹிபு
அவர்களின் குமாரரால்

சென்னை,
ஷாஹுல் ஹமீதிய்யா பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

3-ம் பதிப்பு



இதன் விலை] 1955 [ரூ. 4-0-0



*பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்ரஹீம்.*

# மஅரிபத்து மாலை.

## பொழிப்புரை.

### முதலாவது-பொருட்பால்

### காப்பு.

*விருத்தங்கள்.*

*பொன்னுலகு சூழும் புகழிறசூல் சொன்னபடி, பொருட்பால் அருட்பால் காமப்பாலும், சொன்னமுறை யெழில் பெருகுந் தீனோர்களெல்லாமறிய வியம்பினேன் மஹரிபத்து மாலையிதாம், எண்ணிலங்கும் பெரும் பொருளை யெழுப்பி நிலைநிறுத்திய பீர்முஹம்ம தென்போன், நின்னயத்தி லிலங்கு பொருணிறைந் திருக்க நிலை நிறுத்து நீதி றப்பில் ஆலமீனே.*

*(இதன் பொருள்) பொன் மயமான சுவர்க்க லோகத்தின் மணவாளரான நமது நபி நாயகம் ஸல்லல்லாஹு அவர்கள் தங்கள் திருவாக்கினல் அருளிச் செய்த பிரகாரம் பொருட்பால் அருட்பால் காமப்பால் என்னும் மூன்றிலும் நிறைந்து போய்க் கிடக்கின்ற மெஞ்ஞான நிலைகளை நமது சகோதரர்களான தீனோர்களெல்லாம் அறிந்துணரும்படியாக இந்த பீர் முஹம்மது என்பவனுன என் மனதில் பிரியங்கொண்டு செய்தேன். ஆனதால் என் ஞானக்களஞ் சியமான இந்த மஹரிபத் துமாலையை உற்றுணரும் பேர்களுக்கு ஞான நிலையைக் காட்டுவாயாக நீதியான றப்புல் ஆலமீனே! எ-று.*



# நூல் முகம்.

## மகுட விருத்தம்.

ஆதிபெரியோனே தம்பிரானே யவனி யடங்கலும் படைத்தவனே. யோதிப்புகழயா னுனக்கடிமை யுலக நிறைந்தவா வொளித்தா யெனிற், சோதியிருதயங் குறையாமலே சொல்வேன் முஹம்மது மஹரிபத்தை, நீதி தெரிந்தோருந் தீனிலாக நிகழ்த்த வுலகெல்லா முதவி செய்வாய். (1)

(இ-ள்):— பூர்வீகத்தில் எழுந்தருளிய பெரிய பொருளானவனே! நாயனே! பூலோக முதலிய யாவற்றையும் படைத்தவனே! உன்னை தோத்திரஞ் செய்கின்ற உன் அடிமையாகிய என் இருதயத்தில் நீ ஒளித்திருக்கின்றாயே ஆனதினாலே நீயறியும் படியான சாட்சியாக உன் ஹபீபான நாறுல் அஹ்மதிய்யா வாகிய முஹம்மதுடைய அகப்பொருளாகிய ஞான வழியை நான் சொல்கிறேன். இதன் நீதியைத் தெரிந்த யாவரும் நேர்வழி பெறுவார்கள். எ-று.

உலகம்படைத்தவ னொருவனையனுரிய படைப்பெல்லாந்தான் படைத்து, நிலைமை தவிராமற் படைப்பனைத்தும் நீதியவன்றனை வணங்கவேண்டி, கலையிலிறக்கினான், கண்டறியக் கருமமறியார்கள் காபிராகும், விலகுவாரிறை யருளைவிட்டும் வேதமுஹம்மதின் பெலனுமில்லை. (2)

(இ-ள்):— இந்த உலகத்தை ஒரு நாட்டமானது தன் ஆசையில் நின்றும் படைத்தது. அப்படிப் படைத்த படைப்புகளை யெல்லாம் தன்னை வணங்கும் படியாயும், அவ்விதம் வணங்கும் தன்மை இப்படிதான் என்று தான் இறக்கி வைத்த வேதங்களில் அங்கங்கே சயிக்கினைகள் செய்தான். அந்தப்பிரகாரஞ் செய்வதை விட்டு மேனி மினுக்காய் அலைபவர்கள் உள்ளபடியே காபிராக இருப்பதுடன் றசூலுல்லா உடைய ஷபாஅத்தும் பெற்றுக் கொள்ள மாட்டார்கள். எ-று.

பெலனிலாகாத குபிரர்தானும் பேசிடும் பொல்லாச் செயலோர்களும், நிலைவின் பொருணீக்கிப் பலஞானத்தை நினைத்தே யுடையோனை நினைவு கொண்டு, நிலையி லொருகோடி வருடம் நின்று நினைவுவாக்குடன் வணங்கினாலு, மலையின் குகையுள்ளே யானந்த கால மண்ணி னறையுள்ளே மாளிகையின். (3)

(இ-ள்):— வேதங்களுடைய பலனில்லாதவர்க ளெல்லாம் ஏடேற்றமற்ற செயல் கேடர்களாவார்கள். இன்னும் காபிரீன்களான வர்கள் கண்ட கண்ட ஞானங்களையும் படித்து அதன்படி நடப் பார்கள். அவ்விதம் அவர்கள் ஒரு கோடி வருஷங்களாக நிலையில் நின்று வணங்கினாலும், இன்னும் அவர்கள் மலை கெபிகளில் இருக் கின்ற குகைகளுக்குள்ளே போயிருந்து வணங்கினாலும், அல்லது மண்ணுக்குள்ளே அரைகள் செய்து இருந்து வணங்கினாலும்,

மாளியிருளுக்குண் மண்டபத்தின் மானங்குலையத்தா னுடை யில்லாம, லூழிநெடுங்கால முலகிழந்தே யூணுஞ்சுகமற்றிங் கோடி யோடி, மாளும்வருடத்துக் கொருமூச்சுத்தா னணையுமழைவேயின் மலையிலேறிப், பாழுங்கிணற்றிலே தலைகிழாகப் பயந்துநடுங்கியே மனங்கலங்கி. (4)

(இ-ள்):— இன்னும் இருளான மாளிகை களுக்குள்ளிருந்து உடையில்லாமல், ஊணுறக்கமற்று, சுவாசங்களை மேலேற்றி இழுத்து வருஷத்துக்கொருமூச்சுவிட்டு வணங்கினாலும், இன்னும் பாழுங்கிணறுகளில் போய் தலைகீழாய் நின்று பேய் பிசாசைப் போல் பயமற்றிருந்து வணங்கினாலும், இன்னும் அவர்களுடைய ஆயுசெல்லாம் கண்ணீர்வடித்தழுது நின்றுஉருக்கத்துடன் வணங் கினபோதைக்கும், இன்னும் கடல் நீரெல்லாம் தனக்கஞ்சும் சுபா வத்துடன் கற்பாசனம் கொண்ட சித்தனானாலும், அல்லாஹுத் தஆலாவின் ரகசிய பொருளான கலிமாவை உணராதவரையிலும் அவர்கள் பயன்பெறவே மாட்டார்கள். அவர்கள் செய்த தவங்க ளெல்லாம் வீணாகத்தான் அழிந்துவிடும். மேலைக்கு அவர்கள், ஆண்டவனுடைய தீதாறையும், ஷபா அத்தையும் காண மாட்டார்கள். சுவர்க்கத்தையும் பார்க்கமாட்டார்கள். கடையாக நரகத்திலேதான் போய் விழுவார்கள். அது ஏனென்றால் கீழே சொல்கிறேன் கேளுங்கள். எ-று.

கலங்கியழுதாலுங் கடனீர் மட்டுங் கற்பமருந்திய காட்சி கண்டே, யிலங்கும்பொருணிலை யறிந்திலார்க்கிங் கெல்லாத்தவமுமே யழிவதாகும், நலங்குந்தீதாறும் ஷபா அத்துட னல்லபதவியு நல் வழியும், விளங்கிச்சுவர்க்கத்தை நரகந்தன்னில் வீழ்வாரேதென் றால் விளம்பக்கேளீர். (5)

(இ-ள்):— ஏழுசந்தாசமுத்திரங்களைப்போல்கண்ணீர் வடித்து அலைந்தாலும், கற்பங்களைத்தின்று எக்காலும் இளம் பருவயதாக இருந்து வந்தாலும், (இருநேத்ரங்களிலும்) இலங்கிக் கொண் டிருக்கும்படியான "தாத்து" என்னும் சர்ஜோதியை, அதாவது தன்னைத்தெரிந்து திரமான ஸயாறியைப் பெற்றுக்கொள்ளாத மாபாவிகளுக்கு அவர்கள் செய்த தொழுகைமுதலான சர்வதவங் களுந் துலைந்துபோய் கடைசியாக ஞானக்குருவாகிய நம்நபியவர் களின் "கடையுக மன்றாட்டம்" என்கின்ற 'ஷபாஅத்தும்' இல்லாமல் போய்விடும். அவர்கள் ஒதுங்குந்தானமானது ஊழிக் கனல் சுவாலைப்பற்றி எரியும்படியான நரகமே ஆகும். ஏனென்றால் பின் வருமாறு சொல்கிறேன். எ-று.

விளம்பக்கேளுங்கா ளுலகத்தோரே வேதமிறக்கிய பெரிய நாயன், தழும்பில்லாநபி தமைப்புகழத் தக்ககலிமாவின்படி நடக்க, களிம்பில்லாததோர் கலிமாவுந்தான் கதவுசுவர்க்கத்துத் திறவுகோலாங், குளம்பிமனதிலே யறியார்குபிர் கூறுந்திறவுகோ லில்லாததால். (6)

(இ-ள்):— யார்காணும் உலகத்தார்களே! கேளுங்கள். அல்லா ஹுத் த-ஆலா உலகத்தார்கள் தன்னை அறியும் பொருட்டு முதல் நபிகளை அனுப்பி அப்பால் வேதங்களை இறக்கி அந்த வேதங் களுக்குள்ளே தன்னை யடக்கிய பொருளான பொக்கிஷமாக கலிமாவென்னும் மூல மந்திரத்தை அடைத்து வைத்தான். அதைப் பற்றி 'இந்த கலிமாவாகிறது சுவர்க்கத்து திறவுகோல்' என்றும் அறிவித்தான். ஆனபடியால் அந்தத் திறவுகோலை மனதில் பதிய வைக்காதவர்களெல்லாம் குபிரியத்தின் பேரிலுள்ள நஷ்டவாளராக இருக்கும். எ-று.

ஆனபடியாலே குபிரோரெல்லா மறுந்து பாவியா யழிவதாகு, மீனமணுகாதநாயன்றானு மிறசூல்முஹம்மதைப் பார்த்துச் சொல்வான், ஏனுஞ் சுவர்க்கந்தோ னரகிரண்டி லெதுவே னுமக்கென விறசூல்சொன்னார், மானநிறைந்திடுஞ் சுவர்க்கமென்க மன்னனிறையவன் கொடுத்தே னென்றான். (7)

(இ-ள்):— ஆனபடியால் அந்த திறவுகோலை கைப்பிடியாக வைத்துக் கொள்ளாத காபிரீன்களின் தவங்களெல்லாம் ஒரு பயனுங் கொடுக்காமல் போய்விடும். கருமத்தில் அல்லாஹுத்

தஆலா றசூலுல்லாவுடைய ஒளிவைப் படைத்து அந்த ஒளி விடத்தில் தன்னிட மிருக்கின்ற உம்முல் கித்தாபைக் காட்டி அதி லுள்ள சுவர்க்க நரகப் பிளான்களைக் காண்பித்து "முஹம்மதே! உமக்கு இந்த சுவர்க்கம் வேண்டுமா? அந்த நரகம் வேண்டுமா?" என்று கேட்டான். அதற்கு அந்த முஹம்மதியா என்னும் ஒளிவானது "எனக்கு இந்த சுவர்க்கந்தான் வேண்டும்" என்று மறுமொழி சொல்லிற்று. அப்போது அல்லாஹுத் தஆலா "முஹம்மதே! என் ஹபீபே! அப்படியே தந்தேன். நீயும் உன் சேனைகளும் அனுபவியுங்கள்" என்று நன்கொடை கொடுத் தான் எ-று.

கொடுத்த சுவர்க்கத்தை மறுத்தும் வாங்கக் கொடுத்தே னிரு மொழி கூறவில்லை, யடுத்த நரகந்தான் குபிரோர்க்கென்றே யாதி பெரியவனருளிச் செய்தான், விடுத்த குபிர் தீனே ரெவரென்றாலும் வேத முஹம்மதின் ஷறகை நீக்கிக், கொடுத்தசெயற் குபிர் வணக் கத்தோர்க்குக் கிடைக்கு நரகல்லால் சுவர்க்கமில்லை. (8)

(இ-ள்):— அப்பால் முஹம்மதென்னும் ஒளிவானது, மறுத் தொன்றும் பேசாமல் இருந்து விட்டது. அப்பால் அல்லாஹுத் தஆலா "அந்த நரகமானது என்னுடைய மூலஸ்தான மந்திர மாகிய கலிமாவைச் சொல்லாத காபிரீன்களெல்லாம் ஊழிகாலம் கிடந்து வேதனைப் படுகின்றதற்காக ஸ்தாபித்தேன்" என்றான். ஆதியாகிய பொருளான அல்லா இவ்விதம் சொல்லி யிருப்பதாலே முஹம்மது நபியவர்களின் ஷரீஅத்தின் மணித்தீபமாகிய கலிமா வைச் சொல்லி ஈமான் கொள்ளாத காபிரீன் களுக்கெல்லாம் சதாயாதனையுள்ள நரகமே ஒதுங்குந் தானமேயன்றி சுவர்க்க மென்பது மருந்துக்குங் கிடையாது. எ-று.

சுவர்க்கஞ்சேருவார் குபிரோரென்று சொன்ன வுடன்காபி ராமவனு, மிவர்க்கு மொருதரந் தவுபாச்செய்தே யிழகாதீமானை நிறுத்தவேணு, மவர்க்குத்தவுபாவைச் செய்யாதானு மாதிநான் மாறிக்குபிரானுனு, மிவர்க்கு நரகல்லால் சுவர்க்கமில்லை யென்றார் முஹம்மது நபியிறசூல். (9)

(இ-ள்):— "உலகத்துதில் எவனாவது ஒரு முஸ்லிமானவன் ஒரு காபிரானவனைப் பார்த்து இவன் சொர்க்கவாளி யென்று சொல் வானானால் உடனே அந்த முஸ்லிமானவன், காபிராகி விடுவான்.

அவனைத் தவ்பாச் செய்ய சொல்லி குபிர்க்கலிமாச் சொல்லிக் கொடுக்க வேண்டும். அவ்விதஞ் செய்ய விடாமல் அடாதுடியாக இருப்பானே ஆனால் அவனுக்கும் ஊழியூழி காலம் நரகமே கிடைக்கும், சுவர்க்கம் கிடையாது" என்று நபிநாயகம் அவர்கள் திருவாய் மலர்ந்து சொல்லி யிருக்கிறார்கள். எ-று.

நபிகள் பெருமானும் நவச்சுடராம் நபிநாயக மான வள்ளல், புவியில் புறுக்கானைப் பார்த்துச் சொன்னார் போதமிமாம்களு மிதன் கித்தாபின், கவியாமஹரிபா ஆரிபீனிற் கண்டவிசளத்தைக் கவிநையாகத், தவியாவமுதான மஹரிபத்துத் தானுமெனச் சொல்லி நவிலலுற்றும். (10)

(இ-ள்:)— இந்த மஹரிபத்து மாலையில் இருக்கின்ற விஷயங்களெல்லாம், நபிமார்களுக்கு கிரீடமாகிய நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் திருவாய் மொழிகளான ஹதீது குதுஸியில் நின்றும். இமாம்கள் தங்கள் கிதாபுகளில் எழுதினார்கள். அவைகளை எடுத்து அனேக ஆரிபீன்கள் விபரித்தார்கள். அதன் கருத்தைக் கொண்டே நானும் சொல்லியிருக்கின்றேன். எ-று.

நவில்வாருலகத்தில் நீனேரெல்லா நல்ல பொருளெல்லா மறிந்தோமென்பார், புவியிலருட்பாலும் பொருளின் பாலும் புகலுங்காமப்பான் முப்பாலையுங், கவியிலறிந்தார்போ லெல்லாஞ் சொல்வார் கடுகுபோன் மார்க்கங் கண்டறியார், தவியாப்புறுக்கானிற் சொன்னபடி தமிழானுலகத்தி லறியச்சொன்னேன். (11)

(இ-ள்):— உலகத்திலுள்ள நமது சகோதரர்களான தீனவர்களெல்லாம் நாங்கள் எல்லாம் அறிந்து விட்டோம்! என்று கண்டதெல்லாம் பிதற்றி ஞானத்திலுள்ள பொருட்பால், அருட்பால், காமப்பால் முதலிய யாவற்றும் அறிந்து, அதன்படி நடப்பவர்களைப்போல் ஜாடை பண்ணுவார்கள். அந்த சோற்று ராமன்கள் ஒரு கடுகுப்பிரமாணமாவது தன் நிலையைப்பற்றி அறிவார்களா? அறிய மாட்டார்கள். ஆனதால் அல்லாஹுத் தஆலா தன் திருவேதமாகிய குர்ஆனில் சயிக்கினை செய்த பிரகாரம், பிசகாமல் ஜனங்கள் நடந்து நேர்வழி பெறும்படியாக நான் இந்த மாலையை தமிழ்ப் பாஷையாகச் சொல்லிவிட்டேன். எ-று

# கலிமா விளக்கம்.

*விருத்தங்கள்.*

*சொல்லுங் கலிமாத்தான் லாஇலாஹ இல்லல்லாஹுவென் றியம் புவது, சுல்ல ஷறகுட னெழுத்தீராறங் நான்மூன்றெழுத்தையு நவிலக்கேளுந், தொல்லை யணுகாத முஹம்மதுர்ரஸூலுல்லாஹி யென்றியம்புவது, மெல்லா மறுநான்கென் றிடுமெழுத்தாமிணைத்துக் கலிமாவி லியம்புவதே.* (12)

*(இ-ள்):— கலிமா என்பது என்னவென்றால் ஷறஹில்வந்திருக் கின்றபடி, லாஇலாஹ இல்லல்லாஹு என்கிற பனிரண்டு அட்சரங் களும் அப்பால் முஹம்மதுர் றஸூலுல்லாஹி என்கிற பனிரண்டு அட்சரங்களும் ஆகக்கூடி இருபத்து நான்கு அட்சரங்களாக இருக்கும். எ-று.*

*இயம்புங் கலிமாவின் முஹம்மதுர் றஸூலுல்லாஹி யென் றெழுத்தின்பொரு ளையம்பெறப் பின்னாற் சொல்லுகிறே னவில்லா இலாக இல்லல்லா வென்று, லியம்பு மீராறென் றெழுத்துமாகு மியல்பா மறுநான்கு மிதுகலிமாப், பயமி லாமலே செய்வதற்குப் பறுலு நாலுண்டும் பகரக்கேளீர்.* (13)

*(இ-ள்):— மேலே சொன்ன கலிமாவிலே முஹம்மதுர் றஸூ லுல்லாஹி, யென்கிற அட்சரங்களின் பொருளைப் பின்னால் சொல் கிறேன். முதல் வந்த லாஇலாஹ இல்லல்லாஹு என்கிறதாவது பன்னிரண்டு அட்சரங்களைப் பொதிந்ததாக இருக்கும். இதுவே இருபத்துநான்கு அட்சரங்களுக்குரிய கலிமா முழுவதும் நிரம்பின தாக இருக்கிறது. இந்தப் பயமற்ற கலிமாவைச் சொல்வதற்கு நான்கு பறுலுகள் இருக்கின்றன. அவைகளைக் கீழே சொல் கிறேன் கண்டு கொள்ளுங்கள். எ-று*

*பகருங் கலிமாவை யுரைக்கும்போது பலதும்நினைவினி னினைந்திடாம, னிகரி லாமனந் தொருநினைவாய் நிறுத்தி வாயினு லுரைக்கமுக்கா, லுகருங் கலிமாவி லருத்தம்பொரு யுவந்தோ யறிவது பறுலிரண்டா, மிகருங் கலிமாவி லருத்தப்படி யிதமாய் நடப்பது பறுலுமூன்றே.* (14)

*(இ-ள்):— அந்தக் கலிமாவைச் சொல்லும்போது மனதில் பல எண்ணங்களையும் நினைக்காமல், நிகரில்லாத ஆண்டவன் பேரில்*

கதிர்முனைபோல் நிலையாக நிறுத்திய ஒரே நிய்யத்துடன் வாயால் மூன்று தடவை சொல்வது, ஒரு பறுலு. அப்படிச் சொல்லும் போதே அதன் கலப்பறுதலிற்ற தெளிவான அர்த்தத்தை இருதயத்தில் நிர்ணயப்படுத்துவது ஒரு பறுலு. அப்படித் தெரிந்து கொண்ட அர்த்தத்தின் பிரகாரம் சாதுவாக நடப்பது ஒரு பறுலு. ஆகப்பறுலு மூன்றுடன். எ-று.

மூன்று பறுலையு மறியச்சொன்னேன் மொழிகி றேனுலாம் பறுலையுந்தான், தோன்றுங் கலிமாவின் முஹம்மதுர்ற ஸூலுல்லாப் பொருட் பின்னுற் சொல்வே, ஞண்டபெரியவன் இலாஹ இல்லல்லாஹு வென்றியம்புவது. வேண்டும் பன்னிரண்டெழுத்து மூண்டும் விளம்பக் கேளுங்காணறிவுதன்னை (15)

(இ-ள்):— நான்காவது புறுலையும் சொல்லிவிடுகிறேன். அதாவது முஹம்மதுர் றஸூலுல்லாஹி, யென்று சொல்வதாக இருக்கும் இதன் அர்த்தத்தைக் கடைசியில் சொல்கிறேன். அல்லாஹுத் தஆலா லாஇலாஹ இல்லல்லாஹு என்ற பனிரண்டு அட்சரங் களில்தான் ஒளித்திருக்கின்றான். அந்தப் பனிரண்டு அட்சரங் களும் பனிரண்டு அறிவுகளாக இருக்கின்றன. அவைகளையும் கீழே சொல்கிறேன். கேட்பீர்களாக. எ-று.

கலிமாவிளக்கம் முற்றிற்று-



# பன்னிரண்டு அறிவுகளின் விபரம்.

விருத்தங்கள்.

அறியும் பன்னிரண்டெழுத்தையுந்தா னறைந்திட்டேன்றிரு நெறிநீதியி, லுறையாந் திருநெறி யரியாமூடர்க்குரைக்கிறேனிதிற் சுருக்க மாகச், செறியும் பன்னிரண் டறிவுதனிற் செப்புவேன் முதலறிவைக்கேளுங், குறியா யிறைவன் றனையறியக் கூறுங் கலிமாவினெழுத்தொன்றுலே. (16)

(இ-ள்):— நான் இப்போது சொல்லப்போகின்ற பனிரண்டு அறிவுகளையும் முன்னமே என்னுடைய நெறிநீதி யென்கிற நூலில் சொல்லிவிட்டேன். அந்த நூலை யறிந்தில்லாத கிற்மூட ஜனங் களுக்காக வேண்டி இந்த நூலிலும் சுருக்கமாகச் சொல்கிறேன்.

அந்தப் பனிரண்டு அறிவுகளிலும், முதலாவது அறிவைச் சொல்கிறேன் கேளுங்கள். அதாவது அல்லாஹுத் தஆலா தன்மையான இரகசியங்களை அறியும்படியாக வந்த கலிமாவில் உள்ள ஒரு எழுத்தாலே அந்த அறிவு வெளியாகும் எப்படியென்றால். எ-று.

எழுத்தை யிருத்தினுற் கமலத்துள்ளே யிலங்கும்பொருள் றப்பில் ஆலமீனுஞ், சுழித்து மூச்சாகவெழுந்தசோதிச்சுடரும் யாகூ வென் றெழுத்துமாகு, மழுத்தி மேல்விழி நிலையைநோக்கி யருளை யறிவது முதலறிவாம், ஒழித்துப் பதுக்கின்ற வறிவுதன்னையோது வேன்ரன்டா மறிவைக்கேளும் (17)

(இ-ள்):— அந்த எழுத்தை இருதயத்தின் கமலத்தில் இருத்தினுல் அங்கே ஒரு ஒளிவு பிரகாசிக்கும். அதுவே றப்புல் ஆலமீன்என்பதாகும். அந்த எழுத்தாவது, சுவாசத்தைச்சுழித்து வாங்கும் போது அந்த பிரகாசத்துடன் கலந்து நிற்கின்ற "ஹூ" என்றதாக இருக்கும். இந்த தந்திரத்துடன் கூர்மையான நினைவுடன் கண்ணை புருவமத்தியின் மேலே ஏற்றி அந்த ஏற்றத்தோடும் அங்கு தோன்றுகிற ஒளிவை எதிர்பார்ப்பது தான் முதலாவது அறிவாகும். இனி இரண்டாம் அறிவைச் சொல்கிறேன் கேளுங்கள். எ-று.

அறியு முடலதை முஹம்மதுர் ரஸூலுல்லாஹியென்றட்சரத் தாற், றறுகாச் சுரூபமா யுடலமைத்தான் சாற்றுங்கோட்டைக்கங் கரசு நாயன், குறியா முகந்தனில் விழிநடுவிற் கோர்க்கு முயிர்றப்பில் ஆலமீனு, யுறுவோன் மலக்குக ளுலுபேரு முடையோனே வலையுரைக்குகிறேன். (18)

(இ-ள்):— இந்த சரீரமானது முஹம்மதுர்றஸூலுல்லாஹி யென்னும் கலிமாவினுல் அமைந்திருக்கின்றது. இப்படிச்சமைந் திருக்கின்ற கோட்டைக்கு அரசனுனவன் றப்புல் ஆலமீனுக இருக்கு மென்றும், அவன் முகமானதில் இருகண்ணிலும் நடுவே இலங்கு கின்ற உயிர் நிலையான ஒளிவாகநிற்கின்றுனென்றும் அவனைச்சூழ பகவதிகளான நான்கு மலக்குகளும் இருக்கிருர்கள் என்றும், இன்னும் சொல்கிறேன், எ-று.

உரைத்த வுடலதி லேந்துவீடு முவந்த பேச்சுடன் மூச்சு கேள்வி, நிரைத்த பார்வையு முயிர்நிலையு நீதி யெழுத்தைந்து காசீறைந்தும், விரைத்தபொருட்பாலிலுரைக்கொணுது வெளியா

யருட்பாலினிமேற் சொல்வேன், றிருத்து மிருவகை யறிவது தான் செப்பினேன் ரண்டா மறிவிதாமே. (19)

(இ-ள்):— சரீரத்தில் ஐந்து வகை மாளிகை யிருக்கின்றன. அவைகளில் பேச்சு, மூச்சு, கேள்வி, பார்வை, உயிர்நிலை என்னும் நீதி எழுத்தாகிய புலன்கள் ஐந்தும் இருக்கின்றன என்றும், இன்னும் அவைகளுக்காதாரமாக அணுசிறுகளான பூதங்கள் ஐந்தும் இருக்கின்றன என்றும், இவ்விதம் அறிவது இரண்டாம் அறிவாகும். இவைகளின் விபரங்களை இந்த பொருட்பாலில் சொல்லப்படாது. கீழ்வருகிற அருட்பாலில் சொல்லுகிறேன் கண்டுக் கொள்ளுங்கள். இனி மூன்றும் அறிவைச் சொல்லுகிறேன். எ-று

அறிவா மூன்றதை யருளக்கேளு மாதிபெரியவன் வேத நாலு, மறையுஞ் சுகுபுகள் பலஞானமு மாதி பெரியவன் வசன மென்றுங், குறியும் வகையுள்ள பொருள்களெல்லாங்குறுவா னீத மொன்றிருப்பதாலே, மறையின் வழியெல்லாஞ் சரியேயென்று மனதி னினைப்பது மறிவுமூன்றே. (20)

(இ-ள்):— நாலுவேதங்களும், தேவகட்டளைகளான ஸுஹுபுகளும், மஅரிபா என்னும் ஞானமும் ஆதிவஸ்து வாகிய அல்லாஹுத் தஆலாவின் திருவசனம் என்றும், அவைகளின் பொருளானது குருமுஹம்மதுடைய திருவாக்கால் வந்ததென்றும், வேதங்களிலுள்ள எல்லா ஆயத்துகளும் வணக்கங்களுக்குரிய ஸாஸனமென்றும், அதைப் பற்றியதெல்லாம் நேர்வழிதான் என்றும், நிர்ணயிப்பதுதான் மூன்றும் அறிவு ஆகும். எ-று.

மூன்று வேதந்தா னிறக்கினது முன்னுள்ள நபியனைவோர்க் குந்தா, னுண்ட பெரியவ னொளிவில்நபி யன்ன ரூபமாயிருந்த போது, கூண்ட பெரியவ னபியைக்கண்டு கூறு முஹம்மது தீனி லானார் தோன்று நபிகண்முன் னொளியொன்றுலே தொகுத்தார் சரியென்னு மறிவுநாலே. (21)

(இ-ள்):— முன்னுண்டான நபிமார்கள் எல்லோற்கும் மூன்று வேதந்தானிறக்கி வைத்தான். நமது நபியவர்கள் அன்னத்தின் வடிவாக இருந்த மகாமில் வைத்து நபிமார்களுடைய அறுவாஹுகளை அழைத்து முஹம்மதுக்குக் கலிமாச் சொல்ல சொன்னான். உடனே அந்த அறுவாஹுகள் இஸ்லாமிலாகி விட்டன.. அப்போது தான்

அந்த அர்வாஹுகளை முஹம்மதுடைய ஒளிவுக்குள் அடைத்தான் என்றும் அறிவது, நாலாம் அறிவாகும். எ-று.

நாலாம் வேதத்தி லிறையோன் சொன்னுனேக் கியாமத்தின மையெழுப்பி, யாலம் படைத்தவன் றிருமுன்னுக வைம்பதாயிரம் வருடமோர் நாள், கால் கை யுறுப்பெல்லாஞ் சாட்சி சொல்லக்கடிய மகுஷறிற் கனத்த நன்மைப், பாலங் கடந்து தான் சுவர்க்கஞ் சேர் வார் பகரு மறிவஞ்சா மின்னங் கேளீர். (22)

(இ-ள்.):— நாலாம் வேதமாகிய நம்முடைய குர்ஆன் ஷரீபில் அல்லா சொன்னபடி, ஜீவராசிகளை யெல்லாம் நாளை கியாமத்தில் எழுப்பி அல்லாவின் திருச் சமுகமாக நிறுத்தி ஐம்பதினுயிரம் வருஷங் கொண்ட ஒரு பெரிய யுகத்தை ஒரு நாளாக நீள வைத்து சூரிய சந்திரர்களையும் அப்படியே நிற்க வைத்து மனிதர்கள் செய்த நன்மை தீமைகளை அவரவர்களின் கால் கை உருப்புகளான அவயவங்களைக் கொண்டே சொல்ல வைத்து நீதி விசாரித்து அந்த கடின வெப்பத்தையுடைய மஹ்ஷர் மைதானத்தை கடந்த நன்மையாளர்கள் சிருத்துல் முஸ்தக்கீம் என்னும் பாலத்தையுங் கடந்து தான் சுவர்க்கஞ் சேர வேண்டு மென்றும் உறுதி கொள்வது ஐந்தாம் அறிவாகும். எ-று.

அஞ்சி டாப்பாவஞ் செய்வ தெல்லாம் அஜாசீ றனச்சேரு மவனுவக்தே, யெஞ்செய லிந்த வடியானென வெளி நரகுக்கங் கழைத்துச் செல்வான், மிஞ்சிட நம்மை யிறையுவந்து மீசான் றிராசினிற் கனத்தால் நன்மை யஞ்சி டாதேட்டை வலது கையி லருள்வனிஃதறி வாருகுமே (23)

(இ-ள்.):— இன்னும் அந்த மஹ்ஷரில் தீமையான பாவிகளை அதற்குரிய குருவாகிய லாஅனத்துப் பெற்ற இப்லிஸானவன் "ஓ! என் கூட்டங்களே வாருங்கள்" என்றழைத்துக் கொண்டு போய் நரகில் தள்ளுவான் என்றும், மீஜான் என்னும் தேவத்தராசில் பாவிகளையும், சுபாவிகளையும், வைத்து நிறுக்கப்பட்டு நன்மை யாளருக்குநன்மைப் பட்டோலையும், தீமையாளருக்குத் தீமைப் பட்டோலையும் கொடுத்தனுப்பப்படும் என்றும் உண்மை கொள்வது ஆறும்அறிவாகும். எ-று.

அறியு முஹுமுழுக் கவுலற்காகு மக்தக்கவுலல் நீர்சுடாதப் போது, திரிந்தங் கலேயாமல் சுவர்க்கஞ் சேர்வார் தீங்கு பெருமை

பொய் ஹறும் பகீலும், பொருந்தி ராமனம் பளிங்கியாகும் பொன்
னூர்சுவர்க்கத்தி னமுதருந்த, நிறைந்த கசடர்க்குஞ் செரிக்கா
தென்ற நீதிய றிவிஃ தேழாகுமே. (24)

(இ-ள்.):— குஸுல் முழுக்குகள் கௌதர் என்னும் தேவ
நதியைச் சேரும். அப்போது அவனை அந்த நதி சுடாது. பெருமை
பொய், ஹறும், பகீல் இவைகள் செய்யாமல் நீதியாய் நடந்தவர்கள்
எங்குந் திரிந்து அலையாமல் சுருக்காய் சுவர்க்கத்தில் அவரவர்கள்
மாளிகையில் போய்ச் சேருவார்கள். மனதில் கசடில்லாதவர்களுடைய
மனங்கள் பளிங்கிக் கிண்ணங்களாக இருந்து, சுவர்க்கத்தின் தேவா
மிர்தங்களைக் கொண்டு வந்து கொடுக்கும். அவ்விதம் கொடுக்கின்ற
அமுதங்கள் துன்யாவில் மனக்கசடுள்ளவர்களுக்கு ஜீரண சக்தி
யாகாது என்றும் இவ்வித நீதியுடன் ஒப்புக் கொள்வது ஏழாம்
அறிவாகும்.
எ-று.

என்றுந் தொழுகையிலறிவு நேர மிணையமவுத்துக்கங்கதாயில்
லாதார், சென்று மலக்கலின் மவுத்தைச் சேருஞ் செய்யுமுஅநா
கரவுதேட்கா, மொண்டவுனுகீரு மீக்காயீற்காம் ஜிபுரீல்க்கின்னு
அன்ஸல்னுவுமாம், நன்ரும் வாங்கிசு ரூபீற்காகுநவினுங்காமத்துக்
கொடிநிழற்கே. (25)

(இ-ள்):— எந்த நாளும் தொழுகைக்குரிய நேரங்களை எதிர்
பார்த் திருக்கின்றதாவது, மவுத்துடைய தருணத்தில் அதாபு
என்கிற வேதனை ஒன்றுஞ் செய்ய விடாமல் தடுத்து அப்பால்
மலக்கல்மௌத்து என்னும் எமனைச்சேரும். உளுச்செய்த நீரானது
நரகத்தின் பாம்பு, தேள் முதலிய கொடிய விஷ ஜந்துக்களின்
வேதனைகளைத் தட்டிக் கொண்டு மீக்காயில் என்னும் தண்ணீர்
அதிகாரியைச் சேரும். இன்னு அன்ஸல்னு என்னும் சூறத்தானது
ஜிபுரீல் இடம் போய்ச் சேர்ந்து கொள்ளும். பாங்கு சத்தமானது
இசுருபில் மலக்கிடம் சேர்ந்து கொள்ளும். காமத்துச் சொல்வது
லிவாவுல்ஹம்து என்கிற கொடி நிழலில் கொண்டு போய்ச்
சேர்க்கும்.
எ-று.

கருபா தனைச்சேருங் கிபுலாகிலை கத்தன் மகுமூறு தக்பீர்
துஆ, எகின் முந்தகா மூன்றுந் தோன்று மேக னிலைசேருங் கிருஅத்
தோதல் தவுபா லெவ்குக்கா முங்கர் நக்கிர் தம்மைச் சேருமாம்

றுக்கூஉ செய்தல், சகவாச வான சஜதாச் செய்தல் தக்க பிதா ஆதந்தம்மைச் சேரும். (26)

(இ-ள்):— கிபுலாவை முன்னோக்குதல் கஅபாவைச் சேரும். தக்பீர் கட்டுவது பைத்துல்மாஉமூர்ப்பள்ளியைச் சேரும். துஆ ஓதுவது எகின் மரத்தையும், சிதுறத்துல் முன்தஹாமரத்தையும் சேரும், கிருஅத்து வோதுதல் ஏகநிலையாகிய அறுஷைச் சேரும், தஸ்பாச் செய்தல் லௌஹைச் சேரும், றுக்கூஉ செய்தல் முன்கர் நக்கீரின் கேள்விக்கு ஜவாபு கொடுக்கச் செய்யும், ஸுஜூது நமது ஆதிபிதாவாகிய ஆதம் அலைஹிஸ்ஸலாத்தைச் சேரும். எ-று.

சேருஞ் சமதான பின்னிருப்புச் சிறந்த குறுசந்தகிய்யாத்துவுங், கூறுங் காத்தபீன் கிருமனுக்குக் குணமா யிணைந்திடும் சலா மிரண்டும், மாறுந் தஸ்பாவும் கலத்துக்காகும் ஆமீன் கணக்கில்லா விண்ணோர்க்கென்று, மேரும் வலக்கையிற் றசுபீதொட்டா லிபுலீ சணுகாத குறடாகுமே. (27)

(இ-ள்):— பூரணமாக சேருகின்ற கடைசியான இருப்பும், அதில் ஓதுகின்ற அத்தஹிய்யாத்தும் கிருமன், காத்திபீன் என்ற இரண்டு மலக்குகளையும் சேரும், ஸலாங் கொடுக்குதலும், தௌபாச் செய்தலும் லௌகை எழுதுகின்ற கலத்தைச் சேர்ந்து விடும், அப்பால் ஆமீன் சொல்லுகிறது, கணக்கிலடங்காத வானவர்களுக்காக ஆகிவிடும். வலக்கையில் தொட்டு உருட்டி ஓதுகின்ற தஸ்பீஹாகிறது, இபுலீஸை அணுகவொட்டாமல் ஓட்டுகிற குறடாவாக ஆகிவிடும். எ-று.

ஆகும் சலவாத்து மகுஷர் தனிலங்கம் தளம்பாத பெலத்துக் காகு, நாவாலுரைத்திட்ட பாத்திஹாவு நமது குலத்தார்களிறந்த வர்க்காம், பூவில் மாலைபோ னபிபிறசூல் புயத்திற்றரித்திடுஞ் சுன்னத் தெல்லா மேவும் செம்பிலி குருபான் செய்ய வினையு மிசுமாயீல் நபிக்குத்தானே. (28)

(இ-ள்):— அப்பால் ஸலவாத்து வோதுதல் மஹ்ஷர் நாளையில் திரேகம் வாடாதபடி பொறுத்து நிற்கிறதற்காக வேண்டிய பலமாக வந்துசேரும். அப்பால் ஓதும்படியான பாத்திஹா வானது நமது வங்கிஷத்தார்க்குப் போய்ச் சேரும். அப்பால் தொழும் சுன்னத்துத் தொழுகையானது நமது நபிநாயகம் அவர்கள் புயத்தின் பூமாலைபோல் போய்ச் சேர்ந்துவிடும். ஹஜ்ஜுப் பெருநாளையில்

கொடுக்கும் செம்பறிக் கிடாவின் குர்பானியானது நபி இஸ்மாயீல் அவர்களுக்குப் போய்ச் சேரும். எ-று.

தானம் பகர்குரு ஞேதிவிக்கத்தனிமைக் கபுறினில் வெளிச்சமாகு, மேணி தனிலேறிக் கொடுப்பதெல்லா மிணையும் வழிக்காவற்காரர்க்காகும், பூஹறும் ஸிபாறத்து நசறுதோஷப் பொன்னூர் வழிகாணப் பொருளுமாகும், ஈனமணுகாத வுலகத்தோர்க்கு விளம்பினே னெட்டா மறிவிதாமே. (29)

(இ-ள்):— காபில்களுக்கு திரவியங் கொடுத்து குருஆன் ஓதி பக்ஷ்செய்யச் செய்தல் கபுறுக்கு விளக்காகவரும். றமலான் மாதத்தில் ஸக்காத்து கொடுக்குதல், சுவர்க்கம் போகிற வரைக்கும் இடையில் வருகின்ற மன்ஜில்களுக்கு வழித்துணையாளராக வரும். மையத்தை அடக்கி மூன்றும் ஜியாறத்து முதலானது செய்தல், அதற்காக சோறு ரொட்டிகள் கொடுக்கிறது எல்லாம் சொர்க்க லோகத்தின் பாதையைக் காட்டுகிற தூதர்களாக இருக்கும், என்று இவ்விதம் மனதில் உறுதி கொள்ளுகிறதுதான், எட்டாம் அறிவாக இருக்கும். எ-று.

ஆன முதல்கணுற் பதிலேயொன்றை யளிக்கவெளியோர்கட்கிது ஸக்காத்து, வானந் திராசுக்காம் நன்மையேட்டை வாங்கி வலக்கரத் தீயப்போதும், பூனம் மினத்தோருக் கிவதெல்லாம் பொறியின் மாலிக்கு கோபமாறத், தானே யுலகத்தை யிழந்தோர்க்கியந் தருத்திணிறைமுன்னே சேருமதே. (30)

(இ-ள்):— ஸக்காத்து என்பது நம்மிடம் இருக்கின்ற திரவியங்களில் நாற்பது ரூபாய்க்கு ஒரு ரூபாய் வீதமெடுத்து தர்மம் செய்வது அது மூன்று வகையாகும். வாரிஸ் இல்லாதவர்களுக்கும் மற்ற எளியவர்களுக்கும் கொடுப்பதாவது கியாம நாளைாால், மீஸான் தராஸானது நன்மையை முருகவைக்கும், தன் குடும்ப ஜனங்களுக்குக் கொடுக்கிறதாவது, நாகத்தில் உள்ள மாலிக்கென்னும் செவிட்டு மலக்கின் கோபத்தைத் தணியச் செய்யும். உலகத்தின் சுகங்களை விட்டும் ஒதுங்கி யிருக்கும் தவசிகளுக்குக் கொடுப்பதாவது அல்லா உடைய திரு சமுகத்தில் கொண்டு போய்ச் சேர்க்கும். எ-று.

சேர்ந்த வினமெல்லா மெளியோர்க்கியச் செம்பொற்பதி செரும் வேளைதனிர், காந்திக் கிதுமீருங் கடிநாய்க்கிது கத்தாவழிதனைக்

காட்டி வைக்கும், வாழ்ந்த சுவர்க்கத்தி லிருப்பாரென்று வள்ளல் முஹம்மது நபிதாஞ் சொன்னார், மாந்த ரறியவே தமிழினாலே மகிழ்ந்திங் குரைத்திட்டே னறிவொன்பதே. (31)

(இ-ள்):— எப்படியும் எளியவர்களுக்கு ஸக்காத்து கொடுக்கும்போது சில பகில்களைப்போல கடிநாய்கள் போல் கோபித்து விழாமல் முகமலர்ந்த குணத்தோடும் கொடுப்பார்களானால் பொதுவாக அதாவது அவர்களை சொர்க்கத்தில் கொண்டு போய்ச் சேர்த்து விடும், என்று நபி நாயகம் அவர்கள் திருவாய் மலர்ந்து சொல்லி னார்கள் என்றும் உறுதி கொள்வது ஒன்பதாம் அறிவாக இருக்கும். எ-று.

ஒன்பதா மிஃதொருபஃது முடையோன் பறுலுக்காய் நோன்பு வைக்க, வின்பமுடன் கோபம் ஹறாம் பகீலு மெவர்க்கு முதாசன முரைத்திடாம லன்பின் கயல்விழி ஹூறுல்ஈனை யனையுஞ் சுகமொன்று மறியமாட்டா, ரின்ப நோன்பில்லா வுலகத்தோர்கட் கேழையான் கூற வின்னங்கேளீர். (32)

(இ-ள்):— றமலான் மாதத்தில் முப்பது நாளும் நோன்பைப் பறுலாகப் பிடித்திருந்து, பொய் பேசாமலும், ஹறாம் செய்யா மலும், பெருமை பேசாமலும், கோபம் வரவொட்டாமலும், பகீல் தனம் செய்யாமலும், யாருடைய புறணிகளையும் கழுவிக் குடிக்கா மலும் இருக்க வேணும். இவ்விதம் நடக்கத்தவறினால் சுவர்க் கத்தில் ஹூறுல்ஈன்களைப் போகம் செய்ய சக்தியற்றவர் களாக இருப்பார்கள் என்றறிவது தான் பத்தாம் அறிவு ஆக இருக்கும். எ-று.

இன்னம் றமலானி லோரிரவி லிறையோன் லைலத்துல்கதிரி யாகுந், தன்னில் வணக்கந்தான் மகுஷர்தனிற்றுபங்களை யோட்டும் வருத்தமாற்றுஞ் சொன்ன வகையறி பத்துமிதே சுகமாம் அறபாவில் ஹச்சு செய்யப், பொன்னூர் பகையான நரகந்தனைப் பொங்கா தடக்கிடும் அரவுந்தேளும், (33)

(இ-ள்):— இன்னும் றமலான் மாதத்தில் ஒரு இரவில் லைலத்துல் கதறி யென்கிற தேவ கொண்டாட்டங்கள் உலகத்தில் தோன்றும். அந்த இரவில் வணக்கஞ் செய்தால் அது மஹ்ஷரில் வருகின்ற பெருந்தாக முதலான எல்லா வருத்தங்களையும் போக்

கடிக்கும். மக்காவில் போய் ஹஜ்ஜு செய்தல் நரகத்தை பொங்க விடாமல் அடக்கி அங்குள்ள கொடிய விஷ ஜந்துக்களைத் தீண்ட விடாமல் மாற்றிவிடும். எ-று.

தேனு மரவுமே நீண்டா நின்னந் தினோர் குபகாரஞ் செய்வ தெல்லாம், வாளிற் கூர்மையாம் பாலவழி வானினிடங்காணும் வெளிதொலையு, மூழி துளபதி னென்றுஞ் சொன்னே னுரைக்கும் பனிரண்டா மறிவைக்கேளு, மானுந் தகப்பன்றாய் தனைவணங்க வாதி பெரியோனைச் சேருமென்றே. (34)

(இ-ள்):— இன்னும் நீனுளவர்களுக்கும் ஒரு உபகாரஞ் செய் தல் சிருத்துல் முஸ்தகீம் பாலத்தின் பெருந்தொலையான வழிகளைச் சுருங்கச் செய்யும் என்று இவ்விதம் உறுதிப்படுத்துவது தான் பதி னென்றாம் அறிவாக இருக்கும். இனி பனிரண்டாம் அறிவைச் சொல்கிறேன் கேளுங்கள் அதாவது நம்முடைய அருமையான தாய் தகப்பன்மார்களுக்குப் பணிவிடை செய்து அவர்களை வணங்குவ தானது தான். அது தான் அல்லாவுடைய திருச் சமுகத்தில் போய்ச் சேரும் என்று உறுதிப்படுத்துவது தான் பனிரண்டாம் அறிவாக இருக்கும். எ-று.

சேரு மிறையோனைத் தகப்பன்றயை சினந்தி டாமனஞ் செய்யுஞ் செய, லாரு மிசுலாத்தி னடையாளம்பத் தறிவு பனிரண் டாயருளினது, கூறும் திருநெறிப்படலநாலிற் கோர்க்கும் பனிரண் டாந்தொகுதிதனி, லாறு பனிரண்டு பதினுலினு மறையும் பதினைந் தில் வழியாச் சொன்னேன். (35)

(இ-ள்):— தாய் தகப்பன்மார்கள் வணக்கந்தான் எல்லா அறி வுக்கு மேலானது, என்றதோடும் பனிரண்டு அறிவுகளும் சுருக்க மாய்ச் சொன்னேன். இதன் விபரங்களை நான் செய்திருக்கின்ற திருநெறி நீதி யென்ற நூலில் சொல்லி இருக்கிறேன். எப்படியானுல் நாலு படலத்திலும், பனிரண்டு தொகுதிகளாக 6-வது கவியிலும், அதிலிருந்து பனிரண்டாம் கவியிலும், பதினுலு பதினைந்தாவது கவியிலும் நல்ல வழி முறையாகச் சொல்லி யிருக்கிறேன். எ-று.

சொன்னேன் றிருநெறி நீதந்தனிற் சோக மனுகாத படலம் ரண்டி, லின்னம் பதின்மூன்றுந் திட்டந்தனி லியம்பினேன் காணி

யாகுவாறு, மன்ன வறிவார்க ளோம்பத்தொன்றி லறைந்த பதிஞ லாங்திட்டந்தனி, லுன்னிடுமிமாம்கத்திபுதம் முண்மைதான் பத் தொன்பது முறைத்தேன். (36)

(இ-ள்):— இன்னும் என்னுடைய திருநெறி நீதம் என்கிற நூலில் இந்த விபரங்களை விரித்து இரண்டு படலங்களிலும், பதி மூன்ருவது திட்டத்திலும். பதினன்காவது திட்டத்திலும், ஐம்பத் தொரு ஞான விஷயங்கள் சொல்லி இருக்கிறேன். அது உலகத்தில் எவராலும் சொல்லப்படாதது. பதினலாங் திட்டத்தில் கதீபு லெப்பைமார்கள் நடக்க வேண்டிய பத்தொன்பது அறிவிகளையும் சொல்லி விட்டேன். எ-று.

உரைக்கும் பதினலாங் திட்டந்தனிலோதினேன்தீன ருயர்த்தி யெல்லாங், திறத்தி னுற்பத்தெட்டறிவுமாகுந் தீனேரிருநூற்றைம் பதுமறியத், திறத்தின் வகையான திருநெறியைத் தெளிவாய்ப் படல நால் முழுதறிய, வுரைத்த படியே தான் தீனேரெல்லா முலகினடப்பது பொருட்பாலிதே. (37)

(இ-ள்):— இன்னும் அந்தப் பதினலாவது திட்டத்தில் தீனுனவர்களுக்கிருக்கின்ற தறஜாக்களை யெல்லாம் விடுவித்துச் சொல்லிப் போட்டேன். இன்னும் அதிலுண்டான நான்கு படலத்திலும் உலகத்தி லுண்டான நாற்பத்தெட்டு அறிவுகளையும், இருநூற்றைம்பது விஷய சூசிகையாகக் காட்டி விட்டேன். யாராவது ஒரு தீனுனவன் அந்த நாலு படலத்தையும் உணர்ந்து விடுவானுனல் அவனுக்கு உண்மையாகப் பொருட்பாலானது நிரப்பமாயிற்று என்று எண்ணலாம். எ-று.

பொருட்பால்-முற்றிற்று.

---

ஆக-திருப்பாடல் 37.

# இரண்டாவது—அருட்பால்.

இது தான் அருட்பாலென் றறிவதாகு மின்னந்தவ முறை யெளிதாய்ச் சொல்வே, னிதமுந் தொழுகவே வலுமையில்லாநினைவில் வணக்கந்தானிலே நிறுத்த, மதினு முஹம்மதை நாயன்றனை மகிழ்ந்து புகழவும் வம்பகற்றி, நிதமுந் தகப்பன்ருய் தலை வணங்க நிகரிலாப் பலனதிகந்தானே. (38)

*(இ-ள்):—* சகோதரர்களே! இப்போது நான் சொல்லப் போகிறதுதான் அருட்பால் என்றறிந்து கொள்ளுங்கள். அதாவது:— மஅரிபாவின் படி நடந்து வணங்க ஏலாதவர்கள் தங்களுடைய மனதில் றஹ்மானையும், நபி நாயகம் அவர்களையும் உருக்கத்துடன் வைத்து தியானித்து உலகத்திலுள்ள ஒரு கசடான செயலிலும் மனதை விடாமல் இருந்து தகப்பனையும், தாயையும் வணங்கிக் கொண்டு வந்தால் அதுவே பெரிய நன்மையாக இருக்கும். எ-று.

தானே கஃபாவில் ஹச்சு செய்யார் தலத்தில் வெள்ளி நாட்ப கற்றொழுக, வான பீசபீல் வெட்ட மாட்டா ரறிவுபடித்துத் தான் கொடுக்கப் போதும், வானோ னறுஷோடு கஃபாத்தனை வையமனு வோர்கள் செய்ய வென்றால், வானோன் வணக்கத்தை யுலகத்தோர்க்கு வகுத்தி யினக்கியே திருத்தி வைக்க. (39)

*(இ-ள்):—*மக்காவில் உள்ள கஃபாவிற் போய் ஹஜ்ஜு செய்யத் திராணியற்றவர்கள், தங்கள் ஊரில் உள்ள பள்ளிகளில் ஜும்ஆ தொழுதால் போதுமானது. தீனுக்காக வேண்டி வாளை யெடுத்து காபிரீன்களுடன் அடர்ந்து பீஸபீல் செய்யத் திராணி யில்லா தவர்கள், நாலு சிறு பிள்ளைகளுக்குக் குர்ஆனை யோதிக் கொடுத் தால் போதுமானது. இது ஆனது கஃபாவையும், அறுஷினடியையும் தவாபு செய்வதைப் பார்க்கிலும் மேலானது. எ-று.

வையம் பலநோன்பு பிடிக்க மாட்டார் வாய்வம்பளக்காமல் இருக்கப் போது, மெய்யாகிய ஆலிமாக மாட்டா ரெவர்க்கு முகப் பத்தா யிருக்கப்போதுங், கையால் கைறோடு ஸக்காத்தீய்யார் ஹறுமா முடைமையை விலக்கப்போது, மையம் பல தருமங்கள் செய்யா ராதாயமின்றிக் கொடுத்துவாழே. (40)

*(இ-ள்):—*றமலான் மாதத்தில் முப்பது நாளும் நோன்பு பிடிக்க இயலாதவர்கள், வாயால் பொய் பொல்லாங்கு சொல்லாமல் இருப்பது போதுமானது. இல்மைப் படித்து ஆலிமாக ஏலாதவர்கள் மனிதர்களுடன் அன்பாக இருந்தால் போதுமானது, தமது கையால் பணப்பையை அவிழ்த்து, ஸக்காத்துகொடுக்க மனமில்லாத கருமிகள், ஒருவருடைய சொத்தை அபகரிக்காமல் இருந்தால் போதுமானது. ஏழை எளியவர்களுக்கு தான தர்மங்கள் செய்யாத லோபிப் பயல்கள் வட்டி யில்லாமல் கொடுக்கல் வாங்கல் செய்தால் போதுமானது. எ-று.

வாழ வுபகாரஞ் செய்ய மாட்டார் வாழ்வோர்க்கிடர் செய்யா திருக்கப்போது, நாளெல்லாங்குரு ஞேதமாட்டார் நாலுதிரசிதம் குல்கூவோது, வாழுமிர வெல்லாந் தொழுக மாட்டார் வடிவு ஹறுங் கண்டால் விழியை மூடே, வாழு மிறை தீதார் காணமாட்ட ராகாச செயல் வாரா திருக்கப்போதும், (41)

(இ-ள்):— ஒருவன் பிழைக்கும் பொருட்டு உபகாரமான சகாயஞ்செய்யாத கெடும்பர்கள், அவன் பிழைக்கும் போது அந்தப் பிழைப்புக்கு யாதொரு இடர்களும் செய்யாமல் இருந்தால் போது மானது. குர்ஆன் முப்பது அத்தியாயங்களையும் ஓதித்தமாம் செய்ய திராணி யில்லாதவர்கள், குல்ஹுவல்லாஹு வஅஹது என்கிற சூறுவை ஒரு நாள் ஒன்றுக்கு நான்கு தடவை சொன்னால் போது மானது. இராக்காலங்களில் கண் விழித்திருந்து ஆண்டவனை வணக்கஞ் செய்யாதவர்கள், ஹறுமான பார்வைகளை விட்டும் கண்ணை மூடிக் கொண்டால் போதுமானது. தவ்ஹீதான ஞானத்தை உணர்ந்து தன்னிலே யளவிற்றரிபட்டு தன் றப்பைத் தெரிசியாத ஈன ஜனங்கள், உலகத்தில், ஒரு பாவதோஷமும் செய்யாமல் இருந்தால் போதுமானது, எ-று.

மார்க்கமறிவுகள் படித்தறியார் மனதிற் கசடில்லா திருக்கப் போது, மூக்க முடைமானங் கொடுக்க மாட்டா ருதாசினஞ் சொல்லா திருக்கப்போது, மார்க்க மதிலொன்று மறிய மாட்டார் மையித் தொரு நேரங் குளுப்பாட்டவு, மார்க்குங்கிடையாதே யின்ன மொன்றிங் கல்லா பொருளைத் தான் கொள்ளையிட, (42)

(இ-ள்) :—இன்னும், வேத சாஸ்திரங்களைக் கற்று அதன்படி நடக்க மனமில்லாத ஈன ஜனங்கள், மனதில் கெட்ட எண்ணங்களை விட்டும் சாதாசீதாவாக இருந்தால் போதுமானது. இல்லாத ஏழை களுக்கு உடுமானங்கள் கொடுக்க மாட்டாத லோபிகள், யாருடைய புறணிகளையுஞ் சொல்லாமல் இருந்தால் போதுமானது. ஷரீஅத்தின் விதிவிலக்குகள் கண்டு நடக்காத மூடர்களா யுள்ளவர்கள் மையித்துகளை ஒரு போது குளுப்பாட்டினல் போதுமானது. எப்பேர்ப்பட்ட நாதாக்களுக்குங் கிடைக்க அரிதாகிய ஒரு வணக்கம் இருக்கிறது. அது தவாபுகளைக் கொள்ளை யடிக்கிறதாக இருக்கும். அதாவது கீழே சொல்கிறேன். எ-று.

கொள்ளேக் குமியலா மல்லாபொருள் கொடிய பாவிக்குக் தவத் தோர்க்குந்தா, னுள்ள வயதெலாம் ஹச்சுப்பல னொருநாட் கொரு கோடி ஹச்சுப்பல, னௌ்ளு மலேபோலே யெண்ணரிதே யெக்காலமு முள்ள முழுகுந்திரும், பள்ளி தனில்ஸஞசாகிடத்திப் பந்தியாய் நின்று தொழுதபேர்க்கே. (43)

(இ-ள்):— இப்போது சொல்கிறதாவது அல்லாவுடைய ஐஸ்வரியங்களேக் குமியல் குமியலாக வைத்துக் கொள்ளே யிட்ட தற்குச் சமானமாக இருக்கும். இன்னும் தீராத பாவிகளுக்கும், நாதாக்களுக்கும் சரிசரியாக கோடி ஹஜ்ஜு செய்த பலனேக் கொடுக்கும். இன்னும் அதனுல் கிடைக்கும் நன்மைகளானவை உலகத்திலுள்ள மணல்களே பார்க்கிலும் கணக்கிலுயர்ந்தது. அந்த காலமுந்தீராத முழுக்கான தொடக்குகளுந் தீர்ந்து விடும். அது என்ன வென்ருல் பள்ளி வாசலில் வருகிற மையித்துக்களேத் தொழுவிக்கும் கூட்டத்துடன் கூடி நின்று தொழுகிறதாக இருக்கும். எ-று.

தொழுதோ ரெடுத்தவர் துயில் கொடுத்தோர் தோளுந் தலே மேலுஞ் சுமர்ந்தோர்க்குந்தான், முழுதுநீர் விட்டு முழுக்காட்டினேர் முன்னுலேயிமா மாகநின்ருே, ரழுதோரை வேண்டா மெனவே சொன்னுே ராழக்குழிகல்லி யடக்கி வைத்தோ, ரெழுதமுடியாதே யிவர்கள் பல னீமாமுக்குப் பலன் பத்தாகுமே. (44)

(இ-ள்):— அவ்விதம் வரக் கூடிய மையித்தைக் கூட்டஞ் சேர்த்து தொழுதவர்கள், தொழாமல் நிற்கின்ற ஏமாளி ஜனங்களே தொழ வாருங்கள் என்றழைத்தவர்கள், சந்துக்கை விட்டும் தூக்கிக் கொண்டு வந்தவர்கள், அநாதியான மையித்துகளுக்குக் கபன் வஸ்திரங்கள் கொடுத்துதவின சீதேவித் தனமுள்ளவர்கள், கஷ்டத்தைப் பாராமல் தூக்கித் தோள் மேலும், தலே மேலும் சுமர்ந்தவர்கள், கையால் நீரை மொண்டு மொண்டு குளிப்பாட்டின வர்கள், கூட்டங்களுக்கு முன்னுல் இமாமாக நின்று தொழுவித்த வர்கள், கண்ணீர் விட்டு அழுகின்ற மையித்தின் சொந்தக்காரர் களுக்குத் தேறுதல் சொல்லி அமர்த்தினவர்கள், சட்டம் போல் கபுறுக் குழி வெட்டினவர்கள் முதலான இந்த சகோதரர்களுக்குக் கிடைக்கும் நன்மையின் பெருக்கத்தை மலக்குகளும் எழுதச் சடைவார்கள். ஆனுல் மையித்தை தொழுவிக்கும் இமாமான

வர்க்குப் பத்துக்காரியம் விதியாக இருக்கும். அவைகளைப் பின் வருமாறு சொல்கிறேன். எ-று.

அருட்பால் முற்றிற்று

---

# இமாமுடைய நிலை.

பத்துக் காரிய மில்லாதவர் பகரிமாம்செய்யப் பாவியாவார் நித்தம் ஷஹரிலே முழிக்கவேண்டு நேரந் தவறுமற் றொழுக வேண்டு மர்த்தம் பொருளெல்லா மறியவேண்டு மடுத்த சுன்னத்தை விட வொண்ணுதா, முத்து வுடுமானமூண் ஹலாலா பொழுகும் பணிரண்டு நிலை பொருந்திக் கத்த னறிவுடன் ஹலாலைப் பார்த்துக் கடுத்த முழுக்காளியாக வேண்டும். (45)

(இ-ள்):— கீழே சொல்கிற பத்துக்காரியமும் இல்லாமல் இமாமத்து செய்கிறவர்கள், யாராயிருந்தாலும் சரியே, பாவியாகிப் போவார்கள். அந்தப் பத்துக்காரியங்களாவன பிரதி தினமும் ஸஹர்நேரத்தில் கண்விழிக்கிறதும், ஒரு வேளையாவது கலாவில்லாமல் தொழுகிறதும், குர்ஆனைக் கிருஅத்துடன் வோதுகிறதும், அதன் அர்த்தங்களை விளங்கியிருக்கிறதும்; பிக்ஹுடைய இல்மில் தேர்ச்சியடைந் திருக்கிறதும், சுன்னத்து தொழுகைகளைத் தவறுமல் தொழுகிறதும், வஸ்திரங்கள் ஓஜீபனங்கள் ஹலாலாக்கிக் கொள்கிறதும் சொந்த ஹலாலான பெண்களுடன் ஜிமாஉ செய்கிறதும், எந்தநேரமும் துப்புறவாக இருக்கிறதுமாக இருக்கும். எ-று.

ஆக வீரைந்தா மமல்பொருந்தியஞ்சி யிமாமஞ்சி கிபுலாவுடன் வாகின் மிகுறுபு மைந்தரிய வளமாம் பதினைந்து மிமாமுநிலை, பாகுஞ் சரீரமுமுயிரும்புத்தி பகுமு நினைவைந்தும் பாயிரமாம், வாகின் கிபுலாவின் கருபாவினேர் பைத்துல் மகுமுறு குறுஷுசாம். (46)

(இ-ள்):— இப்படியான பத்து அமல்களும் பொருந்தி யிருப்பதுடன், பாவமான செயல் செய்ய இரொம்பவும் மனதில் அச்சமுள்ளவராகவும், இமாமில் ஐந்தும் கிபுலாவில் ஐந்தும் மிகுறுபில் ஐந்தும், நல்லசரீரம் கூர்மையான அக்கில் நல்ல ஞானமும், வியாபக சக்தியும் இருப்பதுடன் பைத்துல்மஉமூர் அறுஷு குர்சு

முதலான கிபுலாக்களேயும் கூடிய வரையிலுந் தெரிந்திருக்க வேணும். எ-று.

ஆருநினேவந்து கிபுலாநிலே யைந்து மிருருபும மலேந்தாமே
யேக இசுலாமு மூமினுமா மில்மு பொருந்திய விஃதைந்தாகும்
மாகு மூமின்க ளறிவுமைந்தும் பாஸிக் கானவர் செயலுமைந்தா
மாகிச்செயல் தள்ளி மூமின்செய லேந்து மறிந்தவர் மூமினுகும். ()

(இ-ள்):— நினேவுகளில் கிபுலா மிஹ்ருபுகளேப்பற்றிய அமல்கள் ஐந்து காரியங்களேயும் ஞாபகம் வைக்கவேண்டும். இஸ்லாமாக இருப்பதுடன், முஉமீன் இல்மு முதலான ஐந்து காரியங்களும் பொருந்தி யிருக்கவேண்டும். இன்னும் மூமீன்களுடைய செயல்கள் ஐந்தையும், பாசிக்கானவர்களின் செயல்கள் ஐந்தையும் அறிந்திருக்க வேண்டும். அவைகளில் பாசிக்கீன்கள் உடைய செயல்களே விலக்கி விட்டு, மூஉமீன்களுடைய செயல்களே எடுத்து நடக்கவேண்டும். அப்படிச் செய்கின்ற இமாமே மூமினனவர். எ-று.

இமாமுடைய நிலே முற்றிற்று.

---

## பாசிக்கானவர் செயல்

ஆகுமுலகெல்லா மலேந்தலேந்தே யந்தி தனில்மனே யுகந்தபாவி
தாக முலகெல்லா மலேந்திட்டாலுந் தனிமை கபுர்நிலே மூமினுக்கே
யாருந் துனியாவை யுவந்தபாவி யாகிர் நிலேநின்ரோர் தாங்கள் மூமி
னுகும் ஹயாத்தையே யுவந்தமூமி னவனே யுவந்தவர் மூமினுமே ()

(இ-ள்):— ஊர் உலகமெல்லாஞ் சுற்றிவிட்டு, அந்திபட்டால் வீட்டுக்கு வந்து ஒரு வணக்கமும் செய்யாமல் அல்லாவுடைய யாது இல்லாமல் இருப்பார்கள். இவர்கள் ஆயுசெல்லாம் அலேந்த போதைக்கும் கடைசியில் கபுரில் வெளிச்ச முள்ளவர்கள் மூமினவர்கள் தான். பாசிக்கீன்களோ! துனியாவையே உகந்திருப்பார்கள். மூமின்களோ! ஆகிரத்தையே உகந்திருப்பார்கள். பாசிக்கீன்கள் தன் சரீரத்தையும், உயிரையும் உகந்திருப்பார்கள். மூமின்கள் அல்லாவைத்தான் உகந்திருப்பார்கள். எ-று.

மூமீன் றனமெல்லா மழித்துவைக்கு முடுமைப் பாவத்தையு
வந்தபாவி சீமான் றனஞ்செயு நன்மைதனேச் சிந்தைதனில் வைக்கு
மூமினென, ஈமா னிலேயுள்ள மூமீனென்று மிவரே யிமாமத்துக்கு

கையமென்று, மாமீனார்மக ளுலகபி யண்ணல் முஹம்மது நபி யுரைத்தார். (49)

(இ-ள்):— இன்னும் மூமீன்களுடைய அமல்களான செல்வத்தை அழித்துவிடக்கூடிய பாவமாகிய வறுமையைச் சுமந்து திரிவார்கள் பாசிக்கின்கள். மூமீன்களோ! எல்லா சீமான்தனமும் அல்லாவை யுகப்பு வைக்கிறதுதான் என்று ஒரு முயற்சியையுந் தேடமாட்டார்கள். இப்படி யிருந்தால்தான் இமாமத்துச் செய்கிறதற்கு லாயக்காவார்கள் என்று உலகமாதாவாகிய ஆமினா அம்மா அவர்களின் திருப்பாலராகிய நமது நபிகள் பெருமானார் அவர்கள் அருளிச் செய்தார்கள். எ-று.

வேறு

நபியா முஹம்மது மார்க்கமெல்லா நமக்கு நடக்கின்ற விதங்களெல்லா, நபியா முஹம்மதுக் கிறையோன் சொன்னதை இமாமத் நபிசொற்படி, கவியின் பலஞானத் தவநிலையுங் கருத்தின் ஷரீஅத்தின் வகையுளதும், புவியின் மனுவெல்லாம் நடக்கும்வகை புகன்றாரதைப் பொருட்பாலிற் சொன்னேன். (50)

(இ-ள்):— இந்த சபபான கருமங்களை அல்லாஹுத் தஆலா நமது நபியவர்களுக்கு அருளிச் செய்தான். அதையவர்கள் தங்கள் அஸ்ஹாபுகளுக்குக் கட்டளை செய்தார்கள். அவைகளைத் திரட்டி மதுஹபுடைய இமாம்கள் தங்கள் கிதாபுகளில் கோர்வை செய்தார்கள். அதைப் பார்த்துத்தான் நானும் இந்த மஅரிபத்து மாலையில் பொருட்பாலில் விபரமாகச் சொல்கிறேன். எ-று.

பொருளின் பாலிலே யறியச்சொன்னேன் புல்லுமருட்பாலின் பொருளுரைப்ப, னிருளை விலக்கிய கலிமாத்தனி லியம்புமிருபத்து நாலெழுத்து, மருளச்சறகு நான்கறிவதுவு மாதிபெரியோனை யறிவதுவும், பொருளின் புகழ்ச்சியின் புதுமையெல்லாம் பிரித்து விபரமாய் விளம்பலுற்றேன். (51)

(இ-ள்):— பொருட்பாலில் காட்டிய விபரத்தை அருட்பாலிலும் சொல்லிவிட்டேன். அதாவது கலிமாவில் இருபத்து நாலெழுத்திலும் தன்னையறிவதும், தன்றப்பையறிவதும் இதுதான் அதன் பொருளென்று திட்டமாக அறிந்து கொள்ளுங்கள். எ-று.

விளம்பக் கேளுங்கா ளுலகத்தாரே வேத பெரியவன் றனி யோனுமாக், தழும்பில்லாகபி தாபரமாக்தக்க கலிமாவு முயிர்நிலையாங், கழிம்பில்லாததோர் கலிமாவுந்தான் கதவு கமலத்துத் திறவுகோலா, மெழும்புஞ் சுழற்சுற்றை யறியாற் குபிரிலங்குந் திறவுகோ லெழுத் தானதால். (52)

(இ-ள்):—இன்னும் சொல்கிறேன் கேளுங்கள் உலகத்தார்களே! அல்லாஹுத்தஆலா என்பவன் நம்மில் தனித்ததோர் மறை பொருளாக நிற்கிறான். முஹம்மதாகிறது நம்மில் பிரதான றூஹாக நிற்கின்றது. ஹுவென்னும் திக்றானது உயிருக்கு அஸ்திவாரமாக நிற்கின்றது. கலிமாவோ! நமது இருதயமானது திறப்பதற்குத் திறவுகோலாக இருக்கின்றது. இந்த சூட்சாதி சூட்சங்களை யறியாத மனிதர்களெல்லாம் திட்டமாக காபீர்களாக இருக்கும். எ-று.

ஆனபடியாலே யறியாரெல்லாமறுந்த பாவியாயழிவார் திண்ண, மீன மணுகாத நாயன்றானுமெல்லாப் படைப்புக்கு முன்னாகினான், றானேதானவ னுடலுயிராய் தாத்தில் அனைத்துமே நிறைந்த நாயன், வானத்துயர்ந்தவ னொருவனாக வையமனைத்துமே சமதாயினான். (53)

(இ-ள்):— ஆனபடியால், இந்த இல்முகளைப்படித்து அறிய வேண்டியது ஒவ்வொருத்தருக்கும் முக்கிய கடமையாக இருக்க தவரவிட்டார்கள். எல்லாம் கடைசியில் கைசேதவாளராக இருக்கும். அல்லாவின்மேல் பொருப்பு வைக்கிறது நல்ல கூர்மையுள்ள புத்திமான்களின் நம்பிக்கையில்லை, ஏனென்றால் அதானது உலகத்திலுள்ள நல்லது பொல்லாதது எல்லா ஜீவராசிகளிடத்திலும் பூதங்கள் வாயிலும் நிரம்பிய சமதானதாக இருக்கிறது. உனக்கு கூலிவேண்டுமானால் நீ பிரயாசை யெடுத்துக்கொள் அப்பால் பலாபலன் பெருவாய். எ-று.

சமதாய் நிறைந்தானென் றெவருஞ்சொல்வார் சமது நிலையதின் விதமறியா, ரிதமாமிருவிழியொளியதாகு மின்னமிருள்காற்று நிரம்பிநின்ற, நிதமுங் குதறத்தைப் பொருந்திப்பார்த்தானிற்கும் உலகெல்லா நிறைந்தசோதி, பதியினிலை யெல்லாங் கலிமாவினாற் பாங்காய்ப் பலமொழி யொருமொழியாம். (54)

(இ-ள்):— உலகத்தார்கள் அல்லாவின் ஹிக்மத்தைபறியாமல் அல்லா "ஸமதானவன்" என்று இப்பதான் கண்டவர்கள் போலச்

சொல்லிவிடுவார்கள். ஸமதான விதமும், கோலமும் இன்ன மாதிரிதான், என்று ஒரு கொஞ்சமாகிலும் அறியவே மாட்டார்கள். அவர்கள் இரண்டு கண்ணையும் அடிக்கடி பார்ப்பார்கள். அதன் உள்ளிருக்கும் பாப்பா என்கிற ஜோதியையும் பார்ப்பார்கள். இன்னதுதான் என்று அந்த பைத்தியக்கார ஜனங்கள் அறிவார்களா? அறியமாட்டார்கள். இருளையும் காற்று முதலான வஸ்துக்களையும், காண்பார்கள். அவர்களுக்கு என்னதான் தெரியும்? அது குதுறத்தை அணுகிப் பார்த்தால் அப்போதல்லவா இன்னது இனியது என்று தெரியும், அப்படி அறிந்தவர்களுக்கு அதுவானது கலிமாவில் உள்ள ஒரு மொழியானது, பலபல வடிவமாக, பலபல பாஷைகளாக பிரிந்து, உலகெல்லாம், ஒரே ஜோதிவடி வாகத் தெரியும். (எ-று)

மொழியாமொருவொளி யகன்றசோதிமுழியி னொளிவாகும் விருக்ஷமாகுந் தெளிவாய் விருட்சமாயகந்தங்கோடி திரண்டகனியால் மிருண்டலோக, மொளிவாய்க் கதிர்மதியுருவ மொன்றிங் குலகி நிறைந்திடு முவமைபோலக், குழியினொருகோடி நிறம் பளிங்கின் கோலஞ் சரிகாணுங் கொள்கையாமே. (55)

(இ-ள்):— தன்னையறிந்த ஆரிபீன்களுக்கு அந்த ஒரு அட்சரமானது, ஒரு சொரூபமற்ற மொழியாக நின்ற தொனித்து, அப்பால் ஒரு விருட்சமாகி, அதில் நின்றும் பலபல பணர்களாகி, பலபல கோடாகோடி இலை கிளைகளாகி, உலகெல்லாம் நிரைந்து, அதில் உள்ள கனிகளானவை சூரிய சந்திரப் பிரகாசம் போல ஜொலித்து, தன் இருதயத்தில் ஒரு கண்ணாடிபோல நின்று எல்லா ரகசியங்களையுந் தெரியச் செய்யும். எ-று.

பாசிக்கானவர் செயல் முற்றிற்று.

---

## பீர்நிலை யறியும்வகை.

கொழுகி யுலகெல்லாங் கோர்த்தானிறை குருவின் பீர்நிலை குறித்துநின்ற, வழியின் விழிதனைத் தழிவிப் பார்க்கின் வானம் புவியேது வரையுமேதிங், கொளிவு தெளிவெல்லா மொன்றுமிந்த வுலகினுயிரியாவு மொருவனென்று, வெளியாய்த் தரித்தபின் சமதுடைய வேசகிலையாகும் வாசத்தாலே (56)

(இ-ள்):— மேலே சொன்ன சமதை நான் கண்ட விபரம் சொல்கிறேன் கேளுங்கள். காமிலான குருவானவர் சொல்லித்தந்த ஞானநிலையை மனதின்கண் பதியவைத்துப் பார்த்தேன். அல்லா என்பது, உலகத்தையும், அதிலுண்டான ஜீவராசிகளையும், ஒரு சங்கிலித் துடர்போலக் கொருத்து நின்றான். என்னுடைய நாட்டத்தை இருதயக்கண்ணோடும் பொருந்திப்பார்த்தேன். உலகம் என்றதும், பலபல ஜீவராசிகள் என்றதும், வானம், பூமி, மலை, பாதாளம், கடல் முதலான எவ்விதப் படைப்புகள் என்றதெல்லாம் சுத்தப் பொய்யாய் விட்டது. அல்லா ஒருவனே யன்றி வேறே எந்த வஸ்துவும் கிடையவே கிடையாது. இதுதான் சமதுடைய நிலையாக இருக்கும். எ-று.

ஆலமமைத்தவனஹதொருவனலம் சமதாகு மவனொளிவாங் கோலரூபமுன் னரூபமாகுங் குருவாம் பீரதிற்குடியானதால், ஆலம் ஹசுகறில்ரூபரூப மாலம் அக்குபருமறிவு நிலை, கோலத்துயிரெல்லா மரூபத்துள்ளே கோர்க்கு நினைவிலோர் கொழுந்துபுகை. (57)

(இ-ள்):— இந்த உலகமானது படைக்கப்பட்டு, வேறுவேறு ரூபத்தில் காணப்படும்போது, இந்த அவத்தையான உபாதிகளாலே அல்லா என்கிற திருநாமத்துடன் விளங்கப்பட்ட றப்பானது, ஒருமை நிலை என்கிற மகாமில் வந்தபோது இருவினை யென்னும் உபாதிகள் மாறி, எல்லாம் ஒன்று என்னும் ஞானமானபோது, அது ஸமது என்று விளங்கி பலபல பெயருடன் இருக்கிற நகைகளானவைகள், உருக்கிப் பார்க்கும்போது எப்படி ஒன்றாகிய பொன் என்று வழங்கிவிடுகிறதோ அப்படி உலகமான ஆலம் சகிறில் பலபேதா பேதங்களாகவும் ஆலம் கபீறில் ஒன்றாகவும் ஆகிறது, இதில் குரு என்பது சரீரமாக நிற்கிறது. எ-று.

வேலை யமைத்திடுந் திருவுளந்தான் வேலை நிறைந்ததும் விலகுவதும், பாலன் ரூபமாய்ப் பிறந்ததிப்போ பரத்தை மறைத்தது பஞ்சபூதம், ஆலஞ் சமதான அலிபுநிலை யாதி யனாதியா மண்டபிண்டங், கோலத் துருவதி லொளித்திருக்குங் குருவாம் பீர்நிலை தெரியச் சொல்வேன். (58)

(இ-ள்):— உலகம் ஸமஸ்தையும் படைத்து விட்டு ஜீவகோடிகளின் சிருஷ்டிகளாகவும் பிறக்கின்றன. அந்த ஸமதானது அதன் ரகசியத்தை அனுசிறுகளான ஐந்து பூதங்களும் ஒளித்துக்

கொண்டிருக்கின்றது. அலிபுடைய நிலைகளை உலகமும், வானங்களும் நிரப்பிக் கொண்டன. இவைகள் தான் பீர் நிலைகள் என்பது. எ-று.

தெரியத் திருவுளத் துருவந்தனைத் தெளியும் பளிங்கிநீர் கண்ணடியா, லுருவந்தெரியுங் கண்ணடி தன்னை யுள்ளத்திருத்தியே யுருவறிய, வறியுங் கரையுமண் பாத்திரத்தி லேந்து தலத்திலே தெரியும் ரூப, முருகிப் பாத்திர முடைந்த போது ரூபந் தெரியாது வொளி குறைவாம். (59)

(இ-ள்):— இவ்விதம் நிரம்பி இருக்கின்ற சமதை ஆலம் கபீராகிய சரீரத்தில் தெரிசிக்க வேண்டுமானால், இருதயப் பின்னல் களான நப்ஸு அம்மாறுவை விலக்கி, சுத்தமான பளிங்கி போலப் பிரகாசிக்க செய்து பார்க்க வேண்டும். எப்படியானால் ஒரு மண் பாத்திரத்தில் சுத்த நீரை அடைத்து அதைப் பார்த்தால் தன் முகமானது தெரியும், அது உடைந்து விட்டால் ஒன்றுந் தெரியாது. எ-று.

ஒளிவு ரூபத்தை ரூபத்துள்ளே யுருக்கி முஷாஹதா அஞ்சனத்தாற். கருவை நினைவின லறிய வேண்டுங் கருவுண் ணினைவுக்குட் கலந்ததென்ன. கொழுகிக் குறுஆனில் ஆயத் தொன்றில் குலிற் றூகுமின்னம்ரி றப்பி யென்று, ஒளிவு றூகுல்லா ஏவலென்றே உலமா முஹம்மது நபியுஞ் சொன்னர். (60)

(இ-ள்):— அந்த ஸமதானது, ஒரு ஒளிவுடைய சூறத்தில் வெளியாகும். அது எப்படியான உபாய மென்றால்:— சரீரமென்னும் வெற்றிலையில், முஷாஹிதா என்னும் மையை இட்டு நினைவென்னும் பார்வையால் பார்த்தால், அப்போது அந்த ஸமதானது பளீரென்று வந்து வெளியாகும். இதனைப் பற்றித்தான் அல்லாவும் குர்ஆனில் "குலிர் றூஹுமின் அம்ரி றப்பிஹி" என்னும் திருவுளம் பற்றி இருக்கிறன். நமது நபியவர்களும் "றூஹானது ஒரு ஒளிவு அதானது அல்லாவால் ஏவப்பட்டதாக இருக்கும்" என்று சொல்லி இருக்கிறர்கள். எ-று.

பீர்நிலையறியும் விபரம் முற்றிற்று.

---

## மஸலாக் கேட்கும் விபரம்

உலமா முஹம்மது நபியுஞ் சொன்னருள்ள வுலமாக்கடாமுஞ் சொன்னர், தெளிவாய்ச் சமதான றூகுதனைத் தீனோர் குருமாரே யெனக்குச் சொல்லுங் குலமாங் கலிமாவாய் முளைத்த மரங்கூறும் பணறும்பூ விலைகாய்பழஞ், சலமாங் கடலிலே முளைத்தவித்துச் சாற்றும் ஸமதான தாத்தை யெல்லாம். (61)

(இ-ள்):— நபி நாயகம் அவர்களும், இமாம்களும் சொல்லி யிருக்கிறார்கள், பின் காலத்தில் கள்ளக் குருமார்கள் வருவார்கள். அவர்களிடம் கீழ் வருகிற கேள்விகளைக் கேளுங்கள் என்று ஆனதால் தான் நானும் கேட்கிறேன். அதாவது ஸமதாய் இருக்கிற றூஹானது என்ன? கலிமா என்னும் மரமானது முளைத்து பணர் களாகவும், இலையாகவும் காய் பழங்களாகவும் தழைத்து நிற்கின்ற விபரமென்ன? இதை பீர்மார்களாக வருகிறவர்கள் சொல்ல வேண்டியது. எ-று

தாத்து சிபத்துசி பாத்து மூன்று தரிக்கும் விலாயத்து ஷபாஅத்தோடு, மேத்த குதறத்து அஹதியத்தோ டிலங்கும் நுபுவத்து இனயத்தாகு, நேர்த்தி பாபத்து ஹிதாயத்துடனிற்கு மிமாமத்து முகுஸிதாத்து, எத்தம் லாகூத்துப் பதினுலுந்தான் எந்தன் குருமாரே யெனக்குச் சொல்லும். (62)

(இ-ள்):—தாத்து, சிபத்து, சிபாத்து, விலாயத்து, ஷபாஅத்து குதறத்து, அஹதியத்து, நுபுவத்து, இனயத்து, இபாதத்து, ஹிதாயத்து, இமாமத்து, முஹிஸிதாத்து, லாகூத்து முதலிய இந்தப்பதி நாலையும் இன்னதென்று சொல்லுங்கள்? பீர்மார்களாக வருகிறவர்களே. எ-று.

எனக்குத் தெரியவே பதினுலுந்தா னின்னதின்னதென்றே யெடுத்துக் கணக்கில் லாமலே வகையென்றுக்குக் கொண்ட விபரந்தா னின்னதென்று, மெனக்கு முனக்கவன் றனக்குமாக விந்தப் பதினுலு இல்முஞ்சொன்னல், நமக்கு முலகுக்குங் குருவுமாகு நாட்டிற் பதினலு இல்மிதுவே. (63)

(இ-ள்.):—இந்தப் பதினுலுந்தான், பதினுலு இல்மு என்பது, இவைகளை ஒவ்வொன்ருக விபரப்படுத்தி, ஒன்றென்றும் வந்த வழிகளையும், பொருள்களையும் சொல்ல வேண்டியது. அப்படிச்

சொல்பவர்களை நானும், என்னுடன் உலகத்தார்களும் கூடி சரியான பீர்மார்கள் என்று கைப்பிடித்துக் கொள்வோம். எ-று

இது தான் பதினாலு இல்முமாகும் மெந்தன் குருமாரே யெனக்குச் சொல்லும், விதமாய்ப் பதினாலு இல்மைப்பார்க்க விரிவு மிருநூற்றுத்தொண்ணூற்று மூன்று, மிதமா யறிந்தவ ருலகிலுள்ள வெந்தன் குருமார்க்குங் குருவுமாகு, மிதனையறியாரைக் குருமா ரென்றாலிவரு மவருமே யிபுலிசாகும். (64)

(இ-ள்.):—இந்தப் பதினான்கு இல்முகளையும் ஞானக் கணக்கின்படிப் பெருக்கிப்பார்த்தால் இருநூற்றுத் தொண்ணூற்று மூன்றாகின்றது. இதையறிந்து ஒழுங்காகச் சொல்கிறவர்களைத் தான் என்னுடைய குருவுக்கும் குருவாக எண்ணிக்கொள்வேன், இவ்விதம் அறியாதவர்களை குருவென்று தொடர்வார்களே யாகில் குருவும், சீசர்களுமாக இபுலீசாகி விடுவார்கள். எ-று.

முன் கூறிற்சொன்ன தாத்தாவது கூறும் தம்கியாத் தருமாது, இன்னம் றாசியாத் தென்பதுதானிஃதி னவதார மெண்ணான்கிது முன்னா லெழுஞ்சுடர் முஹம்மதியா முறையு முப்பது சிபத்துமாகும், இன்னமாறெட்டுச் சிபத்ததாகு மிருபத்தைந்து தான் ஹினையத் தாகும். (65)

(இ-ள்.):—முன்னே சொன்னதாவது தம்ஹியாத்தென்று சொல்லுகிறது. இன்னும் றாஹியாத் தென்றதின் அவதாரமானது பதினாறு ஆக இருக்கும். நாலுல் முஹம்மதிய்யா வென்னும் ஒளிவானது முப்பது சிபத்துள்ளதாக இருக்கும். இன்னும் நாற்பது சிபத்துள்ளதாகவும் இருக்கும். இருபத்தைந்து சிபத்து இனயத்துக்காக இருக்கும். எ-று.

இருபத் தாறுதான் குதறத்தாகு மின்னமொரு பத்திங் கஹதியத்தா, மொருபத் தொன்றுதான் ஹிதாயத்தாகு மொருப்பத்து நாலு நுபுவத்தாகும், ஷருத்து மிமாமத்து முப்பதாகும் ஷபா அத்தொருபத்து மூன்றதாகும் அறுத்த மாறெட்டு மானவகை யதிலெ யெழுத்திரு பத்துநான்கே. (66)

(இ-ள்.):—குதுறத்துக்கு இருபத்தாறு சிபத்து, அஹதி யத்துக்கு பத்து சிபத்து, ஹிதாயத்துக்கு பதினொரு சிபத்து, நுபுவத்துக்கு பதினாலு சிபத்து, இமாமத்துக்கு முப்பது சிபத்து,

ஷபா அத்துக்கு பதிமூன்று சிபத்து. இவ்விதம் கலிமாவுக்கு இருபத்து நான்கு அட்சரங்களாயிற்று. எ-று.

பத்துமொன்றுமே விலாயத்தாகும் பத்து மைந்துமே ஹினுயத்தாகு மெத்தம் லாகூத்த தெட்டுமாகு மின்ன மிருமூன்று மிகுத்திதாத்து, பத்து மொரு நாலு இல்மிதாய பங்கு மிருநூற்றுத் தொண்ணூற்று மூன்று, *மெத்தன் தவுபீக்கு மிதுவே நிசமெந்தன் குருமாரே எனக்குச் சொல்லும். (67)

(இ-ள்.):—விலாயத்துக்கு பதினொன்று சிபத்து, கினுயத்துக்கு பதினைந்து சிபத்து லாகூத்துக்கு எட்டு சிபத்து, முஹிஜிஸாத்துக்கு ஆறு சிபத்து, இல்முக்கு பதினாலு சிபத்து, ஆகதௌபீக்குடைய வகையில் பதினாலு இல்முக்கு இருநூற்று தொண்ணூற்று மூன்று சிபத்து சரியாயிற்று. எ-று.

சொல்லுப் பிறக்குமுன் சொன்னதென்ன சொன்ன வுடனே ஞேதித்ததென்ன, வல்லான் குருவைமுன் கண்டதென்ன வருந்தி மூதற்றுனே படித்ததென்ன, எல்லாஞ் சரியென்றே எழுத்து மென்ன விடையின் மவுத்தென்று வந்ததென்ன, பொல்லா இபுலீசு பிறந்ததெங்கே புவயிற்றெரியத்தானெனக்குச் சொல்லும் (68)

(இ-ள்.):—மானிட ஜென்மங்கள் வாயால் மொழிகிறதற்கு முன்னால் அந்த மொழியானது எங்கே இருந்துவந்தது? அவ்விதம் சொல்லானது வந்த உடனே அதைக்கொண்டு தொழுதவர் யார்? அல்லாவுடைய றகுமத்து முதல் முதல் யாருக்கிறங்கினது முதலாவது இல்மைப்படித்ததார்? எல்லா பாஷையிலும் சம்மதங் கொள்ளக்கூடிய அட்சரமானது என்ன? நடுவாந்தரத்தில் மரணம் ஏன் வரவேணும்? இபுலீஸானவன் பிறந்த இடம் எது? இதைப் பீர்மார்களா யுள்ளவர்கள் சொல்ல வேண்டு மென்று கேளுங்கள். எ-று.

எமக்கு முமக்கிடை யிபுலீசென்ன இபுலீசு ரூப மெதுதான் சொல்லும், நமக்காயிபு லீசைநரகு சேர்க்க நாயன் கிருபையா லெறிந்ததாரு, துவர்க்கங் குபிரிபு லீசிடத்திற் றுய்யோ னிருந்தானே யில்லையோதா, நமக்கு முயிர்முன்னே யிருந்ததெங்கே நாளை யிறந்தபின் னிருப்பதெங்கே. (69)

(இ-ள்) சரீரத்துக்குள்ளே இபுலீ சென்றது எது? இபுலீசுடைய ரூபமானது எங்கேயிருக்கிறது? இபுலீசைக் கோபத்துடன் நரகத்தில் தள்ளச்செய்தவர் யார்? இபுலீசிடத்தில் அல்லாவுடைய சிபத்து இருக்கிறதா? இல்லையா? நம்முடைய ஆத்மாவானது இந்த சரீரம் வருகிறதற்குமுன் எங்கேயிருந்தது? சரீரம் விழுந்த பிறகு இனிப்போகிற தெங்கே! அறியும்படியாகச் சொல்ல வேண்டும். எ-று.

இருந்த கடல் நீரை யெடுத்ததாரு எந்த விதத்தினு லுருவாகினோம், பெருகும் ஹயாத்துல்கை பாரெமது பெரிய கடலென்ற பேரெதுதா, னிருக்கும் நல்புக்குப் பத்துநாவுண் டெல்லா நாவுக்கும் பேரைச்சொல்லும், இருக்கு முயிர்க்குத்தாய் மங்குலங்கள் எத்தனை மாதஞ் சூல்நிறையும், வருக்கம் பலமேக மொன்பதுண்டே வகையா மொன்பது பிரிவுஞ்சொல்லும். (70)

(இ-ள்):— கடலுக்கு நீர் வந்தவழி யெப்படி? நாம் என்ன விதத்தால் இந்த சரீரத்தை எடுத்தோம்? ஹயாத்துல் கைபார் என்னும் கடலானது எது? பெரிய கடல் என்பது எது? நம்முடைய நல்புக்கு பத்து நாவுகள் உண்டு அந்தப்பத்து நாவுக்கும் என்ன என்ன பெயர்? அதைச்சொல்லும்? மேகங்களுக்கு உயிருண்டுமா? இல்லையா? அது எத்தனை மாதம் கற்பமாகிறது? இன்னும் ஒன்பது வகையான மேகங்களும் உண்டும் அவைகளுக்குப் பேர் சொல்லுங்கள். எ-று.

பிரித்த ஹறியத்துப் பதினைந்துதான் பொசித்தாலுடலுக்குப் பிரிவுமென்ன, கருத்து நாதன்றான் விளைவதெங்கே கருணை யாசைதான் விளைவதெங்கே, பொருத்தும் ஆசக்குமறிந்ததாலே பொல்லாவெழுத்தையும் பிரித்துச்சொல்லும், வருத்தி யென்பது நாதத்தாலே வைத்தேயுயிரான வகையுஞ்சொல்லும். (71)

(இ-ள்):— ஹறியத்து என்பதுக்குப் பதினைந்து வகைப் புசிப்புகள் உண்டும். அதைப்புசித்தால் சரீரத்திற்கு என்ன நன்மை? இந்த சரீரத்தில் அறிவானது உதிக்கின்ற தலமானது எது? ஆசையானது விளைகின்ற தலமானது எங்கே? அந்த ஆசையுடன் ஒரு பொல்லாத எழுத்தும் இருக்கிறது, அதை இன்னதென்று நல்ல விளங்கும்படியாகச் சொல்லும். இந்த சரீரத்தின் சூரத்தானது

எண்பது வகையான இந்திரியங்களுடன் கூடி உயிர் பெற்றிருக்கிறது அதன் விபரங்களையும் சொல்லும். எ-று.

வகையா மாசையு மாசையாலே வல்லோ ஞெளிவுடனபியொளிவு, தொகையா யாதம்ஹவ்வா வொளிவுச் சொல்லு மெழுத்தெல்லாம் வகுத்துச் சொல்லுந் தகையா முலகத்து வாழ்வு போலே தானேதானே தானிருந்ததாரு, பகையில்லாமலே மதலை கன்னைப் பாரிலனுபோகஞ் செய்ததாரு (72)

(இ-ள்):— இன்னும் பேர்மார்களா யிருப்பவர்கள், ஆசையை, ஒரு ஆசை யிச்சித்திருக்கின்றது அதையும்: ஆதத்தின் ஒளி வென்றும், ஹவ்வா வொளிவென்றும் வந்த எழுத்துக்கள் என்னென்ன? இந்த உலகத்தில் தன் மதலையுடன் அனுபோகஞ் செய்தது யார்? எ-று.

செய்யு முலகத்தின் மவுத்தைநாடிச் சேர்ந்து பிரந்தாரைச் சேர்ந்ததாரு, ஐயம் பொருந்திய விந்துநாத மட்டகோணமாய் நின்றதெங்கே, மெய்யா முயிரோடு பேரிரண மேனியழகுடன் பல ஞானமும், வையம் பிழைதுன்பம் வீரங்கோட்டி வாதைப் படுவதும் பெருந்துன்பமும், (73)

(இ-ள்):— இன்னும் உலகத்தில் மனிதரை மவுத்து என்பது என்ன காரணத்தால் தொடுகிறது. இந்திரியமானது இந்த சரீரத்தில் எட்டு கோணமாக நிற்கின்ற விதம் என்ன? நாம் உலகத்தில் இன்பமென்றும், துன்பமென்றும், ஞானமென்றும் அறிவென்றும் சொல்லி மேனியையும் அழகு செய்வதும், அலைவதும் என்ன காரணம் சொல்லுங்கள். எ-று.

துன்பம் மவுத்துட னெட்டுவகை தொகையாய்த் தரித்திடுந் தலமுமெது, இன்ப மொருமுத்தம்பவளம் பச்சை யெதிலை அமைந்தது? முச்சுடரு மன்பாக் குதறத்து விருபத்தாறுமணியு முடனுக் குளாவதெப்போ, தன்பால் குதறத்து நடக்கும்வகை தடையில்லாமலே யெனக்குச் சொல்லும். (74)

(இ-ள்.):—எட்டு வகையான துன்பங்கள் மவுத்துடனே குடியிருக்கின்ற தலமானது எங்கிருக்கின்றது? இன்பமானது முத்து பவளம், பச்சை யென்னும் முச்சுடரான வகை யெப்படி? குதுறத்திலுண்டான இருபத்தாறு சிபத்துகளும். சரீரத்துள்ளே

கலக்கின்றது எப்போது? சரீரத்தில் கருமத்துடைய வாசல் திறக்கிற சபபு என்ன காரணத்தால்? சொல்லும். எ-று.

சொல்லுந் தாய்பங்க ளைந்துமாகும் சுரூபம் பிதாபங்க ளாறு மாகும், வல்லானுயிரெங்கே வாய்வுமெங்கே வருந்திஜலமான புவியுமெங்கே, யெல்லாமொன்றுக்கொன் றெத்தனைநா ளுருவங் கிழே தானிலையாய்நிற்கு, மெல்லாமெதிரூலே பிறந்ததுமுன் னெ துக்கிங்கெவரெவர் காவலாச்சு. (75)

(இ-ள்.):—இந்த சரீரத்தில் தாய் பங்கு ஐந்தும், தகப்பன், பங்கு ஆறும் உண்டு அவைகள் என்னென்ன அவயங்கள்? ஆத்மா வானது எங்கே இருக்கிறது? சுவாசம் எங்கிருந்து வருகிறது? நமக்குள் தண்ணீர் பெருகி அலை அடிக்கின்ற கடலானது எது? இவைகளில் ஒன்றுக்கொன்று எத்தனை நாள் தூரந்துலையில் வசிக் கிறது. இதுகளில் காவலாளர்கள் யார் யார்? சொல்லும். எ-று.

காவ லனைவர்க்குந் தலைவனான காபக்கபுசைனித் தலமுமெங்கே, கோபுக்காமலை யுடலிலெங்கே கொடிய விருளான தலமுமெங்கே, யாவியழியாம ளிலைநிறுத்தி யமானிதமான வாணி யெங்கே மேவுஞ் சிரசுதான் பத்தெழுத்தான் மேவியுருவான வெழுத்து மென்ன. (76)

(இ-ள்.):—மேற்படி காவல் கருவிகளுக்கெல்லாந் தலையான காப கௌஸைனி என்கிற ஸ்தலம் எது? சரீரத்தில் கோபகாபுமலை எங்கிருக்கின்றது? இருள்களுக்கெல்லாம் தலையான இருளானது குடியிருக்கின்ற தலமானது எது? இந்த சரீரத்தின் றூஹை அமானிதமாக ஒப்புக்கொடுத்த வஸ்துவும் எது? நமது சிரசானது பத்தெழுத்தாக உருவானது எப்படி? எ-று.

எழுத்துடனைந்து தலமுமெங்கே யிலங்கும் றூகுக்கும் வாய்வுக்குமே, யெழுத்து மிடையிலே பதினாலுண்டே யென்ன வெழுத்தது விடுத்துச் சொல்லும், சுழித்த அஞசி ரெவ்வொன்றுக்குச் சுழியிற் பதினாலு கருவுமுண்டே, யெழுத்தும் பிசகாமற்சரியாய்ச் சொல்லுமிலங்கும் றூகுதான் வாய்வுமேலே. (77)

(இ-ள்.):—சரீரத்திற்கும் உயிருக்கும் இடையில் பதினாலு அட்சரமும் உண்டும் அவைகள் எது எது? ஆகாயம், காற்று, நெருப்பு, மண், தண்ணீர் என்றும் ஐந்து பூதங்களுக்கும் பதினாலு

கருவெழுத்துண்டும் அவைகள் எது எது? ஒரு அட்சரமானது பிசகில்லாமல் சரியாய்ச் சொல்லுங்கள். எ-று.

வாய்விற் பறக்கின்ற பறவைவட்டம் வடிவுநிறமூன்று வகையுஞ் சொல்லும் றூகிலே நின்று பிரிந்ததைந்தும் ரூப மொன்றுக் கொன்றெத்தனை நாண் மேவியறுநான்கு கலிமாநிலை மேவி யெங்கெங்கே யெதுதானிற்கும், ஆகும் பதினெண்ணாயிரமாலமுமன் றேயெதினாலே யமைத்தான் முன்னோன். (78)

(இ-ள்.):—றூஹுடன் கலந்திருக்கின்ற பிராணவாய்வானது மூன்று வகையான பறவையாக இருக்கின்றது. என்னென்ன? றூஹில் நின்றும் ஐந்து மகாம்கள் பிரிவினையா யிருக்கிறது. அவைகளில் ஒன்றுக்கொன்று எத்தனை நாள் பயண மிருக்கிறது? இருபத்து நான்கு அட்சரமுள்ள கலிமாவின் நிலையானது இந்த சரீரத்துக்குள் என்ன என்ன தானத்தில் நிற்கின்றது. பதினெண்ணாயிரம் ஆலங்களை என் றப்புபடைத்தான் சொல்லும். எ-று.

முன்னோ னிருப்பிட முதன்மையெங்கே முழக்கமாகிய தவசு மென்ன. வன்னை முஹம்மது மயில்புறுவா யப்போ வணங்கிய வணக்கமென்ன, வின்னமெதுசொல்லியெழுதுங்கலமேகனிலையைந்து தலமுமெங்கே, முன்னே யுடலுக்குப் பகலிரவோ மோசம் வராமலே நினைவாய்ச் சொல்லும். (79)

(இ-ள்.):—சரீரத்தில் றப்பு என்ன தலத்தில் இருக்கிறது? நூறுல் முஹம்மதானது, மயிலாகவும் புறுவாகவும் அவதாரங் கொண்டிருந்த யுகங்களில் என்ன மாதிரியான வணக்கங்கள் செய்தது? லௌஹில் கலமானது என்ன ஊசாட்டத்தால் எழுதினது? இந்த சரீரம் இரவுக்குள் இருந்து வெளியானதா? பகலுக்குள்ளிருந்து வெளியானதா? சொல்லும் எ-று.

இரவும் பகலுந்தான் பிறப்பதெங்கே யிரவும் பகலுந்தான் இறப்பதெங்கே, யிரவும் பகலொன்றாய் யிருப்பதெங்கே யிரவும் பகலற்ற தலமுமெங்கே, பெரிய [illegible]க்கிலே றூகுதானும் பிடித்த குகையென்ன மாடமென்ன, வரியதிரியென்ன வெண்ணை யென்ன வதற்கு நெருப்பென் னவறியச்சொல்லும். (80)

(இ-ள்):— இரவும், பகலும் பிறந்தது எந்த ஸ்தலத்தில்? அவைகள் அடைவது எந்த ஸ்தலத்தில்? இரவும் பகலுங்கூடி ஒன்றாய்க் கலந்திருப்பது எந்த ஸ்தலத்தில்? இவைகள் இரண்டும் இல்லாமல் எதுவுமற்ற சூனியமாக இருக்கின்ற ஸ்தலமானது எது? சரீரத்தில் வியாபித்திருக்கின்ற பிராணனானது எந்த தீபத்தின் வெளிச்சத்தில் கொழுகி நிற்கின்றது? அந்த தீபம் இருக்கின்ற மாளிகையானது எது? அந்த தீபத்திற்கு திரியென்பது எது? நெய் என்பது எது? அதற்குக் காங்கை எப்படி வந்தது? சொல்லும். எ-று.

அறியவிதை முன்னோ விருட்சமுன்னோ வாதி முதன்மனு விருப்பதெங்கே, பெரிய தகப்பனா ராதந் தானும் பெரிய புவியிலே தரிப்பதெங்கே, பெரிய பிழையெல்லா மிறைபொறுக்கப் பேசா தெழுந்தோடு மெழுத்து மென்ன, வுருவாயருநான்கு கலிமாநிலை யொன்றா யுடலுக்கு ளிருப்பதெங்கே, யரிவை புருஷர்க்குந் தனி யெழுத்து வந்த வெழுத்தல்லோ வறியவேண்டும். (81)

(இ-ள்):— விதை என்பது முந்தியா? மரமென்பது முந்தியா? ஆதிக்கு முன்னால் இந்த உலகமானது என்ன வடிவாக இருந்தது? ஆதம் நபி யிருக்கின்ற பெரிய உலகமென்பது எது? பெரும் பாவங்களை றப்பு பொறுக்க வேண்டிய தியானிக்கின்ற ஊமை எழுத்தானது எது? கலிமாவினிலையாகிய இருபத்து நான்கு அட்சரங்களும் சரீரத்தில் எந்த இடத்தில் ஒன்றுகூடி இருக்கிறது? பெண்கள் புருஷர்கள் என்று இருவினைபடுத்தி ஒன்றுக்கொன்று மோதிக்கச் செய்த கருமம் எது? சொல்லும். எ-று.

அறியவேண்டுமே யின்ன மொன்றிங் காலத் துயி ரெல்லாம் பிறக்குமுன்னே, மறியு மாண்பெண்ணாய் வயிற்றினுள்ளே வடிவு பிறிவது மெத்தனைநாள், பெரியஸனாவோடு முழுக்குத்தீரப் பெலத்த வெழுத்தெங்கே யுடலினிற்கும், பரியகுருமாரே நல்லோர்களேபையன் மசலாவைப் பகுந்து சொல்லும். (82)

(இ-ள்):— இந்தப் பூலோகத்தில் பிறக்கும் சிசுக்களானவைகள் தாய் வயிற்றுக்குள் கர்ப்பமாக இருக்கையில் ஆணாக அல்லது பெண்ணாக உருவெடுப்பது எத்தனை நாளையில்? பெரும்பாவமாகிய ஜனா முதலானவைகளில் தொடக்குத் தீர்க்கிறதற்கு உச்சரிக்கின்ற

அட்சரமானது எது? குருமார்களா யிருக்கிறவர்கள் சற்று என்பேரில் தயவு செய்து சொல்லுங்கள். எ-று.

பருந்த வெழுத்தெல்லா மமைந்தபோது பாரக்கலிமாவில் ரண்டெழுத்து, முகந்தபுவியிலே பிறக்குமட்டு முகிலை யொதுக்கியே யிருப்பதெங்கே, வருந்து பிறந்தபி னுடலுக்குள்ளே வருந்தி யிநிரண்டுந் தரிப்பதெங்கே, யுகந்த வுடலுக்குள் வாரமூச்சு தென்முன் ரண்டு விதமுமென்ன. (83)

(இ-ள்):— கர்ப்ப குவளைக்குள் உருச்சமையும் போது கலிமாவின் அட்சரங்களெல்லாம் சமைந்து இரண்டு அட்சரமாத்திரம் சிசுப் பிறந்தபின் பிறகு சமைகிறதே அது எத்தனுவது நாளையில் அப்படிக் கட்டிக் கொள்வதற்கு முன்னாலே அந்த இரண்டு அட்சரங்களும் கட்டி இருந்தன. சரீரத்துக்குள்ளே மூச்சானது எந்த வழியாக வந்தது. எ-று.

இருந்து வருமூச்சு மெதிலே நின்று மெத்தனை கோண மெழும்பிச்சுற்றிச், சரிந்து மூச்செல்லா மிறப்பதெங்கே சாவு மெதினாலே வருவதுகாண், பொருந்தி யுடலுக்குள் கன்னுசுதான் புனையா தெத்தனை தலத்திலானன், வருந்துமவன்செய லெத்தனை தான் வாசலெதின் காவல் வடிவுமானன். (84)

(இ-ள்):— அவ்விதம் வந்த மூச்சானது சரீரத்தில் எந்தெந்தக் கோணங்களை யெல்லாம் சுழன்று கொண்டு வந்தது? அது இரண்டு பிரிவானது எப்படி? சரீரம் சாகவேண்டிய சூட்சம் என்ன? இந்த சரீரத்தில் இபுலீசானவன் குடியிருக்காத ஸ்தலமானது எது? அவன் வாசஞ்செய்கிற ஸ்தலம் எது எது? அவனுடைய செயல் களானவை எவை? அவன் காவலாக இருக்கிறது எங்கெங்கே? எ-று.

வடிவு முகுதா னெந்தல்லவோ வருத்தும் விதமென்ன நாம மென்ன, முடியாச்சடத்தோட யிருந்துபின்னு முளைத்த கேள்விதான் சொல்வதென்ன, நெடியோன் பாதத்திலே சமதைச் சேர்த்து நீதி செலுத்திய முகுமென்ன, வடியேனுரைத்திடு மசலாவெல்லா மாண்டவமாரே வறியச் சொல்லும். (85)

(இ-ள்.):— சரீரத்துக்குள் ஐந்து வகையான உயிர்கள் இருக்கிறது அவைகளின் பெயர் செய்குணங்கள் என்னென்ன?

இந்த உயிர்களில் றப்பாணியாவைச் சேர்கின்றது எது? நாயகங்களே சொல்லுங்கள். எ-று.

அறிவு மவுத்துத்தான் வரும்போதங் காக யந்தனைப்பார்ப்ப தென்ன, தெரிய வுருவேது தேசமேதுதிரண்டகுழு வொன்ருய்ச் சேர்வதாரு, பிரியா திருப்பதார் போனதாரு போன வுயிரெல்லா மிருப்பதெங்கே, பிரியா ரூகெல்லா மொரு தலத்திற் பெரிய நாண் மட்டும் மடிவதெங்கே. (86)

(இ-ள்.):— மரணத்தருணத்தில் ஆகாயத்தை எதிர்பார்க்கின்ற கருவி எது? இந்தச் சரீரமும் உருவுடன் தோற்றுவது எந்த வஸ்தால்? எல்லா நாடிகள் நரம்புகளையும் பின்னிக்கொண்டிருப்பது எது? அவ்வாறு சேராமல் விலகி நிற்பது எது? சரீரங்கள் விழுந்த உடன் அந்தந்த வுயிர்களெல்லாம் போய் வசிக்கிற இடம் எது? எ-று

எங்கே பிரிந்தது வைந்துரூகு மெந்த வெழுத்துவின் வனுப் பத்தாலே, யெங்கே கருவிலே யுருவமாச்சு தெங்கே யிருந்துதான் வரு நித்திரை, பங்கப்பெரும்பால நன்மை தீமை பாரின் வரிதானே முதலறியோ, தெங்கள்குலத்துக்குக் குருவுமாகுமென்ன விதத்தினுற் குருவென்னலாம். (87)

(இ-ள்.):— மேலே சொன்ன ஐந்து ரூஹுகளும் எங்கே பிறந்தன? அவைகளுக்குரிய உயிர் அட்சரங்கள் எது எது? இந்த சரிரத்துக்கு நித்திரையான்து எந்த தலத்திலிருந்து வருகிறது? சிருத்துல் முஸ்தக்கின் பாலமானது சரீரத்தில் எது? எப்படிப்பட்ட நடத்தையைக் கண்டால் ஒருவரை குருவென்று நம்பலாம். எ-று.

குருவா யிருப்பதிற் குபிறுமாகுங் குருவுக்குபதேசங் கொடுத்ததாரு, வுரியபதினைலு முஷாஹதாவு மொன்ரு யிருந்துதான் புகழ்ந்ததற்கு, பெரியவுபதேசம் பதினைலுக்கும் பிரிவுமிருபத்து வெட்டல்லவோ. (88)

(இ-ள்.):— குருமாராய் வருகிறவர்கள் காபிராகவும் இருப்பார்கள் அவர்கள் யார்? ஞான ரகசியத்தைக் கண்டு பிடித்தவர் யார்? இருபத்தினன்கு அட்சரமுள்ள கலிமாவைப் பற்றி பதினன்கு எழுத்தாகச் சுருக்கிக்கொண்டவர் யார்? மேற்படி எழுத்துகளைப் பதினன்கு முஷாஹிதாக்களாக ஏற்படுத்தினவர் யார் யார்? இந்தப்

பதினான்கு நிஷ்டையிலும் இருபத்தெட்டு வாஸலாத்துகள் உண்டும் அது எது? எ-று.

இருபத்தெட்டு மேயாது நிலையிலங்கு முஷாஹதாப்பதினாலுக்கு வொருபத்து மூன்று முயிரல்லவோ வொன்று நிலையிலே யதனைச் சொல்லுங் கருவா நினைவினாலாறெழுத்துக் கருத்தி நிலைப்படுந் தலத்தைச் சொல்லும், பெரிய குகைவைத்துத் துருத்தியூதப்பீங் கானிற்பாலைக் கொடுப்பதாரு. (89)

(இ-ள்.):— இருபத்தெட்டு யாக்கும் பதினான்கு நிஷ்டை யிருக்கிறது. இவைகளுக்குள் பதிமூன்று குபிரியிருக்கிறது. அவைகளின் விபரங்கள் என்ன? ஆறு அட்சரங்களைக் கொண்டு நம் இருதயக்கண்ணாடி வெளியாகுமே அது என்ன என்ன? சுவாசத்தை வசப்படுத்திக் கொண்டதின் பிறகு அதிலிருந்து பீங்கானும், பாலுமாக வருகின்ற வழி யெப்படி? எ-று.

கொடுத்த பீ ங் கா னு ம் பாலுமாகும் கொள்பானக்கம் பஞ்சமுதமாகக், கொடுத்த குருவது பீர்நிலையைக் குறித்துப் பிசகாமற் சரியாய்ச்சொல்லு மடுத்த கைதொட்டுப் பிடித்த தெவரானும் பெண்ணும்போற் கண்டதெவர், படித்ததலமென்ன மலருமென்ன பத்தாமெழுத்தாக யிருப்பதெது. (90)

(இ-ள்.):—மேற்படி பீங்கான் எது? பால் எது? குரு நிலை யென்பது எது? ஆணும் பெண்ணும் போல கலந்த வண்ணமாகக் காண்பது எது? சரீரத்தில் பத்து அட்சரங்கள் கொண்ட மக்கம் எது? சரீரம் உலகம் எது? ஆயிரத்தெட்டிதழ் தாமரை என்பது எது? அறிந்து சொல்வீராக. எ-று.

இருக்குந் தவிபதான் பத்தெழுத்தா விலங்குமறை நாலுசுகு புநாரு, வருத்தும் புகழெலா மதுக் குள்ளாக வரைந்த விதமென்ன தெழுத்து மென்ன, பிறந்த விட மெங்கே யிறந்த தெங்கே பிறப்பு மிறப்புந் தான் தறிப்ப தெங்கெ, மறக்குமிட மெங்கே மதியு மெங்கே மகிழ்ந்த சிரிப்பெங்கே யழுகை யெங்கே. (91)

(இ-ள்.) :— நாலு வேதங்களும், நூறு சுஹுபுகளும் இன்னுமுள் சாஸ்திரங்களும் இருதயத்தில் ஞாபகமா யிருக்கின்ற விதமெப்படி? அவைகள் மறந்து போகிறது எப்படி? அந்த வியாபகம் எந்த இடத்தில் பிறந்தது, எந்த இடத்தில் இறந்தது,

இறப்பு, பிறப்பு என்றது எது, மறிதி என்பது எங்குள்ளது, வியாபக சக்தி எங்கு உள்ளது, சிறிப்பு எங்கிருந்து வருகிறது, அழுகை எங்கிருந்து வருகிறது, சொல்வீர்களாக. எ-று.

எங்கள் குலம் வேறுப் பிரிவதெங்கே யெழுதுங் கலிமாவின் அடியுமெங்கே, தங்கிவரு மூச்சைப் பெற்றெடுத்த தாயுந் தகப்பனு மிருப்ப தெங்கே பங்காய் நமக்குள்ளே பாவ நன்மை பாரவுடலுக் குட்டரிப்பதெங்கே, யெங்கள் குலத்துக்குக் குருமார்களே யெளியேன் மஸலாவை யெல்லாஞ் சொல்லும். (92)

(இ-ள்.):— இன்ஸான் ஹைவான் என்று வேறு பட்டிருக்க வேண்டியது என்ன? கலிமாவின் வேரானது எது? சுவாசங் களுக்குத் தாய் தகப்பன் யார்? நாம் செய்கிற நன்மை தீமைகள் சரீரத்தில் எந்த விடத்தில் குடியிருக்கின்றது? கொஞ்சம் சொல்லுங்கள் பீர்மார்களே! பெரிய பெரிய தலைப்பா கட்டிகளே! எ-று.

சொல்லும் மஸலாத்தானெவருஞ்சொல்வார் சொல்லிலடங்காமல் இனிக் கேட்பனுன், சொல்லுஞ் சுவாசந்தா னைந்தெழுத்துச் சுருப முருவான நிலையினுள்ளே, சொல்லும் ஜெம்கூத்து நிலையுமென்ன சுரூப மூன்றுமே சேர்ந்தா லென்ன, வெல்லு மலரென்ன குதறத்தெது விரிந்த ஆலமுன் னிருந்ததெங்கே. (93)

(இ-ள்.):—உலகத்தில், எவர்களும் மசலாச் சொல்கிறோம் என்று திரிவார்கள். அவைகளி லெல்லாம் மசலாவானது இங்கே நான் கேட்கின்ற மசலாவைச் சொல்லுகிறது தான். ஆண் பிள்ளைகளைத் தனமானது சுவர்க்கத்தில் கலந்திருக்கின்ற ஐந்து அட்சரங்களிலே ஜெம்கூத்தில் அஸ்திவாரங்கள் இருக்கிறது அது என்ன? முச்சுடர்களும் ஒன்று சேர்ந்தால் அப்போது அதற்கு என்ன பெயர் குதுறத்தானது ஏதால் உண்டாகிறது? இந்த உலகம் இதற்கு முன் எந்த இடத்தில் இருந்தது? சொல்வீர்களாக. எ-று.

இலங்கு மொளியென்ன நுக்கத்து மென்ன வெது காணும் சுலுத்தானு சிறு, துலங்கு மில்லேது தில்லுமேது சூழ்ந்த வல்லென்ன அலிபு மென்ன, வல்ல மீமென்ன முகுதிதாத்து வளைந்து தலை கீழாய் நிற்பதெது, வெல்லுங் கமலமென் றெதைச் சொல்லலாம் விரிந்த மீம்தலை வெளிச்ச மென்ன. (94)

(இ-ள்):— நாம் பழகின்ற விளக்குகளின் ஒளிவுகள் எதைச் சேர்ந்திருக்கின்றது? சுல்தானன்னஸீரா என்ற ஸ்தலம் எது? நுக்கத்து என்பது எது? இல், தில், வல், என்ற திக்று எதை சம்மந்தப்பட்டிருக்கிறது? அலிபு சரீரத்தில் எதாக இருக்கிறது? முஹறஸிதாத்து உடை கோலம் சரீரத்தில் தலை கிழாய் இருக்கிறதே. அதன் விபரம் எப்படி? கமலம் என்றதற்கு அர்த்தமாக சரீரத்தில் எந்த வஸ்துவைச் சொல்லலாம்? மீம் என்ற அட்சரத்தின் தலையில் இருக்கிற வெளிச்சம் எது? சொல்வீர்களாக; எ-று.

வெளிச்ச மிருளுக்கு னிலவு மென்ன வெட்ட வெளியென்ன வான மென்ன, களிச்ச மங்குல மோட்ட மென்ன காணு மாகாய மென்ன சொல்லுக் தொளிச்ச மீமென்ன பெருமீமென்ன துலங்கும் தாகெது காலுமெது வெளிச்சச் சூரியனொளிவு மென்ன விளங்கும் றூகானி றூகுமெது. (95)

(இ-ள்):— இருளுக்கும் வெளிச்சத்திற்கும் நடுவே நிலா என்பது என்ன? வானுக்கும், பூமிக்கும் இடையில் வெட்ட வெளியா யிருக்கிற சபபு என்ன? ஆகாயமாக இருக்கிறது என்னது? மேகசாலங்கள் அங்கு மிங்குமாய் ஓடிக்கொண்டிருக்கிறதே அதானது என்ன? சூரிய காந்தியானது தாங்காத அகோர வெயில் எரிக்கிறதே அது என்ன? றூஹானி யென்பதென்ன? றூஹு என்பதென்ன? சொல்வீராக. எ-று.

எதுதானிருகோண மதிவிருத்த மிருக்கு மூச்சுடரைந்து வெது இது தான் றலைகுடி யிருப்பதென்ன வின்னம் காபுகூ கியுமென்ன அதுக்குட் கண்ணாடி ஒளிவு மென்ன அல்லா திரு நாமக்கலிமாவெது அதுக்குட் பெருகிற ரூபமாரு வங்கே பொருந்திய நாமமாரு. (96)

(இ-ள்):— இரண்டு வட்டமான கோணங்களில் உலகம் வசப் பட்டுக் கிடக்கின்றதெது? மூச்சுடர் என்பவைகள் ஐந்து சுடராக இருப்பதின் சபபென்ன? சிரசின் அதிகாரங்களைச் சூழ்ந் திருக்கின்ற கருவி எது? ஹா! ஹீ! ஹூ! என்பது என்ன வஸ்துக்கள்? அவைகளுக்குள் கண்ணாடி ஒன்றிருக்கிறது. அதன் பிரகாசம் எது? அல்லாஉடைய திருநாமத்துக்குரிய கலிமாவானது எது? எ-று.

நாமம் பொருத்திய பாற்கடலி னுலா விதமென்ன நுபுவத்தெது, நாமநிலையெது குறுஆனெது நாற்பத்திமூன்று கோணமென்ன, காமநிலையென்ன கடலுமென்ன கறுப்புநிறமென்ன கல்புமெது, ஈமா னிலையெது கோட்டையெதிங் கிருந்த ஓங்கார வட்டமென்ன.

(இ-ள்.):—றப்புடைய வல்லப நாமத்தினல் உண்டானதிருப் பாற்கடல் எது? றஸூலுல்லாவுக்கு வந்த நுபுவத்தானது எது? குர்ஆன் ஷரீபு என்பது எது? ஞானிகள் நாற்பத்து மூன்று கோணமென்று சொல்லுகிறார்களே! அதன் ரகசியம் என்ன? இன்ஸான்களின் காமமானது எது? கடலில் கருப்பாக இருக்கிற நிறம் எங்கிருந்து வந்தது? சரீரத்தில் கல்பு என்பது எது? ஈமானிலை என்பது எப்படி? ஓங்காரம் வட்டம் என்பது எதற்குச் சொல்கிறது? சொல்வீராக. எ-று.

வட்ட வைரம் பொன் பவளம் பச்சை வடிவு நிலையென்ன வன்னமென்ன, மட்டி லடங்காத வொளிவுமென்ன மக்காமன் மகுமூதர் நிலையுமென்ன, விட்டசுறுமாவு நீலமென்ன வெங்கள் முஹம்மதுமெதுகாண் சொல்லும், விட்டம் நடுவிலே தெளிவு மென்ன வெள்ளை நிறமென்ன வொளிவுமென்ன. (98)

(இ-ள்.):—வட்டமாகின்ற வைரம், பொன், பவளம், பச்சை, சூட்சங்கள் என்ன, அவைகளுக்கு அந்த ரெங்குகள் எப்படி வந்தது, மகாமன் மகுமூது என்ற ஸ்தலமானது எது, சுறுமாக் கல்லில் நீல நிறம் ஏன் வரவேண்டும்: சரீரத்தில் முஹம்மது என்றது எது? எ-று.

ஒளிவு தெளிவென்ன ரூபமென்ன வுருபமிடையில்லா திருப்ப தென்ன, அழிவில்லாதவ னுதிநாய னல்லாவொளியெது ஆதமெது, பழியனிபுலீசு ரூபமென்ன பார விருளென்ன குகையுமென்ன, வெளியன்ன மசலாவைப் பிரித்துச்சொல்லு மெண்ணிலடங்காத குருமார்களே. (99)

(இ-ள்.):— ஒளிவு தெளிவு என்பதின் கருத்து என்ன? அவைகள் உருவம் உள்ளவைகளா, இல்லையா? ஒளிவென்றால் பலவகைகள் இருக்கின்றனவே அவைகளில் றப்புடைய ஒளிவு என்ன கோலங்குறி உள்ளது? அதற்கும் ஆத்மாவுக்கும் என்ன வித்தியாசம், நம் சரீரத்தில் இபுலீஸ் என்பது என்னரூபமாக

இருக்கிறது, இருளுங் குகையு மிருக்கின்றதே! அதன் தாற்பரியந்தா னென்ன சொல்வீர்களாக. ஓ! பகல் வேஷக்காரர்களே! எ-று.

எண்ணி லடங்காத குருமார்களே எந்தன் மஸலாவை யெடுத்துச் சொல்லு, மன்னர் முஹம்மது மாணே பெண்ணே மகிழ்ந்து வணக்கந்தா னின்னதென்று, என்ன எழுத்தாக வேதனே நோக்கி யெங்கே வணங்கிற தென்னசொல்லும், மின்னமெது காணு முயிரெழுத்திங்கென்ன விதங்காணு மெமக்கேதென்ன. (100)

(இ-ள்.):—ஓ! கள்ளவேடம் போட்டுத்திரிகின்ற குருமார்களே! றகூஉல்லா அவர்கள் ஆணு! அல்லது பெண்ணு? தொழுகை யானதைத் தொழவேண்டிய கிரமம் எப்படி? தொழுகையில் முக்கியம் தியானங்கொள்ள வேண்டிய உயிரெழுத்து எது? அதை எவ்விதம் பிடித்து எங்கே நோக்கித் தொழ வேண்டும், சொல்லும்.

எனக்குத்தெரிசனே யேதாகவே யிருக்கு மிதின்குண மெழுப்ப மென்ன? நமக்கு மதினுலே நடக்குமாறு நாடுக் தவமெல்லாஞ் சேர்வதெங்கே, சுமக்கும் பறுலெது, சுன்னத்தெது சூழ்ந்தவறி வெல்லாம் பிரித்து நன்று, யெமக்குத் தெரியவே விடுத்துச்சொன்னுல் எல்லாக் குருமார்க்கு மிமாமானதே. (101)

(இ-ள்.):—நாம் தொழுகிற தொழுகையானது எவ்விதத்தாலே போய் எங்கிருந்து எவ்விதம் தத்துவம் பெற்று என்ன ஆதாரத்தால் நமக்குப் பிரயோசனம் தருகிறது? அவைகளில் பறுலு என்பது என்ன? சுன்னத்தென்றது எது! இதை நல்லவழி விபரமாகச் சொன்ன மஹான்கள் உலகம் எல்லா வற்றிற்கும் சற்குருவென்று சொல்லலாம்.
எ-று.

ஆவென்ற பார்வை அலிபாகவும் ஐனு மிருவிழி யதுதானென்று, கூவென்றமூச்சத் தாதையுமாங் கொழுகிறாகு தானினேவாகையா, லேவி யாண்பாலா முஹம்மதுமே லிணங்கி ஆவென்றஅலிபாகத்தான், ரூவும் வணக்கமு முந்திக்கிமே தாங்கு முதல்சுன்னத்தினி மேற் சோல்வேன். (102)

(இ-ள்):— ஆ! வென்கிற பார்வையை அலிபாக்கி இரண்டு கண்களேயும் ஐனுக்கொண்டு ஹூ வென்ற மூச்சுடனே எல்லா கருவி கரணுதிகளுக்கும் தகப்பனுக இருக்கின்ற தன்மையான ஆணுன றாஹூக்கும், நினேவுக்கு மிடையில் கலந்திருக்கின்ற

ரகசியமான முஹம்மதென்கிற நிராமயத்தை பெண்பாலாகக் கொண்டு சுன்னத்து வணக்கமானது வந்தது. எ-று.

சொல்லு முஹம்மது தாயாமுடல் சூலுல் லாஹிபெண்மகு ஷூக்குமாம், அல்லாபேரிலே பேச்சுமீரேழ் அக்கில் மகிழ்ச்சியு முணர்வுமாக, நல்ல ஜெம்கூவில் கூவுமீமும் நாடு முதற்பறு விதுவே நிசம், அல்லா திருவாணை நிசமே சொன்னேன் அறிவை யறியாதார் பாவியாமே. (103)

(இ-ள்):— ஆனதினாலே இந்த உலகங்களுக்கு முஹம்மதானது ஒரு தாயாகவும், அதாவது சரீரமாக இருக்கிறது! றசூல் லல்லாஹி என்றது அல்லாவுடைய இஷ்கில் கலந்த மஉஷக்காகிய பெண் பாலர்களாயிருந்து அவன் உடன் அநந்தங்கோடி காலம் வசனித்துக் கொண்டிருந்து, அதனாலே றப்பானது அந்த மீமின் பேரில் தன் சிபத்தாகிய ஹூவியத்தைக் கலக்கச்செய்து அதிலிருந்து தன் பறுலை ஜனங்கள் தொழும்படியாயிற்று. இது அல்லாவின் சத்தியமாக நிசமாயினது. இந்த ரகசியத்தை உணராதவர்கள் எல்லாம் பாவிகளாக இருக்கும். எ-று.

தன்னையறிவது பறுலுமாகுந் தலைவனறிவது சுன்னத்தாகு, மின்னும் பறுலொன்று சுன்னத்தொன்று மிருக்கும் வகைதனை யறிவாருண்டோ, மன்ன வணக்கத்தால் முஹம்மதிய்யா மங்காநபி அல்லா ஹூவெனவே, அண்ணல் முஹம்மதையிருத்தி அல்லாஆவி முஹம்மது மவனையோதி, (104)

(இ-ள்):— பறுலானது இவ்விதம் சூட்சியிலிருந்து வந்ததாலே தான் தன்னை யறிவதை பறுலென்றும் தன் றப்பை அறிவது சுன்னத்தென்றும் முதல் தொடங்கி அதிலிருந்து பறுலு சுன்னத்துக்கள் ஏற்பட்டது. ஆனதால் எந்த வணக்கத்திற்கும் முஹம்மதை தியானித்து அல்லாஹூ வென்று திக்று செய்து கொள்ள வேண்டும். முஹம்மது அந்த திக்றைத்தான் உச்சரித்துக் கொண்டிருந்தது. அதை வழக்கப்படுத்தினால் எல்லா காரியங்களும் சித்தியாகும். எ-று.

ஓதுமுஹம்மது முருவமாக வோங்கும் வணக்கமும் முதற் பறுலாம், நீதி முஹம்மதை நினைத்தசோதி நினைவை யறிவது முதல் சுன்னத்தாம், ஆதி யனாதியாம் ஆவியாகி அஹதும்

அஹ்மது மொன்றே யாகும், நீதி முஹம்மதை நிலை நிறுத்தி நினைவல் லாவை நீநிலையிற்சேரும். (105)

(இ-ள்):— ஆனபடியாலே முஹம்மது அந்த திக்றைத் தியானித்ததிலிருந்து பறுலு வந்தது. அந்த முஹம்மதிய்யா வென்னும் ஒளிவானது தன் நினைவில் நின்றும் அந்த திக்றை தியானம் பண்ணினதாலே அதிலிருந்து சுன்னத்து தொழுகை ஏற்பட்டது. இந்த விபரங்களாலே ஆதியும், அறுதியும், அதாவது அஹதும், அஹ்மதும் ஒன்றுதான். இதனால் தான் நபியவர்கள் "நான் மீம் இல்லாத அஹ்மது" என்று சொன்னார்கள். ஆனபடியால் கலிமாவின் நிலையில் முஹம்மதை நிறுத்தி நினைவை அல்லாவென்று தரிபடுத்த வேண்டும். எ-று.

சேரு மிறைபாத நபிபாதமுஞ் செப்பும் வணக்கந்தான் முஹம்மதென்றும், வேருந் திருநிலை யறிவதுதா னிதனினுட் கோலமெது கூறுங், கூறும் பலகலை யுருவறியக் கொழுகி யிவைரண்டு மொருபறுலாம். மாதா வணக்கமு முஹம்மதென்று மன்னன் அறிவது முதல் சுன்னத்தாம். (106)

(இ-ள்):— அல்லாவையும் முஹம்மதையும் தியானிக்கிறது தான் தொழுகையாயிற்று. அந்த தொழுகையானது அஹ்மது ஆனது. மற்றெந்த நிஷ்டைகளும் இதில் நின்றுந்தான் உள்ள கோலங்களாக இருக்கின்றன. ஆகவே முஹம்மதை யறிகிறது பறுலு, றப்பை யறிகிறது சுன்னத்தாயிற்று. எ-று.

சுன்னத் திரண்டு மொரு சுன்னத்தாம் சொன்ன பறுல்ரண்டு மொருபறுலாம், எண்ணி லடங்காத பறுலுசுன்னத் தெல்லாத் தவத்துக்கு மிமாமிதுவாம், தன்னை யறியாதார் பொருளறியார் தவமுமிபுலீசைச்சே ருமென்று, மண்ணால் முஹம்மதை யாதினுயனர்க்கு மறிவிக்கப் பறுலாக்கினன். (107)

(இ-ள்):— சுன்னத்தில் இரண்டு வகை இருக்கின்றது அது இரண்டு மொன்றுதான். பறுலில் இரண்டு வகையிருக்கிறது அது இரண்டும் ஒன்றுதான். இந்த பறுலு சுன்னத்துக்கள் தான் எல்லாதவங்களுக்கும் அடி மூடானவைகள். ஆனதாலே யாரொருவன் தன்னை யறியவில்லையோ அவன் ஆதியை யறியவும் மாட்டான், அவன் செய்கின்ற வணக்கங்களும் இபுலீசைத்தான் சேரும், என்று நம் நபிபெருமான் அவர்கள் அருளிச் செய்தார்கள். எ-று.

பறுது வகையெல்லா மிறையைச்சேரும் பாங்காய் நபிக்காகுஞ் சுன்னத்தெல்லாம், பறுலில் வகையான பறுல்சுன்னத்தின் பாங்கை யறியாரே தீங்காங்காபிர், இருளு மனதினி னிறைந்திருக்க வென்ன தவஞ் செய்வோ மென்றுநாடி, பருளு மீராறு பொருளறிந்தே அல்லும் பகலுந்தான் தொழுதாலென்ன. (108)

(இ-ள்):— பறுதுகளின் வகை யெல்லாம் றப்பைச் சேரும், சுன்னத்துகளெல்லாம் நபியவர்களைச் சேரும். இந்தப்பறுது சுன்னத்துகளில் வழிவகைகளைப் பகுத்தறியாதவர்கள் தான் உலகத்தி லுள்ள காபிர்களுக்கெல்லாம் பெரிய தீங்கான காபிர்களாகும். ஞான வெளிச்சமில்லாதவர்கள் தங்கள் மனதின்கண் அடங்காத இருளானது குடியிருக்க அவர்கள் இரவும், பகலுமாக தொழுதுதான் என்ன! அழுதுதான் என்ன! ஒருபயனும் பெறமாட்டார்கள். எ-று.

தொழுகை நோன்புடன் ஸக்காத்தும் ஹச்சும் துய்ய நடபடி தவறிடாம, லெழுத முடியாத கலிமா நிக்கிறில் லென்றெழுப்பிய வோசை யெங்கும், அழுது நூறுண்டு கோடிகாலம் அல்லும் பகலுந்தா னுருநினைவாய்ப், பொழுது மதிகாணு விருட்குழியிற் போதவணக்கமென் றிருந்திட்டாலும். (109)

(இ-ள்):— தன்னிலைமை அறியாத மூட ஜனங்கள் ஐந்து நேரமும் தொழுது முப்பது நோன்பையும் பிடித்து, நாற்பதுக்கு ஒன்று விழுக்காடு ஸக்காத்தும் கொடுத்து மக்கமா நகரத்திற்குப் போய் ஹஜ்ஜுஉம், உம்ருவும் செய்து அல்லா அல்லா என்று சப்தம் போட்டு நூறுகோடி வருஷம் வரையிலும் அழுதாலும் அதே தியானமாக சூரிய சந்திரர்களுங் காணுத இருட்பொதும் பறைகளில் இருந்து வணங்கின போதைக்கும் (இன்னும்)

இருந்து மலைதனிற் சருகுதின்றே யேதுமருந்தாமற் குகையினுள்ளே, வருந்தி வருந்தியே வணங்கினுலும் வானம் புவி யெல்லாங்கைர் செய்தாலும், திருந்தப்புவி குபிரெல்லாம் வெட்டித் தீர்க்கமுறத்தீனே விளைத்தாலென்ன, சிறந்த உலகுள்ள பள்ளி மற்றத்தெய்வத் தலமெல்லாஞ் சிறப்பித்தாலும். (110)

(இ-ள்):— மலை கெபிகளிற் போய் அலைந்து கந்த மூலங்கள் முதலிய இலை குழை சருகுகளைப் பொறுக்கித் தின்று அடர்ந்த குகைகளிலே மூச்சடக்கி எவ்வளவோ பிரயாசைகளுடன் தவஞ்

செய்தாலும், இன்னும் வானம் பூமிமுதலிய பூதங்களை வசியப்படுத்தி காயசித்திகள், கற்பசித்திகள் செய்தாலும், வீர பராக்கிரமத்துடன் காபிரீன்களை அடர்ந்து பீஸபீல் என்னும் யுத்தஞ் செய்து வெட்டி அவர்களை இஸ்லாத்தில் வரவழைத்தாலும், இன்னும் உலகத்திலுள்ள பள்ளிவாசல்கள் முதலான தேவாலயங்களைக் கட்டி செப்பனிட்ட போதிலும், (இன்னும்)

சிறப்பாங் கஃபாப்போ லொருகோடியைச் செம்பொன்னாலே தானெடுத்திட்டாலு, முறைப்பா மறுஷுபோ லொருகோடியை யுயர்ந்த வைரத்தா லெழுப்பினாலு, நிறப்பும் பலனில்லை நாளொன்றுக்கு நீண்ட பாவந்தா னெவ்வளவென் றிறப்பும் பிறப்பில்லா நபிக்கு சொன்னா னென்றன் பயஹாம்பர் நபிக்கோதினன். (111)

(இ-ள்):— திருமக்கமா நகரத்தில் இருந்து விளங்குகின்ற கஃபத்துல்லாவைப் போல ஒருகோடி கஃபாக்களைப் பொன் இரத்தினதிகளால் [illegible] முடித்தாலும், உயர்த்தியான அறுஷே முஹல்லாவைப் போல ஒரு கோடி அறுஷுகளை வைரவெட்டினால் கட்டி முடித்தாலும், ஒரு பயனும் பெறமாட்டார்கள். பாவமே செய்து அலைவார்கள்' என்று அல்லாஹுத் தஆலா நபியவர்களுடன் மிஃறாஜில் கலந்து பேசினான். எ-று.

நபிக ளிருபத்தி ரண்டுகோடி நாட்டின் மிசையன்று கொலையே செய்த, புவியிற் பெரும் பாவம் நாளொன்றுக்குப் போதக் கிடைக் குங்கா ணடியார்க் கெல்லா, நபிகள் பெருமானார் முஹம்மதுக்கு நாயன் மிஃறாஜில் ரகசியமாய்க் கவியாம் ரகசிய முடிவிதுகாண் கண்ணே மணியே யென்நபியே யென்றான். (112)

(இ-ள்):— நப்புமுன்னுண்டான நபிமார்களுக்கு யுத்தத்தைப் பற்றியும் ஜனங்களை நடத்துகிறதைப் பற்றியும் தேவ கட்டளையும் வேதங்களையும் சுஹுபுகளையும் இறக்கினான். நமது நபி பெருமானாரவர்களுக்கோ மிஃறாஜியில் அழைத்து அநந்தாநந்தம் காட்சி சுப சோபனதிகளுடன் தன்னுடைய இரகசியமான மஆரிபா வென்னும் உண்மையான இல்மை அகமியமாகக் கொடுத்து தன் அடியார்களுக்குக் கற்பிக்கும் படிச் சொல்லி அனுப்பினான். எ-று.

நபிக்கு ரகசிய மிறைசொற் பொய்யோ நாட்டிற் சொர்க்க மென்றொருவன் செய்து, புவியிற் சிரசிடிந் திழந்துமாண்டு பொல்லா நரகினி லழிந்தானப்போ, கவியா லுரைத்திடு மூதற் பறுலின் காணு முதலான சுன்னத்தையு, மேவி யெழுப்பியே யேற்றி பார்க்க றவிலங்குந் தவமெல்லா மிஃதேயாகு, நபிகளின் றெவவரக் கொன்றூலு நாயன் முடிவல்லா லிவனுலில்லை. (113)

(இ-ள்):—மிஃருஜியில் வசனித்ததின் பிறகு வெளியாக்கிய சுவர்க்க வர்ணிப்புகளைக் கேட்டிருந்த ஒரு பெரிய சீமானுனவன் உலகத்தில் ஒரு சுவர்க்கத்தைக் கட்டினுன். அவனை உடனே உயிர் வாங்கச் செய்து விட்டான். ஆனதாலே அப்பேர்கொத்த பறுலு சுன்னத்தை யறிந்து வணக்கஞ் செய்கிறதே பெரிய வணக்கமாக இருக்கிறது ! எ-று.

இவன்றூ னுலகெல்லா மருத்திட்டாலு மிமையோர் குழுவெல்லா மிறக்கச் செய்து, செவிதா மறுஷோடு குறுசு தன்னைத் தீங்கு பல செய்து விருந்தா ரென்றும், புவியிற் பாவ மொன்றிவர்க்கு முண்டோ பொன்னூ ரவர்க்கல்லாலெவர்க்கு முண்டோ, தவியும் பிழை போக்கி காளொன்றுக்குத் தருவா னன்மை யெவ்வளவே யென்றூல் (114)

(இ-ள்):— தன்னிலை யறிந்தவர்களுக்கே ஜெயங் கிடைக்கும். உலக மெல்லாம் அடியோடும் அழிந்து போகின்ற கடையுக நாள் வந்த போதைக்கும், மலக்குக ளெல்லாம் இறந்து போய் வான லோகமும் இடிந்து போனுலும், தவங்களான நன்மைகளையும் பெருகச் செய்து வணங்கின காதாக்களுக்கு யாதொரு குறைவும் வராது. எ-று.

என்ற பெரியவன் பயஹாம்பர்தா மிருநூற்றிருபத்தி ரண்டு கோடி, மாண்டுபோகாம லுயிரை மீட்ட மதிக்கும் பலன் கச்சுக் கோடி யென்று, மாண்ட பெரியவன் தோஸ்தா மென்று மண்ணல் முஹம்மது நபியுஞ் சொன்னு, ரேன்ற அம்பியா தவாலி குத்தாபு மெல்லாவுலமாவு மிதுவே சொன்னுர். (115)

(இ-ள்):— தன்னிலையை அறிகிறதாகிறது, அநந்தங் கோடி கணக்கான ஜீவராசிகளைக் கொல்லாமல் ரக்ஷித்த நன்மையிலும், கோடிக் கணக்கான ஹஜ்ஜுக்கள் செய்த பலாபலனிலும் அதிக நன்மை யுள்ளது என்று நபிமார்களும், குத்புமார்களும் சொல்லி இருக்கிறுர்கள். எ-று.

எல்லாவுலமாவு கபியுஞ் சொன்னு ரெவரு முஅுச் செய்து தொழவும் வேண்டும். பொல்லாங்கு பொய்யும் பெருமை கோபம் பொங்கு நித்திரை ஹறும் பகிலுஞ், சொல்லும் வகையேழும் விலக்கி வைத்துச் சுருதி நிலைபற்றோ ருருவில்லாத, அல்லா வணக்கத்தை வணங்கினோர்களாவா ரவர்க்கச்ச மொருநாளில்லை. (116)

(இ-ள்):— இன்னும் எல்லா நபிமார்களும், உலமாக்களும், உலகத்தார்கள் உஅூச் செய்து தொழ வேண்டும். எப்படியானால் புறணி, கோள், பொய், அகம் பெருமை, ஜினு, கோபம், லோபித்தனம், இந்த ஏழு பாதகங்களையும் விட்டு மனமுருகினவர்களாகத் தொழுதால் அந்தத் தொழுகையானது ஆண்டவன் இடம் போய்ச் சேரும். அவர்கள் தான் நரகத்தின் பயத்தை விட்டும் நீங்கினவர்கள். எ-று.

ஒருவர் மனதுக்கு ளிருக்கும் வகை பொருவருக் கொருவர் தாமீயா வகை, பெரியோர் நாளையிற் றேடுநிதி பின்னுமவர் தேடு நிதியுமாகு, மரிய விசுவாச நன்மை தீமை யார்க்கும் பெரிதானமான வெட்கம், பெரிய வயதோடு வைந்து வகை பின்னு லொருவர்க்கு மீயாப் பொருள். (117)

(இ-ள்):—இன்ஸான்களுடைய மனதில் இருந்து ஊசாடுகின்ற பொருளான ஒருவர்க்கொருவர் கொடுக்கல் வாங்கல் செய்துக் கொள்ளாத பொருளாக இருக்கும். நாதாக்கள் உலகத்தில் சம்பாதிக்கும் இபாதத்து முதல்களானது கியாம நாளையில் அவர்களுக்குத் திருப்பிக் கொடுக்கின்றதாக இருக்கும். இன்னும் ஐந்து கருமங்கள் யாரிடத்திலும் சொல்லப்படாதனவாக இருக்கின்றன. எ-று.

யொருளாமைந்தையு மீய்ந்த போதும் புவியி லிருக்கு தொன்றுரைக்காவகை, யறியுந்திறமான விசாரமான்மையான கல்வியும்பாவ நன்மை, புரிய கருவித்தை யட்டகோண முலவா உக்கையுமாதரின்ப, மறையும் பலஞான முடற்கூற்றையும் வாய்விட்டு வெளிபேசொண்ணுதே. (118)

(இ-ள்.):—அந்த ஐந்து கருமங்களாவன:—தன் ஆண்மைத் தனம், மனவிசாரம், தான் செய்யப்போகு முயற்சி, உடற்கூறு, தன் பெண்சாதி யிடத்தில் அனுபவித்த சம்போகம், ஆகியவைகளாகும்.

இன்னும் மந்திரவகை முதலானவைகளையும் சொல்லப்படாது, என்பது பெரியோர்களின் கொள்கை. எ-று.

பேசும் வகையெல்லாம் பேசினாலும் பேசாவகையின்ன மொன்றுண்டுகேள், ஏசி பெறிந்துதான் கோபமாகி வென்கிட்டனு காதேயெனத்தூஷித்து, நேசமனங்கோ பந்திரும்பும்வகை நிதமுந் தொழுதல்லோ கால்பிடித்துப், பேசுங் குருவின் னுபதேசத்தைப் பின்னலொருவர்க்குப் பேசொணுதே. (119)

(இ-ள்.):—ஒரு சமயம் இந்த கருமங்களைப் பேசின போதைக்கும் இன்னமொரு மஹா கருமம் இருக்கிறது. அதை யாருக்காவது சொன்னால் பாவியாவான், அதாவது சற்குருவானவர் தன் சிஷனை சினந்து பேசி நீ என் சமூகம் வராதே போடா, என்று அவமானமாகத் திட்டி விரட்டினாலும், அவர் வீட்டு வாசல் காக்கின்ற நாய்க்குட்டிபோல் கிடந்து பணிவிடை செய்து பெற்றுக் கொண்ட ஞான உபதேச மர்ம வார்த்தையைமாத்திரம் யாரிடமாவது சொல்லி விடப்படாது. எ-று

பேசா வகையெல்லாங் கொடுக்காவகை பெரியோனுலகெல்லா மறியச்சொன்னே, னீசமாய்த் தனக்குத் தானென்று நினைவிலுஞ் சற்று நினைக்காப்பொரு, ளாசை யோசையு மருணிறைந்த அல்லா வொளிவான அரும்பொருளை, நீசமாய்த்தனக்குத் தானென்று நினைக்காப் பொருணிலத் துரைக்கலாமோ. (120)

(இ-ள்.):— அந்த கருமமானது மிகவும் பாரதூரமானது, உலகத்தில் தனக்கிருக்கின்ற எந்த ஆஸ்திகளைக் கொடுத்தாலும் அதைமாத்திரம் கொடுக்கவே படாது. அதைப்பற்றித்தான் அல்லாவும் இரேயமெல்லாம் ஜாக்கிரதைப்படுத்தி மிஃறுஜில் சொல்லி இருக்கிறுன். இன்னும் அதன் பெருமையை யாராலும் சொல்ல முடியாது. எ-று

உரைத்தா லுலகத்தில் வருங்கொடுமை யுள்ளதுன்பமுந் துயரங்கோடி, பெருத்த குடியன்றுன்களவு செய்தான் பின்னும் ஹறுங்கொலை செய்தானென்றும், ஷறுகி னேவலை விலகி வைத்துச் சறகைக் கெடுத்த சண்டாளனென்று, பெருத்த முணி படுதூறவர்க்கும் பேசாவகை யல்லோ தாத்துவகை. (121)

(இ-ள்.):—அடமகனே! நீ அந்த மர்மத்தை வெளியிட்டால் அந்த ஸாபத்தாலே உனக்கு வரக்கூடிய கேடோ ஒருமட்டுத்திட்ட முள்ளதல்ல, அது கொண்டு உலகத்தார்கள் எல்லாம் தெருவுக்குத் தெருவாயும் மூலைக்கு மூலையாயு மிருந்துக்கொண்டு இவன் கள்ளுக் குடிக்கிற வெறியன். அந்த வெறிமீறி வாய் பிதற்றுகிறான் என்றும் இன்னும் ஜினு ஹறும் செய்கிறவன், ஆண்டவனுக்கும், ஷறஉக்கும் மாறு பேசுகிறான், இந்தச் சண்டாளனுக்கு குபிர்க்கலிமாச் சொல்லிக் கொடுக்க வேண்டுமென்று சொல்லி, அதோடு தாங்கமுடியாத கெடுதிகளையும் செய்து தூற்றுவார்கள். இதுபோக தன்னை யறிந்த சாதுக்களான மஹான்களுக்கும் சொல்லக்கூடாத காரியம் எது என்றால்! அதுதான் கீழே பேசப்போகின்ற தாத்துடைய ரகசியமாக இருக்கும். எ-று.

மஸலாக்கேட்கும் வகை முற்றிற்று.

---

# தாத்து வகை.

தாத்து றகுமத்துக் கடனிறைந்த ரகசியந்தனைச் சொல்லக் கேளும், வார்த்தைக் கடங்காத கடல்வலுப்பும் வருட மாயிர மனந்தங்கோடி, சேர்த்துக் கடலோட யிருந்தகாலஞ் செப்பத் தொலையாதே யவராலுந்தான், கோர்த்துக் கடலெல்லாஞ் சூடுண்டாக்கிக் கொழுந்து புகையினாற் கொதியுண்டாச்சே. (122)

(இ-ள்.):—தாத்தானது றகுமத்தென்கிற கடலில் நிரம்பி நின்றது. அந்த ரகசியத்தைச் சொல்லவேண்டுமானால் முதலாவது அந்தக்கடலின் வல்லபமானது எந்த ஞானிகளாலேயுஞ் சொல்ல முடியாதே முடியாது. இவ்விதந்தன்மையுள்ள அந்தக்கடலில் மேற்படி தாத்தானது ஆயிரங்கோடி வருஷ காலங்களாக இருந்தது. இவ்விதங் கணக்கற்ற காலங்களாக இருந்து வருகையில் அதனுடைய காங்கையால் அந்தக் கடல் முழுவதும் கொதித்து விட்டது அதனால் புகையும் தழும்பிற்று. எ-று.

கொதித்த கடலதிலெழுந்தநுரை கோலம்வெள்ளையாம் விருத்தமாக, விதத்தி லாயிரங்கோடிகாலம் வெள்ளை நிறமெல்லாங்

குருதிபோல, மிதுவு மாயிரங் கோடிகால மிருந்து செந்நுரை சதையுமாகி, மதிப்பிலடங்காத கண்மணிபோல் மன்னன் சதைநடுத் தெளிவானதே. (123)

(இ-ள்):— அவ்விதங் கொதித்த நீரில் நின்றும் வெள்ளை நுரைகள் உண்டாயிற்று. அப்பால் அதன் நிறமாறி இரத்தங்களாகப் பிரிந்து ஆயிரங்கோடி வருஷகாலம் இருந்தது. அப்பால் அந்த இரத்தங்களெல்லாங்கூடி சதையாயிற்று. அப்பால் மதிக்க முடியாத மணியின் உருவம் போலத் தெளிவு உண்டாயிற்று, எ-று

தெளியுமாயிர மனந்தங்கோடி திரண்ட சதையெல்லாமிருண்ட குகை, யொளிவு திரண்டுவெண் டாளமாக வொருநூறு கோடி காலஞ்சென்று, சுழியாம் வலம்புரி முளைதிரண்டு சூடுஞ் சுடரொளி சுழன்றதெங்கே, யொளிவு திரளெல்லா மகலமாற்றி யோசையு வந்தது தன்னைத்தானே. (124)

(இ-ள்):— அப்பால் அந்த உருவமான தெளிவானது ஆயிரங் கோடி வருஷகாலங்களாக ஒரு இருண்ட குகையில் ஒரு வெள்ளை முத்தாகப் பிரண்டு அதுவும் நூறுகோடி வருஷம் அவதாரங் கொண்டிருந்தது. அப்பால் அந்த தாத்தானது தன்னைத்தான் விஸ்தாரம் பண்ணும் பொருட்டு அந்த முத்துக்கு ஒரு வலம் புரிச்சங்காகச் சூட்சஞ்செய்து அநந்தங்கோடி வருஷங்களாக சப்தித்துக் கொண்டிருந்தது. எ-று.

தன்னை வணங்கிய மூச்சுறாகாய்த் தானே கூவென்று தாத்தே யென்னும், இன்னம் பிசுமிலும் கொபூறுர்ராஹீம் என்ற முழக்கமு முத்தொளியும், விண்ணி லெழுந்துவிண் சரத்தைக்காண வெள்ளை மரகத வித்துகாதந், தன்னுலெழுந்திடு நுக்கத்துமாகத் தரித்த விருளிலே யிருந்ததாமே. (125)

(இ-ள்):— அவ்விதம் முழங்கிக் கொண்டிருந்த மூச்சானது தான் ஹூ வென்கிற தாத்தாக இருக்கும். அது சப்தித்த சப்தமானதுதான் பிஸ்மிலும், கபூறுர் றஹீமுமாக இருக்கும். அப்போது அதற்குள்ள நிறங்களாவது பச்சை அநந்தகாலம், வெள்ளையநந்தகாலமாக இருந்தது. அதன் அந்தஸ்தானது நுக்தாவாக இருளில் புதைத்திருந்தது. எ-று.

இருந்த நுக்கத்து நீண்டலிபா யெழும்பியிருதலை நுக்கத்து நூறுஞ், சிறந்த பதிறுவிதமொன்றுக்குச் செப்புமாயிர மனந்த மாண்டு, பொருந்தித் தேட்டமாய் நடுநுக்கத்தைப் போற்றியிருந்தே நபிநடுவில், வருத்தி யறுநூற்றைம்பதுகோடிதான் வருடமிருந்தபின் வகையைக்கேளே. (126)

(இ-ள்):— இவ்வித மிருந்த நுக்தாவானது மீண்டு அலிபாகப் பிரிந்தது. இரண்டு தலைகளிலும் தன்னை நிலையாக நாட்டிவைத்து கொண்டது. அதில் பதிறு கருமங்களை அடக்கினது. அதில் ஒவ்வொரு விதங்களுக்கும் ஆயிரம் ஆயிரம் வருஷம் சென்றன. இந்தப் பதிறு விதங்களுக்கும் இடை இடையே முஹம்மதாக இருந்து அந்த தாத்தை ஸ்தோத்திரஞ்செய்து கொண்டிருந்தது. இப்படியாக அந்த அலிபுடைய மகாமில் அறுநூற்று ஐம்பதுகோடி வருஷம் இருந்தது. எ-று.

வகையாய்த் தேட்டவெண் டரளமாக வல்ல பெரியவன்வளைவுக்குள்ளே, நகையா நபியொளி நற்பவள நடுவாயிறைவைத்துக் காக்கும்போது, தொகையாயிரண்டரை நூறுகோடி தோற்று மொளிநூறுந்தானுமாகி, வமையாயிருதிலை வேறொன்றாக வளர்ந்தே அலிபாக விருந்ததாமே. (127)

(இ-ள்):—இவ்விதமிருந்த வெள்ளை முத்தானது ஹூவாகவும், அதை வணங்கிக் கொண்டிருந்த முஹம்மதானது செவ்ந்த பவளமாகவும் இருந்து வரும்போது, இருநூற்று ஐம்பது கோடி வருஷங்களாகிற்று. இவைகளின் அட்சரங்களாவன என்னவெனில் முஹம்மது ஒளிவாகவும், ஹூ தாலாகவும் இருந்து இரண்டும் ஒன்றாகக்கலந்தே அலிபாய் நின்றது. எ-று.

அலிபி அலிபது தவளம்போலும் ஆதியொளிவு வெண்டரளமாக, வொலியா முஹம்மது லாஇலாஹ இல்லல்லாஹூ வென்றோதுங்காலை, வலிய இறையவன் முஹம்மதுர்ற சூலென்று உரைத்தல்லோ தீனிலானன், சலியாமுஹம்மது பிறவிதீனும் சகலம்படைத்தவன் மவுலாவாமே. (128)

(இ-ள்):— ஆனபோதே அந்த அலிபில் முஹம்மதானது முத்தாக இருந்து இலாஹ லா இல்லல்லாஹூ என்கிற திக்றைச் சொல்லிக் கொண்டிருந்தது. அதைக்கேட்ட அலிபானது அதன்

யேரில் கிருபை பொங்கி பதில் ஜவாபாக முஹம்மதுர் றசூலுல்லாஹி என்று சொல்லிற்று, இதனுல்தான் முஹம்மதானது உற்பத்தியே இஸ்லாமாயிற்று. அல்லா மௌலாவாகி விட்டான். எ-று.

மவுலாதனைகபி வணங்குநாளின் மன்னுன் முஹம்மதை வணங்கி நின்ரு, னவுலாக் கொன்பது லக்ஷமாண்டு நாயன் முஹம்மதை நாடிகாடி, அவுலாகின்றண்டு மொன்ருய்க்கூடி யந்தமுன் சொன்னகால மட்டு, நவுலாக்கொன்பது லக்ஷந்தர நாயன் கூடிப்பின் பிரிந்ததாமே( )

(இ-ள்):— அப்பேர்க்கொத்த அலிபான மௌலாவே முஹம்மதை வணங்கி நின்ருன். ஒன்பது லட்சம் வருஷகாலம் வரையிலும் முஹம்மதை அல்லா தன் மஉஷூக்கின் மகாமில் வைத்து இஷ்கில் மிதந்தான். அவைகள் இரண்டும் இஷ்கில் நின்றும் ஒன்பது லட்சந்தடவை பிரிந்து பிரிந்து சேர்ந்து கொண்டன. எ-று.

பிரிந்தா ரொன்பது லக்ஷந்தரம் பூண்டங்கிருந்துபின் பிரியுங் காலே, யிருந்த முத்தொன்று பவளமொன்று மின்னம் பவளத்தின் ஒளிவு பொங்கிச், சிறந்த பச்சையாம் அலிபொன்றுதான் சேர்ந்து வேருென்று தலைமூன்றுமாங், குறைந்திடா முத்துப் பவளம் பச்சை கூடி யிருந்தகா டன்னைக்கேளே. (130)

(இ-ள்):— அலிபும், நாறும் இவ்வித இஷ்கில் இருந்துப் பிரியத் தொடங்கினவுடனே, அந்த பவளமானது தன்னில் நின்றும் ஒரு பச்சை ஒளிவை ஜெனித்தது. அந்த பச்சையானது ஒரு அலிபின் சூறத்தில் தான் இருந்தது. அதற்கு மூன்று தலை யிருந்தது. இவ்விதம் முத்து, பவளம், பச்சை யென்னும் மூன்றும் கூடி இருந்த விதத்தைக் கேளுங்கள். எ-று.

இருக்கு மொருகோடி வருடமட்டு மீணையு மொருகோடி வருடமட்டு, நெருக்கி யொருகோடி தாமிருந்து நீண்ட சுடர் மூன்றும் பிரிந்துவேறே, இருக்குஞ்சுடர் மூன்றும் வணக்கமொன்ரு யிருந்த விதமல்லோ தாத்தென்பதிங், குறுக்கமான சிபாத்துந்தனை யொக்கக் கேளுங்கா ளுலகத்தாரே. (131)

(இ-ள்):— இந்த முச்சுடர்களும் ஒருகோடி வருஷங்களாக ஒன்றுகூடி இருக்கும். அப்பால் ஒருகோடி வருஷங்களாக வேறே

பிரிந்து இருக்கும். இந்த முச்சுடர் ஒன்றுகூடி இருந்து வணங்கின வணக்கந்தான் தாத்தென்று சொல்கிறது. இனிமேல் சிபாத்தின் வகையைச் சொல்கிறேன். எ-று.

தாத்துவகை முற்றிற்று.

---

## சிபாத்து வகை

உலக மமைக்குமு னொருவனுய னொளிவிற் பிறந்தவர் முஹம்மதியா, நிலையின் முஹம்மதி னொளிவளர்ந்து நின்ற அலிபொன்று அலிபாயிறைவ, னுறுக்கிப்பார்க்க வைத்தாய்ப் பிரிந்தபின் வகையேதென்றால், அலிபுலாமுடன் ஹேயுமீமும் அணிந்ததாலைந்து மெழுத்துமாச்சே (132)

(இ-ள்):— இவ்விதம் பவளத்தின் வடிவிலிருந்த முஹம்மதை ஹக்குவானது உறுக்கிப்பார்த்தது. அந்த உடனே அது ஐந்து வகையாகப் பிரிந்தது. அவைகள்தான் அலிபு, லாம், ஹே, மீம் தால் என்பவைகளாக இருக்கும். எ-று.

எழுத்து மைந்ததா யானதற்பி னென்கோனசையாமலிருத்திப் பார்த்தான், வெழுத்து மொன்றென்று மைந்தெழுத்தாலிறை முனிருப்பதைத் தறையிலாக, வழுத்தி யிறைமுன்னே அல்ஹம் தென்றுமமைந்தே யிருபத்தைத் தறையினிற்கு, முழுத்த மாகவே றஹுமத்தென்னு முன்னுஅுரைத்திடுங் கடலின்மேலே. (133)

(இ-ள்):— பவளமானது ஐந்து வகையான கோலங்கள் கொண்டதன் பின்னால் அதன் அருகாக இருந்த பச்சையாகிய எம்பெருமானை முஹியத்தீனானது யாதொரு அசைவும் அற்று நிரத்துடன் இருந்தது. அப்பால் அந்த ஐந்தும் அல்ஹம்தென்று அந்த ஹக்கை வைப் புகழ்ந்தது. இவ்வளவும் றஹுமத்தென்கிற கடலின் மேலாக இருக்கும். எ-று.

மேலே அலி பென்ற பவளந்தன்னை மிகவு நிறுத்தியே மகிழ்ந்து பார்த்தான். ஆலம் அஹதென்று கிருபைப் பார்வை யந்தயலிபு தான் பிளந்திரண்டாய்ப், பாலி னிறத்திலே ரண்டாறு தான் பாரக் கடலினி லோடும் போது, வாலுக் தலை நடு வளைவு மூன்றாய் வல்லோன்திரு முன்னே ஐனுமாச்சே. (134)

(இ-ள்.):—அலிபான வடிவில் இருந்த அந்த பவளத்தை ஹூவானது தன் இஷ்கில் நிற்க வைத்து ஆசையுடன் பார்த்தது. அந்தப் பார்வைக்குத் தான் ஆலம் அஹது என்று சொல்லப்படும். அந்தப் பார்வையால் அந்த அலிபானது பிளந்து இரண்டு சுவர்களாகப் பிரிந்து இரண்டு ஆறுகளாகவும் அந்த ஆறுகள் இரண்டும் இரண்டு ஐன்களானது. எ-று.

ஐனு யிருவிழி யவனொளிவாமந்த ஒளிவிலேமீமானது, கவியா மீமந்தக் கடலின் மேலே காட்சிக் கிருபையா னோக்கும் போது, புவியை சமைத்தவன் திருப்பாலினிற் புகழ்ச்சி முஹியித்தீனொரு மீமுமாங், கவியா லொருமீமை அஹ்மதென்று கத்தன் கிருபை கொண்டுரைத்ததாமே. (135)

(இ-ள்.):—ஐன்கள் இரண்டும் இரண்டு கண்களாக மாறி மீமானது. அந்த மீமைப் பார்த்தான் பார்த்த உடனே மீமிலிருந்து ஒரு மீம் வெளியாயிற்று. அது தான் முஹியித்தீனாக இருக்கும். முன்னிருந்த மீமானது அஹ்மதாக இருக்கும். இவைகள் இரண்டுக்கும் பேர் நாமஞ் சூட்டினது ஹூவாக இருக்கும். எ-று.

உரைத்த மீமொன்று முஹம்மதியா வுயர்ந்த நுபுவத்துவுமக்கா மென்றும், பொருத்தமாகிய விலாயத் தெல்லாம் புகழ்ச்சி முஹியித்தீன் உமக்கே யென்றுங், கருத்தின் முஹியித்தீனீண்ட மீமைக்கத்த னெடுத்தவன் மடியிலேற்றி, வருத்திக் கடன் மேலே செய்த தென்னவடிவுக் கிருபையா லிணங்கிப் பார்த்தான். (136)

(இ-ள்.):— அந்த சூறத்தில் வைத்து ஹூ வென்னும் றப்பானது, அஹ்மதிய்யா வென்னும் மீமை நோக்கி உனக்கு நுபுவத்தை ஆஸ்தியாகத் தந்தேன் என்று சொல்லி, அப்பால் முஹியித்தீன் என்னும் மீமை நோக்கி உனக்கு விலாயத்தை ஆஸ்தியாக்கினேன் என்று சொல்லி, உடனே அந்த மீமை தன் வசத்தில் வைத்து அருமைப் பாராட்டினான். மேற்படி மீமானதை றப்பு தன் கிருபையான பார்வையாகப் பார்த்தான். எ-று.

பார்க்க மீமுட தேகமெல்லாம் பத்தி ஜலமாக வேர்க்கும் போது, கோர்க்கும் வேர்வைதா னொருமுத்தாகக் கொழுகு மீமுள்ளேயொளிவு மாகிப், பார்க்க றகுமத்துக் கடல் விரிந்து பத்து நாவுமாயப் பகுந்ததப்போ, ஆக்கமாகவே நாவொன்றுக்கு மாதி திரு நாம மோதினனே. (137)

(இ-ள்.):— பார்த்ததும் அந்த மீமின் சரீர மெல்லாம் ஜலமாக உருகி வேர்த்து அந்த வேர்வையில் நின்றும் ஒரு முத்து உற்பத்தி யாகி அதுவே றகுமத் தென்கிற கடலாயிற்று, அந்த முத்துக்கு பத்து நாவுமாயிற்று. அந்த நாவுகள் ஒவ்வொன்றுக்கும் றப்பானவன் ஒவ்வொரு திருநாமமும் சூட்டினன். எ-று.

நாதன் கடனுமம் நினைவறிவு, நாமம் பக்கிறு கபூறு வென்று மோதும் இல்மைத்து சபூறுமாகு மொரேழறுஷுக்குநிக மெட்டாகு, நீதி றகுமத்தி ஞெளிவுபத்தா நிகரில்லாக் கடலொவ்வொன்றுக்குச், சோதியொளி மீமாய்த் திரண்டமுத்தைச் சொன்னு னெனைத்தானே புகழுமென்றே. (138)

(இ-ள்.) அந்த நாமங்களில் முக்கியமானது கண், நினைவு, அறிவு, பொறுமை, பகிறு, கபூறு என்ற இவைகள் ஐந்துமாக இருக்கும். இந்தப் பத்து நாவுள்ள மீமானதைப் பத்து பகுப்பாக்கி ரஸ்லாக் கென்னும் கடல் முதலான பத்து தலங்களில் வைத்து ஏ மீமே நீ என்னைப் புகழ்வாயாக, என்று சொன்னன். எ-று.

புகழுமெனச் சொல்லக் கடலொன்றுக்கும் புகழ்ந்தா ரொறுநூறு கோடியாண்டு, மகிழு மாயிரங் கோடிகால மன்னன் கடல்பத்தின் மகிழ்ந்து முத்து, முகளும் பொருந்திய கடலின் முத்து முறுதிக் குறுதியோர் சுரூபமாகப், பகரும் அஹுமது முஹம்மதென்றும் பாங்கா மஹுமூது ஹாமிதென்றே. (139)

(இ-ள்.):— றப்பு இவ்விதஞ் சொன்ன உத்திரவின் படி முஹம்மதானது ஒவ்வொரு கடலிலும் இருந்து நூறு கோடி நூறு கோடி வருஷங்களாக ஸ்தோத்திரஞ் செய்தது. அப்பால் அந்தப் பஹறுக் கடல்களிலும் இருந்த முத்துக்களை றப்பு அனேக மகிழ்ச்சி யுடன் அழைத்து அவைகளுக்கு அஹமது, முஹம்மது, மஹ்மூது, ஹாமிது என்னும்

(இன்னும்)

என்று யாசீனுந் தாசீனுமாமின்னனந்தாஹாவும் ஹாமீமுமா, யெனவே காபோடு ஸாதுமாக வித்த வகையாக வணங்கும்போதி, லன்றே நபியொளி விறையைநோக்கி யருளுங் காபக்கபு சைனி யென்று, கண்டே மகிழ்ந்திரை கிருபை பொங்கிக் கண்ணே மணியே நீர் வாருமென்றார். (140)

(இ-ள்):— யாஸீன், தாஸீன், தாஹா, ஹாமீம், காபு, ஸாது, இந்தப் பத்து திருநாமங்களைச் சூட்டினன். இவ்விதம் புகழ்ந்து வணங்கி வரும்போது, முஹம்மதியாவானது, றப்பை நோக்கி, "காப கவ்ஸைனி" என்று திக்று சொல்லிற்று. அதைக்கண்ட றப்பானவன் ஆ! என் கண்ணே! மணியே! நீ என் சமுகம் வா! வா! என்று சவலை பாராட்டினன். எ-று.

வாரு மெனச்சொல்லி வருத்தினனே வருடமாயிரம் கோடி நீளம், பார வகலமு முயரநீளம் பதினறு கோணஞ் சரிநிதான, நூறு முஹம்மதென் றிறையுரைத்தா னெடியிற் பறந்திரை திருமுன்வந்து ஆறு நூருண்டு கோடிகாலம் அஹதும் அஹ்மதும் ஆசையாகும்

(இ-ள்):— இவ்விதம் வா, வா, என்று ஆயிரங்கோடி வருஷ மட்டிலும் அழைத்தான். அந்த முஹம்மதியாவானது அகலத்திலும், நிகளத்திலும் பதினறு கோணமாக நிரம்பிய ஒளிவாக எழுந்து நின்றது. அப்போது றப்பு யா நூறு முஹம்மது என்றழைத்தான். அந்த உடன் முஹம்மதானது சீக்கிரம் பறந்து வந்து தன்றப்பிடத்தில் வந்து நின்றது. அழைத்த அஹ்தும் வந்த அஹ்மதும் அறு நூறு கோடி வருஷம் மட்டிலும் இஷ்கில் கலந்து பின்னிக் கொண்டிருந்தது. எ-று.

ஆசக்கானது அல்லாவுமாம் அண்ணன் முஹம்மது மருஷிக் குமாம், ஓசையாகவே பெரிய நாயனுரைப்பான் யாகபூ றென்று சொல்லி, நேசமாகவே முத்தொளிவு நெகிழும் யாறஹீ மென்று சொல்லி, யாசையோசையா யாணும் பெண்ண யணைந்தங்கிருந்த நாளனந்தங்கோடி. (142)

(இ-ள்):— றப்பென்கிற ஆஷிக்கும், முஹம்மதென்கிற மஉஷூக்கும் கலந்த காலங்களில் அல்லா "யாகபூர்" என்று திக்று சொன்னன். அதற்கு முஹம்மதானது றப்பை நோக்கி யா றஹீம், என்று புகழ்ந்தது. இப்படியாக றப்பும், முஹம்மதும் ஆணும், பெண்ணுமாக அணைந்திருந்தது எத்தனையோ கோடி வருஷங்களாக. எ-று

அனந்த மாண்டுதான கண்டிருக்கு மனந்தமாண்டுதா னுவந்திருக்கு, மனந்த மனந்தமா மனந்தங்கோடி அஹதும் அஹ்மது மணைந்திருந்தே, இணைந்து பிரிந்து பின்னிறை முன்னுக

விலங்கு முகத்தைப் பார்த்தேது சொல்வா, னுணர்த்த துணைவனே யுயிர்த் தோழனே யோதுகிறேன் சற்றே கேளுமென்றான். (143)

(இ-ள்):— இவ்விதம் இணைபிரியாமல் அணைந்திருந்த அஹதும், அஹ்மதும் கோடானு கோடி காலம் பிரிந்தும் கூடியும் இருக்கும்போது றப்பானவன் முஹம்மதை நோக்கி, ஓ என் மஹபூபே! என் ஹபீபே, ஒரு செய்தி சொல்லுகிறேன் கேளென்றான். அதாவது:— எ-று.

என்றுந் துணையாக வுமைவகுத்தே னென்னோடிணங்கி நீ ரென்னுவினால், விண்டு பெருவீர்காண் மதலையாகவேண படைப்புக்கு மாதாவு நீ, ருண்டு படைப்பெரும் படைப்புக்கெல்லா மொழி வனல்லோ பிதாவுமானே, னன்று யென்னோடு முமையுங்கூட காடார் நரகத்துக் கிரையாக்குவேன். (144)

(இ-ள்)— உன்னை நான் இவ்விதம் அன்பாக வைத்து என் நாவால் புகழ்ந்தபடியாலே, இனி நான் படைக்கும் சராசர கோடிகளுக்கெல்லாம் நீயே தாயாக இருப்பாய். அவைகளின் கருப்பொருளாக நீ இருப்பது கொண்டு நான் உனக்கு தகப்பனாக இருப்பது கொண்டு நான் தகப்பனாக இருக்கிறேன். நாம் இரண்டு வஸ்துக்களையும் நாடாதஜனங்கள் யாவரும் நரகத்துக்கு அனுப்பி வைப்பேன். (இன்னும்)

ஆக்கையெடுத்தபின் னறிவினாலே யாருமொருதர முமையு மென்னை, நோக்கிப் பார்த்தவர் நமதுகுல நோக்கன் பிழையெல்லாம் பொறுத்துக் கொள்வேன், வாக்கி லுமைத்தள்ளி யெனைப் புகழ்ந்தால் வருத்தும் விதமென்ன தெர்கைதான் சொல்வேன், தாக்குமென துடமுனிவுகோபம் தரத்திலடங்காவென் றிறைவன் சொன்னான்.

(இ-ள்):— சரீரம் இருக்கும்போதே நமது ரகசிய இல்முகளைக் கண்டு தரிசித்த பேர்களை நம்மோடு வந்து கலக்கும் படியாகச் செய்வேன். உனது சொல்லுக்கிணங்கி வழிபட்டவர்களின் பிழைகளையும் பொறுத்து அவர்களை ஈடேற்ற மாக்கிவைப்பேன். உன் சொல்லுக்கிணங்காமல் தூஷிக்கும் பெரும்பாவிகளை, நான் படுத்தும் துன்பங்களை இவ்வளவென்று சொல்ல முடியாது. என்று சொன்னான். எ-று

சொன்ன விறை முன்னே சுடர் மொழியுஞ் சோதிபெரியோனே யுருவிலானே, யென்னை யுருவமா யமைத்த கால மிலங்குமதை யெல்லாம் வகுத்த காலந், தன்னை யறிந்ததா லெனையுமுன்னே தாத்தினிலை யெல்லாம் வரத்தினல்கு, மின்ன மெதுகேட்கிற்றடை யில்லாம விறையே யெனக்கு நீ கொடுப்பா யென்றார். (146)

(இ-ள்):— றப்பானவன் சொன்ன இத்தனையும் முஹம்மதானது கேட்டு, றப்பே! என்னை நீ இத்தனை கோடி காலமாக வைத்திருந்த ரகசியத்தைக் கண்டு மூல இல்முகளில் தரித்து தவத்தில் இருந்து வரும் என் சீஷர்களுக்கு எனக் குரித்தான தெல்லாம் நீ கொடுத் தருள்வாயா? என்று கேட்டது. எ-று.

கொடுப்பாயெனச் சொல்லக் கொடுத்தே னென்று குதறத் திறை முத்தை கொழுகிப் பார்த்தான், கடுகி யிறைபார்வையறு கோணமாய்க் காணும் விருத்தமாய் நடுவிற் பச்சை, படவுற்றிருகோணங் கருநிறமாய்ப் பத்தி நெருப்பிலே முத்து வெந்து, நடுவில் ஹாமீமா யொளிவு நின்ற நபியுமிறை முன்னே குதித்து நின்றார். (147)

(இ-ள்):— இவ்விதம் கேட்க உடனே றப்பு என் ஹபீபே! அப்படியே கொடுத்தேன், என்று சொல்லினான். சொல்லி விட்டு உடனே றப்பு அந்த முத்தை உறுக்கிப் பார்த்தான். பார்த்ததும் அந்தக் காங்கையால் அந்த முத்தானது ஆறு கோணமாக வட்ட வடிவமாக நடுவே பச்சை நிறமாக கோணங்க ளெல்லாம் கருநிறமாக ஆகி வெந்து நடுவே ஹாமீம் என்ற அட்சரத்துடன் ஜொலித்து நின்றது. எ-று.

நின்றாரிறைமுன்னே யொளியாய் நபி நீதி பெரியோனே அஹதா யென்று, வன்றே யிறை நாறு முஹம்ம தென்றும் அஹ்மதே ஹாமீமெனவுரைத்தா, னன்றாய் முஹம்மது லெப்பைக் கென்று நாயன் பரத்திலே ஸுஜூதிலானார், பண்டேயுரைத்திடு மொளிவு முத்துப் பத்தியெரிந்துதே பாரத்தீயில். (148)

(இ-ள்):— நின்ற அந்த ஒளிவானது றப்பைப் பார்த்து "யா அஹது" என்று திக்று செய்தது. அதற்கு றப்பு ஒளிவைப் பார்த்து யாஹாமீம், என்று, சொன்னான். அப்போது முஹம்ம தானது "லெப்பைக்" என்று சொல்லி ஸஜதாவில் விழுந்துகிடந்தது. அந்த உருகலான நெருப்பில் மேற்படி முத்தானது வெந்து நீறிப் போயிற்று. எ-று.

திபட்டெரிந்த திருக்கோணமாய்த் திரண்ட புகை யெல்லாம் வானமாக, வேர்பட்டொன்றுமே லொன்றுமாக, 'வேழு தட்டுமா யிலங்கிநிற்கு, நேர்பட்ட முத்து வெந்துருகி நீரு மிருகோண முதிரவன்ன, மேற்பட்ட நீரி லெழுந்த நுரை யேகிநிறம் வெள்ளை திசையுநாலே. (149)

(இ-ள்):— அப்படி வெந்த முஹம்மதின் காங்கையானது, இருகோணமாகிப் புகைந்தது. அந்தப் புகையில் நின்று ஆகாயம் உண்டாயிற்று. அப்பால் அந்த காங்கையானது ஒன்று மேலொன்ருக ஏழாக நின்றது. அந்த ஏழும் ஏழடுக்கான வானங்களாயிற்று. அப்பால் அந்த முத்தி லிருந்து வியர்வை நீர் ஜொலித்தது. அதிலிருந்து நுரைகள் கிளம்பி நாலு பிரிவாகி அந்த நாலும் நாலு திசைகளாயிற்று. எ-று

நாலு திசையாகும் பூமியேழு நாயன் கிருபையா லமைத்த பின்பு, ஆல நிறைந்திடு மாதி நாயனண்ணல் முஹம்மதே யெழுந் திருங்காண், பால னிருபத்தைந் தறையினின்று பஞ்சாக்ஷரத்தை நீர் படியுமென்ரு, ஞலம் நிறைந்திடும் அஹ¬மதியா அல்ஹம் தெனச் சொல்லிப் படித்ததாமே. (150)

(இ-ள்):— அந்த நாலு திசைகளில் நின்றும் ஏழு பூமிகளான தீபகற்பங்களும் உண்டாயிற்று. ஸமஸ்த உலக பூஷணதிகளும் சமைந்ததின் பிறகு றப்பானவன் முகத்தை நோக்கி "யாமுஹம்மத் எழுந்திரு" என்று விளித்தான். உடனே எழும்ப, றப்பானவன் ஒளிவை நோக்கி உன்னை இருபத்தைந்து ரகசியத்தில் வைக்கிறேன் நீ நமது பஞ்சாட்சரத்தை உச்சரி, என்ருன். முஹம்மது அல்ஹம்தை திக்று செய்தது. எ-று

படித்தவுடனே தான் பஞ்சாசரம் பகுந்திங் கிருபத்தைந் தெழுத்தாய்விண்டு, விடுத்த அலிபைந்து லாமுமைந்து விளங்கும் ஹேயைந்து மீமுமைந்தா, மடுத்ததாலைந்து மிருபத்தைந்த மாதி திருமுன்னே நிற்கும் போது, தொடுத்த வனைத்தையும் விடுத்து வல்லோன் சொன்ன னினைத்தேனுன் முடியுமென்றே. (151)

(இ-ள்):— அந்த உடனே அந்த அல்ஹம்தான பஞ்சாட்சர மானது அலிபு ஐந்து, லாம் ஐந்து, ஹே ஐந்து, மீம் ஐந்து, தால் ஐந்து ஆக இருபத்தைந்தாகப் பிரிந்து விட்டது. அந்த

இருபத்தைந்து அட்சரங்களையும் றப்பு நோக்கி என் நாட்டமானது இவைகளால்தான் முடிவடையப் போகின்றது என்றான். எ-று.

முடியுமெனச்சொன்னான் முதல்வனாதி முன்னால் அலிபைந்த தானவாறு, மடிய முடிவல்லான் வேதமொன்று மாதி ஜிபுரீலு மீக்காயீலும், வடிவா மிசிறாபீ லிசுறாயீலும் வல்லோன் மலக்கிவர் வலுப்பமோதான், படியில்மனுரூப நிறமே பச்சை பதினெண்ணாயிர மாலமெல்லாம். (152)

(இ-ள்):— என்ன ஹிக்மத்தால் என்றால் அலிபின் ஐந்து விதத்தாலே வேதம், ஜிபுறீல், மீக்காயீல், இஸ்றாபீல், இஸ்றாயீல் ஆகிய இந்த ஐந்தும் வெளிவந்தது, இந்த மலக்குகளின் வலுப்பமாவது ரூபமனுஷீகமாகவும், பச்சை நிறமுள்ளவர்களாகவும்; (இன்னும்)

ஆலம் பலதெல்லா மிடதுகையி லணுப்போற் றெரிசிக்கு மாதிராஜன், காலனிசுறாயீ லானுமுகங் காந்திமுகநிறம் அரூபமாகும் வேலையுலகெல்லா மிடதுகையில் விளக்குப் பிடித்தாற்போல் விரிந்த ரூபம், ஆலம் படைத்தவன் மீக்காயீலு மன்னரூபமாய்ப் பறவையாமே, (153)

(இ-ள்):— பதினெண்ணாயிர ஆலங்களையும் தமது இடது கைகளில் வைத்துத் தாங்கிறவர்கள் இவர்களில் மலக்கல் மௌத்து என்னும் இஸ்றாயீலோ நான்கு முகமும் கறியரெங்கு முள்ளவர் சில சமயங்களில் அரூபியாகவும் இருப்பார். கடல் பாதாள உலகம் யாவையும் இடது கையில் வைத்து விளக்கைப் போல் பிடித்துக் கொள்வார். மீக்காயீலோ! அன்னப் பட்சியின் ரூபத்திலுள்ளவர்.

பறவை யொருமுத்துப் பாதம்ரண்டு பாரமுகமொன்று சிரசொன்றுதான் சிறகி ரண்டொரு சிறகுதனிற் சின்னச் சிறகு மெண்பதினாயிரங், குறையாச் சிரகுக்கோ றிறகுகோடி கூறுமிறகுக் கோர்கோடிரோம, முறையா மொவ்வொரு ரோமமதின் முகமு நாற்பதினாயிரமே. (154)

(இ-ள்):— இவர்க்குப் பறவையைப்போல் இரண்டு இடுக்கு கால்களும் பெரிய முகமும் தலையும் ஒன்றுதான் உண்டும். பறக்க இரண்டு ரக்கைகள் உண்டும். அதில் சிறிதான சிறகுகள் எண்பதினாயிரம் இருக்கின்றன; அதிலொரு சிறகுகளிலும் கோடாது

கோடி உரோமங்கள் உண்டும்; ஒவ்வொரு உரோமத்தின் நடுவிலும் நாற்பதினாயிரம் முகங்கள் இருக்கின்றன, (இன்னும்)

முகமும் வாயு நாற்பதினாயிர மொழியு நாவுநாற் பதினாயிர மகலநாவொன்று வைஞ்ஞூறுண்டா மந்தவிரிவான நாவொன்றுக்குப், பகுமாநாற்பதினாயிரமாம் பாஷை பகுந்திறை தனைப்புகழு, முகமை யடங்காத ஜிபுரியீலு மொன்றே புறுவடி வாகுந்தானே. (155)

(இ-ள்):— அந்த முகங்களில் ஒவ்வொன்றுக்கும் நாற்பதினாயிரம் வாய்கள் இருக்கின்றன. ஒவ்வொரு வாயிலும் நாற்பதினாயிரம் நாவுகள் இருக்கின்றன. அந்த நாவுகள் ஒவ்வொன்றிலும் நாற்பதினாயிரம் பாஷைகளுடன் றப்பை தஸ்பீஹு செய்வார் எ-று.

வடிவு பறவைதான் புறுவின் ரூபம் வைர மரகத முத்துநிற மடியிலிருபாத மொருமாணிக்க மழகு நவரத்ன மிருசிறகு, படி கீழ்வாய்பச்சை மரகதமாம் பரிம ளங்கரு பூரமஞ்ச, ளிருபுரஞ் சிறைநாலுமெட்டு விதமெட்டுச்சிற கிலங்கிநிற்கும். (156)

(இ-ள்):— ஜிபுறீலோ புறுவின் ரூபத்தைப்போல் உள்ளவர் வைரம்போலும், பச்சை மரகதத்தை போலும், முத்தைப் போலும் ரெங்குள்ளவர். இரண்டு கால்களும் மாணிக்கத்தால் சமைந்தவர் இருபக்கத்தின் இரக்கைகளும் நவரத்தின கஜிதங்களால் உற்பத்தியாயிருக்கின்றன. அவருடைய வாயானது மரகதத்தினாலும் கோமேதகத்தினாலும் உள்ளது. அதில் சதா நேரமும் அம்பர், கற்பூரப் பரிமளவாடைகள், மணந்து கொண்டே யிருக்கும். இரண்டு சிறகுகளும் எட்டு விதங்களான வர்ணங்களுடன் பிரகாசிக்கும். எ-று.

இலங்கும் வைரம்வெண்டரளமுத லிணையும்பச்சையுங் குங்குமமுங், துலங்கு மாணிக்கம் வைடூரியத் துதிபுட்பராகங் கோமேதக, மலங்காரமான சிறகொன்றுக்கு மைம்பது கோடி யணியிறகு, மிலங்கு மணியாகச் சிறகொன்றுக்கு நாற்பதாயிற மிறகுமாமே. (157)

(இ-ள்):— அவ்விதம் இலங்குகின்ற சிறகுகளில் முத்து பவளம் பச்சை, கோமேதகம், நீலம், புட்பராகம், மாணிக்கம், வைடூரியம் முதலானரத்னாதிகளின் பிரகாசத்தைக் கொடுக்கும். இந்த சிறகு ஒவ்வொன்றிலும் ஐம்பது இரகுகள் உண்டும், இந்த இறகு சிறகுகள்

ஒவ்வொன்றுக்குள் இந்த இறகுகளில் சிறிய இறகுகள் எண்பத்து நான்கு லட்சம் உண்டும். (இன்னும்)

இறகிற் சிறிதான விறகொன்றுக்கு மெண்பத்து நாலுலக்ஷ முண்டுங், குறையுஞ்சிறிதான விறகினிடங் கொண்டு பதினெண்ணாயிர மாலமு, மறையு மறுஷோடு குறுசு சொர்க்கம் வல்லநரகேழ்பா தாளலோக, நிறைய மூடிய இறகு தானும் நீளவகலமும் பெரிது தானே.

(இ-ள்):— அதிலொரு இறகுக்குள்ளே பதினெண்ணாயிரம் ஆலத்தையும், அறுஷு குர்சு, லௌகு, கலம், பூமி, பாதாளம், சுவர்க்கம், நரக முதலானவைகளையும் வைத்து மூடிக் கொள்வார். அந்த இறகுகளின் அகலத்தையும், நிகளத்தையும் மட்டுப்படுத்த யாராலும் கூடாத கருமம். எ-று.

பெரியோன்றிருமுன்னே வைந்துலாமும் பிரித்தே யீசன்னு மையாளுடன், அறிய விஷ்ணுவும் பிரமாருத்ர னைந்துபேருமேய மைத்தவாறு, முருவ நிலையிலே நினைத்த வன்ன முடையோன் றிருமுன்னேவைந்துஹேயும், பரிவாதம் ஹவ்வா ஹசனுசைனும் பாத்திமாவுடன் பஞ்சரத்னம். (159)

(இ-ள்):—அப்பால் லாமுக்கு உள்ள ஐந்து வகையைக் கொண்டு ராட்சித ஜென்மங்களில் ஈஸ்பரன், பார்வதி விஷ்ணு, பிர்மா, ருத்திரன் இந்த ஐந்து பேர்களையும் உற்பத்தி செய்து மறுபடியும் அதின் ஹிக்மத்தைக் கொண்டே அவைகளுக் குறியன எல்லாம் படைத்தான். அப்பால் ஹேயிலுள்ள ஐந்து வகையால் பஞ்சத் தன்களான, ஆதம், ஹவ்வா, பாத்திமா, ஹஸன், ஹுஸைன் இந்த ஐந்து பேர்களையும் உற்பத்தி பண்ணினன். எ-று.

ரத்த மணியான நசுபீதன்னை ரம்மியமாக விறையெடுத்து, மெத்தப் புகழ்ந்தானே நபி நாமத்தை மேதினியுயிர்க் கிரணமீயக், கத்தன் றிருமுன்னே வைத்து மீமும் கண்ணின் மணி முத்தாய்த் திரண்டது தான், உத்த அபூபக்க ருமறுதுமா னலியு *முவை சோடுத்துமாகும். (160)

(இ-ள்):— இந்த இரத்னங்களான ஐந்து மாணிக்கங்களையும் றப்பு தன்பிரு மணிபோல எடுத்து முத்தி முகந்தான். அப்பால்

*முவவசோ டேன்பது, உவைசுல் கறனியோடென்பதாம்.

இந்த ஐந்தின் பறக்கத்தால் மேதினி யெல்லாம் பெருகி ஞானத்தை யறிந்து மோட்ச பதவி யடையும் என்று சோபனஞ் சொன்னான், அப்பால் மீமில் உள்ள ஐந்து வகையால் அபூபக்கர், உமறு, உதுமான், அலி, உவைசுல் கர்னேன் ஆக இந்த ஐந்து பேர்களும் உற்பத்தியானார்கள். எ-று.

ஆகும்விதமைத்து நின்ற முத்து மந்த விறைமுன்னே வைத்து காலு, மேக னமைத்தனனெங்கு முள்ளோனின்ன மிறையவனிருப் பென்பது, வாகி னறுஷோடு குறுசு மேலே வல்லோன் புறுக்கானி லிறைதகுத்துப், பாகும் தகுத்திலே மூறை யிருந்து பார்வை யனைத்துமே னிறைந்திருப்பேன். (161)

(இ-ள்):— அப்பால் தாலில் உள்ள ஐந்து வகையால் அறுஷு குர்சு, லௌகு, கலம், புறுக்கான் என்னும் இந்த ஐந்தையும் உற்பத்தி செய்தான். செய்து அந்த அறுஷில் தன் காட்டமென்னும் தகுத்தில் வீற்றிருந்தான். எ-று.

நிறைந்த நாயக னிருக்க வென்று நிகரில்லா தொருதகுத் தமைத்தா, னிருந்தங் கதிகார நெறி நீதிக்கு மெடுத்த தகுத்தது தெதின லென்றால், லிருந்த தாலந்து மிறைமுன்னாக விருந்த தவிசதின் பாதகாலும், பொருந்தும் பஜிறேடுவுஹறஸறு புகழ்ந்த மஹரிபு காலுபாதம். (162)

(இ-ள்.):— இன்னும் அந்த அறுஷுக்கு காலு தூண்கள் நிற்பாட்டினான். அந்தத் தூண்களாவன சுபுஹு லுஹறு அஸறு மகிறிபு, இந்த காலுமாக இருக்கும். எ-று.

காலு பாதமு காலுநேர காலுநேரமு காலெழுத்தா, மேலு மெழுத்தொரு இசாவுமாகு மிதத்தி லடங்காத விரிப்புமைந்து, வாலுந் தவிசொடு பாதகாலுமைந்து தொழுகையு மைந்துநேர, மேலோன் றவிசிலே நுக்கத்தை யூன்றி மெத்த அலிபாக வளந்து நின்றான். (163)

(இ-ள்):— அந்த காலு தூண்களும் காலு நேரமாக இருக்கும் அதிலொரு எழுத்தானது இஷாவாக இருக்கும் அதாவது றப்புடைய ஆசனமாக இருக்கும். ஆக ஐந்து ஒகுத்துத் தொழுகையாயிற்று, றப்பு அந்த ஆசனத்தில் தன் பூர்வீகமான நுக்தாவை ஊன்றி அப்பால் அலிபாக வளர்ந்து நின்றான். எ-று.

நின்ற நிலை அல்லா அலிபுமாகு நிலையி னடியிலோர், நுக்கத்து மாச்சே யென்ற நுக்கத்திலே யிறையின் ரூப மிலங்குந்தகுத்திலே யிருத்தங்காணு, மன்றே யிருபத்தைந் தாயுதித்தா னடியு முடிவில்லா னெடியகாய னன்றுய்த் தவிசினி லிறையிருந்து, நபியா முஹம்மதை நாடினனே. (164)

(இ-ள்):— அப்படி நின்ற அல்லாவானது, அலிபாக அதன் அல்திவாரத்தில் நுக்தா இருக்கிறது. றப்புடைய சூறத்தானது நுக்தாவில் தான் இருக்கிறது. இருக்க மேற்படி இருபத்தைந்தாய் எழுந்து நின்ற முஹம்மதை, மறுபடியும் றப்பன் ஒரு பார்வை பார்க்க நாடினன். எ-று.

நாடி முஹம்மதை நாயன் சொன்ன நாலு வகை, காற்று நெருப்பு, நீருஞ், சூடிப் புவிநாலு முமது தீனிற் சுருதி வருத்தியே வாருமென்றுன் றேடிமுஹம்மது காற்றைக்கண்டு தீனில் வருத்தியே, இசுறாபீல்தா னீடுஞ் சலத்திலே மடைத்துவைத்து நெருப்பைத் தேடியேபோனதாமே. (165)

(இ-ள்):— அவ்விதம் நாடிய றப்பானவன் முஹம்மதை நோக்கி, நீ போய் நாலுவகை பூதங்களான நெருப்பு, காற்று, தண்ணீர், மண் ஆகிய இவைகளை உமது தீனுல் இஸ்லாத்தில் சேரவைத்துவிட்டுவா என்று சொன்னன். உடனே முஹம்மதானது முதலாவது காற்றைக்கண்டு தீனில் வரவழைத்து, அப்பால் நெருப்பைத் தேடிற்று. அதற்குரிய இஸ்றாபீல் என்பவரைத்தன் றஹ்மத்தில் அடைத்து விட்டது. எ-று.

நெருப்பைச் சுருதியி னிலைநிறுத்தி நிகரில் லாப்பேழையதில் அடைத்துக் கறுப்பு நிறமுள்ள இசுறாபீல், தன் கன்னக் குவட்டிலே யடக்கிவைத்துச் சிறப்பா முஹம்மது ஜலத்தைக்கண்டு செப்புங் கலிமாவி லொப்பாய்ச் செய்து, மறப்பா மீக்காயீ லிடத்தில் வைக்க மண்ணும்வலிய வந்தேதுரைக்கும். (166)

(இ-ள்):— மேற்படி நெருப்பை வேதத்தில் அடைத்து, அப்பால் அதை இஸ்றாயீலுடைய கன்னம்பட்டையில் அடக்கச் செய்தது. அதைக்கண்ட வுடன் மீக்காயீல் என்கிற ஜலமும் இஸ்லாமானது, அப்பால் மண்ணும் வலியவந்தது. எ-று.

உரைக்கும் யாறசூல் யாஹபீபே யுங்கள் உதவி பதங்காணப் பெற்றேனென சிறப்ப மாய்நூறு முஹம்மதுதா னெஞ்சு தழுவியே மகிழ்ந்துசொல்லு மிறப்பும் பிறப்பில்லானுனக்கல்லாதே யெல்லாம் பழுதாகு மிலங்குவாய், நீ சிறப்புஞ் சிபுரியீல் பரப்புவியைச் சேர்த்தே யிறைதிரு முன்னிற்சென்றார் (167)

(இ-ள்):— வலியவந்த மண்ணானது முஹம்மதைப் பார்த்து யாறசூலே! யாஹபீபே, நான் உங்கள் பாதத்தைக் காணப்பெற்றதே என் அதிர்ஷ்டம் என்றது. அது கேட்டவுடன் முஹம்மதியா என்னும் ஒளிவானது அந்த மண்ணைப்பிடித்துத் தன் நெஞ்சில் அணைத்து தழுவிக்கொண்டு ஏ, மண்ணே! பிறப்பும், இறப்பும், உனக்கே உள்ளது என்று சொல்லிற்று. அந்த உடனே ஜிபுரீலானவரை சேர்த்துவிட்டு அந்த மண்ணுடன் பழயபடி தன் றப்பிடம் வந்தது. எ-று.

சென்ற முஹம்மதை மகிழ்ந்து வல்லோன் சிறப்பாம் முஸ்தபா நபியேயென்று, னன்றாய் முஹம்மது சஜதாச் செய்தார். நாயன் கிருபையா லிணங்கிப்பார்த்தான், கண்டே யொளிவுதா னடுங்கி வேர்த்துக் கருணைச் சுடர்மூன்று மூக்கில்விழ, விண்டசுடர் மூன்று விருட்சமூன்றாய் வேதபெரியவ னமைத்ததாமே. (168)

(இ-ள்):— இவ்விதம் தன் சமுகத்தில் வந்த முஹம்மதியாவை றப்பு நோக்கி யாமுஸ்தபா என்றான். அதைக் கேட்டதும் முஹம்மதானது உடனே ஸஜதாவில் விழுந்தது. அதை றப்பு உறுக்கிப்பார்த்தான். உடனே அந்த ஒளிவானது நடுநடுங்கி வேர்த்தது, வேர்த்ததும் மூன்று ஒளிவு தோன்றி, அப்பால் அந்த மூன்று ஒளிவுகளும் மூன்று விருக்ஷங்களாகிற்று. எ-று.

அமைத்த விருட்சந்தான் தூபாவொன்று மறிய ஸிதுறத்துல் முந்தகாவுஞ், சமைத்த விருட்சந்தானெக்கினதொன்று சங்கை யொளிவைப்பின் னோக்கிப்பார்த்தா, னிமைப்பு் னொடிக்கு முன்னொளி ரூபமாய் நீண்ட இறகுள்ள மயிலாகவு, மமைத்த வுருவாம் பெண் மயிலைப்பார்த்தே யந்த வெக்கினிலே யேறுமென்றான். (169)

(இ-ள்):— அவைகள் சுவர்க்கத்தின் "தூபா" என்பது ஒன்று. "ஸிதுறத்துல் முன்தஹா" என்பது ஒன்று, எகின் என்பது மூன்றாகும். மறுபடியும் அதை ஒரு பார்வை பார்த்தான்.

அதானது, நிமை கொட்டி முழிப்பதற்குள்ளாக அழகிய பச்சை நிறப்பிரகாசத்தையுடைய இரக்கைகளுடன் ஒரு பெண்மயில் ரூபமாயிற்று. ஆண் அந்தப் பெண்மயிலை றப்பு நல்ல கிருபையுடன் நோக்கி, நீ அந்த எக்கீன் மரத்தில் ஏறிக்கொள் என்றான். எ-று.

ஏறி யிருந்ததே யெக்கீனின்மயில் யாகூவெனக்கூவுங்குர லோசையும், நூறாயிரமாண்டா மதிலிருந்து நோக்கியிறையைப் பார்த்தேதுரைக்குந், தாராபுகழ்ச்சியு நிறைந்தவனே தனியே யிருக்கநான் பயந்தேனெனப், பேரால்பெறியவனுதி நாயன் பிரியத் துடனேதான் பார்த்தானப்போ. (170)

(இ-ள்):—அதன் பிறகு றப்புடைய சொற்பிரகாரம் அந்த மயிலானது எக்கீன் மரத்தில் ஏறியிருந்து யாஹூ என்று, ஒரு லட்சம் வருஷம் வரையிலும் திக்று செய்து கொண்டிருந்தது. அப்படி யிருக்குங்காலத்தில், மயிலானது றப்பை நோக்கி புகழுடங்கலுக்கு முரியவனே, இந்த விருட்சத்தில் நான் தனித் திருக்கிறதற்குப்பயமாக இருக்கிறது என்று சொல்லிற்று. அது கேட்டதும் றப்பானவன் மிகுந்த அன்புடன் சொன்னதாவது:—

பார்த்துப் பலபல புகழ்ச்சியுள்ள பஞ்ச ரத்னமென் றைந்து முத்தை, வார்த்தைக்கடங்காத ஹயாத்துல்கைபார் வாரிக்கடல் விளையாடவென்று, பார்த்து மயில் முத்தைப் பருகும்போது பதுங்கிக்கடலிலே யடங்குமென்று, மேத்தமானதோர் மயிலைக் கூவி யிந்த முத்தைந்தும் பருகுமென்றான். (171)

(இ-ள்.):—என் அன்புக்குரிய ஹபீபானமயிலே! பஞ்சரத்னம் என்னும், ஐந்து முத்துக்களை ஹயாத்துல்கைபார் கடலில் உற்பத்தி செய்திருக்கிறேன். நீ அந்த ஐந்து முத்துகளுடன் விளையாடிக் கொண்டிரு என்று உத்திரவு செய்து, அப்பால் அநந்த ஆயிரம் வருஷங்கள் சென்றபின் அந்த முத்துகளைப்பிடித்து தின்னும் படியாக மயிலுக்கு உத்திரவு பண்ணினான். எ-று.

பருகு மெனச்சொன்னான் மயிலைப்பார்த்துப் பதுங்குமெனச் சொன்னான். முத்தைப்பார்த்தே, யுருவமொளிவைந்து முத்தானது மோகக்கடலிலே யுலாவுங்கோலம், பருகுங்கிருபையால் மயிலு முத்தைப் பார்த்தே யிருந்தங் கனந்தகால முருவமொளிவென்ற மயிலு முத்தை யோடியெடுத்ததை யுண்டுதெப்போ. (172)

(இ-ள்.):—மேலே மயிலுக்குத் தின்னும்படி சொல்லிவிட்டு இங்கே முத்துகளைப் பார்த்து, நீங்கள் ஓடியொளியுங்கள் என்று கட்டளை செய்தான். மயிலானது முத்துகளைவிரட்டும் போது, அவைகள் ஓடுகிற பிரகாசத்தின் காட்சியைப் பார்த்துக்கொண்டு அந்த ஆயிரம் வருஷங்களை மயிலானது கழித்தது. கடைசியாக மயிலானது முத்துகளைப்பிடித்து தின்னத் தொடங்கிற்று. எ-று.

அப்போ சுடர்விந்தாய் மயிலுஞ்சூலா யறுமூன்றுதர மண்ட மீன்றே யொப்பா யடுக்கண்ட மாயிரமுமுவந்து, பதினெண்ணா யிரமாலமு மெப்பாய்ச் சமைந்தபின், வேறு ரூபம் வேணுமென வல்லோன் வேறேவைத்தே யொப்பாய்மொளியைத்தாம் தரித்திருந்த முத்தைத் திருக்கண்ணு லுவந்துசொல்வான். (173)

(இ-ள்.):—இவைகளில் ஆயிரம் வருஷத்திற்கொரு தடவை ஒரு முத்து அதன் வாயில் அகப்படும். இவ்விதம் நான்கு முத்துக்ககளைப் பிடித்துத் தின்றது. அவைகளினுல் அந்த முத்துக்களின் சுடரானது விந்தாகி சூல்கொண்டு ஒன்பது மாதஞ் சென்று, ஆயிர முட்டைகளை இட்டது. ஒவ்வொன்றில் பத்து சிபத்துகள் இருந்தது. இந்த முட்டைகளைப் பொறித்ததும், அவைகளிலிருந்து பதினெண்ணுயிரம் ஆலமும் வெளியாயின. அப்பால் வேறு ரூபங்களைச் சமைக்க வேண்டுமென்று தன் உஜூதெ தென்னு முகத்தைப் பார்த்தான். எ-று.

உண்ட மயில்பார்வை கடலின்மேலே யுலாவுமுத்தொளி வெளியிலாகக், கண்டு மயிலோட முத்துள்ளோடுங் காலமனந்த மாயிரமாண்டுபின், ஞென்றுென் ருகவே நாலுமுத்தை யோடிப் பருகியே யுயர வேரிப், பண்டே யொரு முத்தை தெரிசியாமற் பாதாளந்தனிற் போனதாமே. (174)

(இ-ள்.):—இந்த முத்து தான் மயில் தின்ற நாலு போக மீத மிருந்த ஒரு முத்து. இந்த முத்து மயிலுக் ககப்படாமல் பாதாளத்தில் போய் ஒண்டிக்கொண்டது. ஆதியின் சொற்படி அந்த முத்தும் வரத்தின்ற உடனே மயிலானது பழயபடி எகீன் மரத்தில் ஏறியிருந்துக் கொண்டது. அப்பால் மறுபடியும் சூலாகி நான்கு முட்டைகளை யிட்டது. எ-று.

பாதாள முத்து முலகில்வரும் பருகு மயிலுக்தான் முத்து காலே, வாதாள முத்து விந்துமாக வந்தப் பெண்மயில் சூலுமாகி நீதம் விளங்கு நால் முட்டை யிட்டு நிகரில்லாக் குஞ்சு காலது தானுதி யபூபக்க ருமறுதுமா னல்ல திருப்பால ரலியுமாமே. (175)

(இ-ள்):— அந்த முட்டைகளைப் பொறித்தவுடன் அவைகளில் நின்றும் அபூபக்கர், உமறு, உதுமான், அலி யென்னும் நான்கு மகாத்மாக்களான யார்களும் வெளி வந்தார்கள். எ-று

ஆகு மபூபக்கர் காகமாக வாதி யுமறுந்தான் கூகையாக, வாக மிருவரு மயிலுடைய வலது புரத்திலே யிருந்தப்போ, வேகனுது மானு ராந்தைரூப மெங்கோ னலிப்புலி ராஜாளியா, யேகன் மயிலிடி னிடப்புறத்தி லிருந்த தைந்துமே யனந்தங்காலம். (176)

(இ-ள்):— அப்படி வந்த நால்வர்களும், நான்கு ரூபமா யிருந் தார்கள். எப்படி யென்றால் அபூபக்கரவர்கள், காகமாகவும், உமறு அவர்கள் கூகையாகவும், ஆக இந்த இரண்டு குஞ்சுகளும் மேற்படி மயிலுடைய வலது புறத்தில் இருந்தார்கள். உதுமான் அவர்கள் ஆந்தையாகவும், அலியவர்கள் இராஜாளியாகவும் மயிலுடைய இடது புறத்தில் இருந்தார்கள். எ-று.

கால நெடுகாளா மெக்கின் மரத்திற் கத்தன் பறவையு மிருக்கும் போதில், ஆலம் படைத்தோனை நினைத்து மயில் ஆகிகூ வென்றோசை கூவி, வேலைப் பலகலை யெம்பிரானே யெனக்கேப சித்தாப மெனக் கென்றதால், நாலு விதமான கனி பழுக்கு நாடி யருந்து மென்றிறை யுரைத்தான். (177)

(இ-ள்):— இவ்விதம் இருந்த குஞ்சுகள் நான்கும் வளர்ந்த காலங்களை யாராலுஞ் சொல்லத் திராணி கிடைக்காது. இப்படி ஐந்து பறவைகளும் இருந்து வரும் போது மயிலானது றப்பை நோக்கி ஹா, ஹீ, ஹூ வென்கிற திக்றைக் சொல்லி யாறப்பீ எனக்கு பசி அதிகமாக இருக்கிறது என்று கேட்டது. கேட்டதும் றப்பு இந்த மரத்தில் நான்கு விதமான பழவர்க்கங்களை உற்பத்தி செய்கிறேன். தின்று கொள், என்று சொன்னான். எ-று.

இறையோன் றிருமுன்னே வேதமாக விருக்கு மொளியான அலியைப் பார்த்து, மறையாம்பூம் பிஞ்சுகாய் பழமாய் மன்னுனைக் கினிலே செல்லுமென்றான், பொறையா மலரும்பூம் பிஞ்சுகாயாய்ப் புகழுமெக்கினிலே குறுஆன் பழம், நிறம் பொன் பவளக்கால் பச்சைமுத்து நிறமைஞ்சுமயி லிஃதேயுண்ணும். (178)

(இ-ள்):— சொல்லி விட்டு தன் வசம் நீண்டு நிற்கின்ற ஆகார மென்னும் அலிபைப் பார்த்து, அந்த மரத்தில் பூ, பிஞ்சு, காய் கனிகளாகும் படி சொல்' என்ருன். சொன்னதும் அவ்வாறு ஆகி விட்டன். எப்படியானுல் பொறுமை பூவாகவும் புகழ் பிஞ்சாகவும், குர்ஆன் காயாகவும், தவ்ஹீது பழமாகவும் அலிபு தன் சிபத்களான பொன், பவளம், முத்து பச்சையாகிய நிறங்களையும் கொடுத்து விட்டது. எ-று.

அஞ்சுவித முண்டாய் ரசனையைந்து மைந்துவகை நினையைந்து முண்டே, யஞ்சுவிதமாகி யுலகமெல்லா மருந்துமை மூன்று மொன்று மூன்ருய்ப், பிஞ்சு பழமுங்காயிலேயும் பூவும் பிரிசத்துடனை விதமல்லவோ, மிஞ்சும் பதினைந்து இனயத் தென்று மிலத்திலறிய முன்னிதைத்தான் சொன்னேன். (179)

(இ-ள்):— எகின் மரத்தில் பழுத்த பழமானது வகையும் ஐந்து நிறமும் ஐந்து உருஷிகரமும் ஐந்து ஆக மூவைந்து பதினைந்து வகையானது பழங்களை மயில் தின்றதாலே, கனுஅத்துக்கு பதினைந்து வகை யென்று நான் மேலே சொல்லி யிருக்கிறேன். எ-று.

இதைத்தா னருந்தின மகிழ்ச்சியாலேயாதல் ஜலாலிவல் இக்குரு மென்றே, போது மயிலைத்தா னிறையு நோக்கி யொளிவு மயில்ஞ்சி யுடலம் வேர்த்தே, யாதியொளி மயிற்சிரசில் நின்றேயைந்து மொளிசுட ரிறங்கும் போதி, லேதுங் குறைவில்லான் வேதமொன்றை யெடுத்து மகிழ்ந்து தன் திருமுன் வைத்தான். (180)

(இ-ள்):— இவ்விதவனுப்பமுள்ள பழங்கள் நாலையும் மயிலானது தின்ற ஆனந்தத்தாலே "யாதல் ஜலாலிவல் இக்ரும்" என்று திக்று செய்தது. அதை நோக்கிக் கேட்ட றப்பு மேற்படி மயிலை உறுக்கிப் பார்த்தான். உடனே மயிலின் சரீரமாதித்தமும் வியர்த்து ஐந்து விதமான ஒளிவு குலாவிற்று. அவைகளில் நின்று புர்கானுல் அலீமென்னும் வேதமாகிற்று. எ-று.

வைத்தா னிறைதிரு முன் வேதத்தை வகையால் காலொளி யாகும்வாறு, மெய்த்த பெருவெளி நாசூத்தொன்று மேலா மலக்கூத்து மாடமொன்று சுத்தப் பளிங்கி கண்ணுடியாலே சொன்னேன். ஜெபறூத்து மிதுக்கு மேலே, கத்தன் லாகூத்து மொளிவாம் பள்ளி காட்சி யிதினுலே சூட்சி தானே. (181)

(இ-ள்.):—மற்ற நான்கு ஒளிவினல் யாகூத்து ஒன்று; மலக்கூத்து மாடமானது ஒன்று; பளிங்குரத்னுதிகளாலே ஜபறூத்து மகாம் ஒன்று; லாஹூத்து ஒன்று ஆக நான்கு மகாம்களும் வெளியாயிற்று. எ-று.

சூழ்ச்சி விதனுலுமைத்த வல்லோன் சொன்னுனிறையவன் மயிலேப்பார்த்துத், தாழ்ச்சி யணுகாத நாசூத்திலே தாவிவாரு மென்றிறையுரைக்கக், காட்சி மயில்வந்து நாசூத்திலே கால் கொண்டிருக்கவே புருவுமாச்சு, வீச்ச மமுதுகு மயிலறக்கைதான் விம்மி யுதறுமென் றிறையுரைத்தான். (182)

(இ-ள்.):—இப்படியான சூட்சத்தின் பிறகு றப்பு மயிலேக் கூப்பிட்டு, நீ எகின் மரத்தைவிட்டு நாசூத்துடைய ஆலத்துக்கு எழுந்துவா! என்ருன். அப்படியே மயிலானது வந்து நின்றது. நின்ற உடன் புருவாக ஆயிற்று. ஆனபுருவைப் பார்த்து உன் ரக்கைகளே அடித்து உதறு என்று உத்திரவிட்டான். எ-று.

உதறு மெனச்சொன்னு னுதறும்போது வுரையி லடங்காத பெருவெளிதா னிறையக் கடிகாகச் சொரிந்ததப்போ நீருண் டெனேத்தானே புகழுமென்ருன், மறையின் வழியென்னக் கேட்கும் புரு மன்னன்ஹேறயோடு மீமைச்சேர்த்தே, யறியுக்காபோடு மீமு மொன்ரு யந்தப் புருமுன்னே யாடிநிற்கும். (183)

(இ-ள்.):—புருவானது தன் சிறகுகளேவிரித்து உதறின, உடன் பதிணெண்ணுயிர ஆலங்கள் நிரம்ப பொடிக் கடுகுகளாக நிறைந் திற்று "இந்தக்கடுகுகளே ஒன்ருென்ருகத் தின்று கொண்டு என்னேப் புகழ்வாயாக" என்ருன். அவ்விதம் தின்ற உடன் விளேயாடக் கூட்டாளிகள் யார் என்று புருக்கேட்டதும், றப்பு ஹேற! மீம், இவைகளே அனுப்பிவைத்தான். இவைகள் புருக்களேப்போல் வந்து மேற்படி புருவுடன் ஆடி விளேயாடிற்று. எ-று.

கும் மெனச்சொலுங் கோடிகாலம் குகுமெனச் சொலும் கோடிகால, மிம்மத் திருகோடி காலஞ் சென்று விருந்த கடுகதை யருந்தும்புரு, கிம்மத் துடன்சொன்னர் நாசூத்தினி னிரம்புங் கடுகெல்லா மருந்தும்புரு, வம்மை மலக்கூத்தில் வாருமென்ருன் வந்தார் மாடத்தின் குயிலான (184)

(இ-ள்):—இவ்விதம் வந்தக் கூட்டாளி புருக்களுடன் மேற்படி புருவானது நின்று கோடிவருஷங்கள் வரையிலும் ஹூம்! என்று திக்றுசெய்தது. அப்பால் அதைவிட்டு கோடிவருஷம் வரையிலும் குஹூம் என்றும் தம்! என்றும் ஹிம் என்றும் திக்றுசெய்து அவ்வளவு கடுகுகளையும் தின்றுவிட்டது. அப்பால் றப்பு புருவைப் பார்த்து "நீ மலக்கூத்து மாடத்தில் வந்து விடு" என்று உத்திரவு பண்ணினன். அவ்விதமே புருவானது மலக்கூத்து மாடத்தில் வந்தது. வந்ததும் குயிலாகிவிட்டது. எ-று.

குயிலாய் மாடத்திற் கூவிநின்றார் கூவுங் குரலோசை ஹக்கல்லாஹூ மயிலான புருக்குயிலுமாக மகிழ்ந்திரண்டிலக்கனந்த மாண்டா யகிலம் புகழான ஜெபறூத்திலே யன்னரூபமாயாடு மென்றான் மயிலுமரகத அன்னமாக மன்னன் றிருமுன்னே யாடிநிற்கும். (185)

(இ-ள்.):—அவ்விதம் குயிலாகின முஹம்மதியா வானது "ஹக்கல்லாஹூ" என்று இரண்டு லட்சம் வருஷம் வரையிலும் கூவிநின்றது. அப்பால் றப்பு அந்தக் குயிலைப் பார்த்து "நீ ஜபறூத்தில் வந்துவிடு" என்று உத்திரவு பண்ணினன். அப்பிரகாரம் வந்த உடனே அன்னப்பக்ஷியின் ரூபத்தில் ஆகிவிட்டது. அவ்விதமான அன்னமானது றப்புடைய திருசமுகத்தில் ஙளினமான நடனமாடிநின்றது. எ-று.

ஆடி ஜெபறூத்தி லனந்தகால மந்தக்கண்ணாடி யொளிவுதனில் நீடு மதுதன்னில் சுரூபந்தனை நின்று பார்த்துத்தான் மகிழ்ந்து சொல்லும், பாடிப்பாடிகூ வல்லாவென்று பதினெண்ணாயிரம் வருடம் சொல்லுங் தேடித் தவிக்கின்ற வன்னந்தனைச் சற்றே திருக்கண்ணி லிரங்கிப்பார்த்தான். (186)

(இ-ள்.):—அப்படி நடனமாடிய அன்னப்பட்சியானது, மேற்படி ஜெபறூத்தென்னும் கண்ணாடியில் தன் அழகிய சுருபத்தைக் கண்டு ஆநந்தங்கொண்டு றப்பை நோக்கி "ஹூ அல்லாஹ்" என்று பதினெண்ணாயிரம் வருஷம் வரையிலும் திக்று செய்தது. இவ்விதம் தன் இஷ்கில் மூழ்கித் தேடுகின்ற அன்னத்தை றப்பானவன் தன் கருணைக்கண்ணால் நோக்கினன். எ-று.

பார்த்தா னிறையவ னுசையாலே பார்க்கப் பளிங்கிப்போற் பூண்டாரப்போ கேர்த்திச்சுடரான விறையினுதகேரே யிறங்கிப் பொன்னன்ன மீதி, லார்த்து வாரன்ன மீதிலங்கி யாகமுழுதுமே நிறைந்ததப்போ, மெத்த மகிழ்க்துதா னுடல்பூரித்தே மேனி நிறையத்தான் வேர்த்ததாச்சே. (187)

(இ-ள்):—அந்தக் கிருபைப் பார்வையால் அபுரூபமாக ஒருவித ஒளிவானது பொங்கி ஒரு ஜுப்பாவைப் போல் வந்து அன்னத்தின் மேனியில் பொருந்தினது; அந்தக் காங்கையால் அன்னம் வேர்த்தது. எ-று.

வேர்த்த வுலகந்தான் ஜலமானதால் விம்மி யிறகெல்லா முதறும் போது, வேர்த்த நீர்த்துளி விந்து காதம் வெள்ளை நிறக்காமம் வெகு சுடராம், பார்த்து றகுமத்துப் பாற்கடலிற் பாரமழை போலே யுலகினிடங், தூற்றல் சொரிமழை மின்னொளி போற் றெலையாதா யிரம்வருட மட்டும். (188)

(இ-ள்):— அந்த வேர்வை தான் உலகத்துள்ள சப்த சாரங்களும் உண்டாயிற்று, அப்பால் ஒரு மாதிரிப்பட்ட பூரிப் புண்டாகி தான் இரக்கைகளை உதறினது, அதிலிருந்து விழுந் துளிக ளெல்லாம் உலகத்தின் ஜீவராசிகளின் மோகத்திலுள்ள இந்திரியங் களாக நிர்மித்து, அதில் நின்றும் பளீர்ப்பளீரென்று சுடர் வீசி மின்வெட்டி, இடி யிடித்து, ஆயிரம் வருஷ காலம் வரையிலும் ஒரே சோனுமாரியாக மழை பெய்தது. எ-று.

வருடமாயிரந் தொலையாமழை வானேருயிர் மற்றப்பல்லுயிரும், பிரிச முடன்சொன்ன றகுமத் தென்னும் பெரியோன் கடலிலே யிறங்கு காதம், வரிசை றகுமத்துப் பாற்கடலாம் வகையாயுயிர்க் காமம் வந்து கூடிக், கரிச முறவல்லோன் ஹயாத்துல் கைபார் கனகக் கடலென்றே பேரும் வைத்தான். (189)

(இ-ள்):— ஆயிரம் வருஷம் மட்டும் பெய்த மழையானது திருபாற் கடலாகக் கூடிற்று, அதில் உலகத்தின் கல்குகளின் ஆத்மாக்களையும், ஹைவான்கள், ஜின்கள் முதலான ஆத்மங்களையும், நிரப்பி மோகத்தையும் அடைத்து அதற்கு றப்பன் ஹயாத்துல் கைபார்க்கடல் என்று திருநாமம் இட்டான். எ-று.

வைத்த கடலுமம் ஹயாத்துல் கைபார் மன்னு முயிரெல்லா நிறைந்ததப்போ, கத்தன் லாகூத்தி லன்னந்தன்னைக்கடுகவாரு

மென்றுரைக்கும் போது, வெற்றி லாகூத்தில் வந்ததன்னம் வேத வுலமாக்கள் வடிவு போலே, சுத்த முனுவுடன் மறையு மோதித் தொழுகும் லாகூத்துப் பள்ளியிலே. (190)

(இ-ள்):— இவ்விதமானவுடன் அந்த அன்னத்தை லாஹூத் தென்னும் மகாமில் வரும்படியாகச் சொன்னான். அன்னமானது, அப்பிரகாரம் வந்த வுடன் இன்ஸான்களின் நின்றும் உலமாக்களின் ரூபத்தில் ஆயிற்று, ஆகி வேதங்கள் படிப்பதும் லாஹூத் தென்னும் பள்ளியில் தொழுகிறதுமாக இருந்தது. எ-று.

தொழுது லாகூத்துப் பள்ளியிலே சுஜூதி லிருந்ததே யனந்த கால, மெழுத முடியாமல் கலிமாவுயிரி ருக்குமுன்றொரு வெழுத்து மாக, முழுதும் கூவென்ற வெழுத்துமீமா முஷாகிதா நிலைமுனை யிருத்திப், பழுதிலா நபி யொளி விலங்கிப் பள்ளி லாகூத்தி லிருக்கும் போது. (191)

(இ-ள்):— அவ்விதம் தொழுது இல்லாஹூ வென்னும் திக்றைக் கொண்டு முஷாஹிதா முதலிய நிஷ்டைக ளெல்லாம் செய்து கொண்டு அநந்த கோடி காலமாக ஸுஜூதில் இருந்து வணங்கி வந்தார். எ-று.

இருந்தார் லாகூத்தி லொளியாம்நபி யெங்கு நிறைந்தவனுநிறைய, நிறைந்த வகை யெல்லா மொரு நினைவால் நினைந்த நினைவல்லோ வறிய வேணும், பறந்த மயில்பதி னெண்ணாயிரம் பண்டு பெறுமந்த வண்ட மெல்லாஞ், சிறந்த மயிலென்ற ஆலமொன்றுஞ் சிறப்பா யுலகேழும் வானமேழும். (192)

(இ-ள்):— லாஹூத்தில் ஒளிவா யிருந்த முஹம்மது நபி யவர்கள், தன் ஒரு நினைவாலே இந்த உலக கோடிகளை சிருஷ்டித்துப் பல நினைவால் கலந்திருக்கின்ற றப்பை அறிவது தான் மனுஷீகத் தன்மை. நபியவர்கள் மயிலாக இருக்கும் போது, ஆலம் யாவும் படைக்கப்பட்டதாலே ஒரு ஆலத்துக்கு மயிலென்று பேறுமாயிற்று. அந்த உலகந்தான் பூலோக மென்பது. எ-று.

ஏழுவானமு மேழுபூமி யேழுகடலோடு மேழுதீவு, நாளுங் கதிர்மதி நரகு சொர்க்க நாலா வகைசைரி நவினம் வேறு, மேலும் புற்பூடுபதவுயிரு மேனி பலவகை யொரு வகையிற், கோலம் பலரூபம் குலமும் வேறாய்க் கூறத் தொலையாத கோடி கோடி. (193)

(இ-ள்.):—இன்னும் அந்த மயிலின் தற்ஜாவைக் கொண்டு ஏழு கடல், ஏழு பூமி, ஏழு வானம், ஏழு நரகம், பாதாளம், மலை, முதலிய யாவற்றும் படைத்து, பாஷைகள் வேறு வேருகவும், புல் பூண்டு மரமட்டைகளும், இனம் வேருகவும், சரீரம் வேருகவும் படைத்தான். அவைகளை யாராலும் எண்ண முடியாது. எ-று.

கோடி யடங்காமல் ஆலமென்று கொடுத்தேன் பதினெண்ணுயிர ஆலமு, நாடும் படைப்பெல்லாம் வேறு வேருய் நபியும் வேதமுந்தானு மொன்ருய்ப், பாடுஞ்ஜிபுரீ ல்பரப்புவியைப் பதினெண்ணுயிரம் பங்குசெய்து, ஆடிப்பரந்து முன் னெழுந்த புகை யாலம் பலதுக்கும் வானமாக. (194)

(இ-ள்):—இப்படிச்செய்த பதினெண்ணுயிரம் ஆலங்களிலும், நபிவேறு மார்க்கம்வேறு, வேதசாஸ்திரங்கள் வேறு. ஆகவும் தானே எல்லா சமயங்களுக்கும் ஒரே தெய்வமாகவும், செய்து ஜிபுரிலை எழுந்து பறக்கும்படியாகக் கட்டளை செய்தான். அவர் பறந்தபோது, அவரின் இறக்கைகளின் அதறடியால் ஆலம்கள் பதினெண்ணுயிரம் பங்குகளாகப் பிரிந்ததுமல்லாமல் அவர் பறந்த காங்கையின் புகையாலே ஆகாயங்கள் உற்பத்தியாயிற்று. எ-று.

வானம் புவியேழு மண்டமொன்று வருடமைஞ்நூறு வழியின் தூர, தானே புவியேழும் வானமேழுந் தடிப்பு மிடையுமே சரிவகையா, மான வகையாலந் தன்னைப்பார்த்தே யதின்மேலே தானுமறுஷா நிற்கத், தானே அருஷின்மேல் குறுசுமாகத் தறுகாவதற்கு மேற்றகுத்தை வைத்தே. (195)

(இ-ள்.):—ஜிபுரீல் பறந்த தோற்றத்தாலே பிரிந்த ஆலங்கள் ஒன்றுக்கொன்று ஐஞ்நூறு வருஷத்தின் துலை தூரமானது, அதற்கப்பால் அறுஷாடைய ஆலம் தோன்றிற்று. அதற்குமேல் *பீடமொன்று தோன்றிற்று. எ-று.

தகுத்தி லிருந்திறை ஸமதுமாகத் தானே யரசாளவேண்டு மென்று, நுகத்தலிபெங்கு நிறைந்திருக்க நோக்கம் பலதெல்லாந் தானகவு, முகக்கு நெருப்போடு காற்றுநீரு முலகம் பலதெல்லாம்

* பீடமென்பது தான் குருசு என்று சொல்கின்றது. குருசு என்பது பரிபாஷைக்கிளவி, யென்றுணர்க.

புகுதுவதும், ஹக்குத் தானென்றே தனைப்புகழக் கருணைப் படைப்பெல்லாம் ஹயாத்துமாக. (196)

(இ-ள்.):—அந்த பீடத்தில் றப்பு அமர்ந்துகொண்டு தன் நுக்தாவின் வல்லபத்தைக்கொண்டு, பலபல படைப்புகளை தன் சூரத்தின் தோற்றப்பொருள்களாகவும் வரவேண்டிய காரணங்களாக பூதங்களால் ஏற்பாடு செய்து, ஹயாத்துல் கைபார் என்கிற கடலில் அடைத்தான். எ-று.

ஹயாத்துல் கைபாறுக் கடலினீறில் காக்ஷியுயிரெல்லாந்தான் படைத்து, தயாத்தி லெண்ணன்கு படைப்புக்கெல்லாந் தானேயு யிராகவிருக்கவென்று, சிபாத்து முப்பதுவிலம் பொருந்திச் சிறந்த யிலகுயிர் பெருக்கவென்று, மவுத்தினாலேதா னழிவதும் வருமை தனில் நன்மை கேட்பதுவும். (197)

(இ-ள்.):—அந்த நீரில் உயிர்களை எழும்பச்செய்து முப்பது பாங்குகளாக தன் சிபாத்தைப் பிரித்து மவுத்து என்பதில் உயிர் அழியவும், நன்மை, தீமை கேட்பதும் ஆகியவைகளையும் கற்பித்தான். எ-று.

நன்மை தீமைதா னுலகந்தனி னடப்பா யினித்தொகை செய்ததுவுந், தின்மை யிபுலீசு நரகுசேரத் தீனு னிறைநபிதெளில் சொர்க்கம், வண்மையமைக்கின்ற விதங்களெல்லாம் வல்லோ னெடிக்குமு னொருநினைவா, யுண்மை நினைத்தேனுன் முடியுமென்றே யுரைத்தான் குன்னென்று முடையவனே. (198)

(இ-ள்.):—உலகத்தின் நன்மை தீமைகளும், இபுலீசுடைய பாதையாகிய நரகத்தின் பட்டோலைகளும், நபியுடைய பாதையாகிய சுவர்க்கத்தின் தங்கரீகங்களும், இதனாலேயே ஆகுமென்றும்- குன்னென்னும் மொழி கூறினான். எ-று.

குன்னென்றெழுத்தத ி ரண்டு மாகுங் கூறுமெழுமூன்று மைந்தினாலே, குன்னென் றுரைக்கவே பயக்கூனென்றுங் கோல மிறையவனினைப்பதெல்லாந், தன்னாலமைத்தோமென் றனைத்து மொன்றாய்த் தானே கபூலுக்கு ளமையும்போது, மன்னான் குதறத்தாற் கடவுரிமை மகிழ்ந்தி திருமுன்னே யமைத்தவாறேன்.

(இ-ள்.):—குன் என்கிற எழுத்தாகிறது, இரண்டு அதன் விபரமாவது ஐந்தாகும், கல்குகளைக் குன்என்றெழுப்பியவுடன் கல்குகள் பயக்கூன் என்றெழிப்பிற்று. எ-று.

அமைத்தவிதமேதால் முஹூர்மாத மாதிதிரு முன்னேயுருவா மூந்த, வகுத்த காலைத்து ஞாயிறன்று வல்லோ னுலகானரூப மொன்றைப், பகுத்துப் பதினெண்ணு யிரவிதமாய்ப் பாரம்புவி பேழுங்கதிர் வெவ்வேறுந், தொகுத்தவாகு காட்டிங்க ளென்று தொலையாப் புவிக்கெல்லாம் வானமேழாம். (200)

(இ-ள்.):— அவ்விதம் சிருஷ்டிகள் அறுவாஹில் எழுந்தது முஹூர்ற மாதமாக இருக்கும். நாளாகிறது முதல் ஞாயிற்றுக் கிழமையாக இருக்கும். இதற்குள்ளே எல்லா ஜாதிகளும் உற்பத்தியாயிற்று. எ-று.

வான முதல் வெள்ளி பசும் பொன்ரண்டு வைரமூன்று வேண்டரள நாலா, மான மாணிக்க மைந்தாம் வான மதின்மே லாறுதான்புட்பராகக், தோணு மரகதம் பச்சையாகுந் துலங்கும் வானேழும் விதமேழுமாந், தானே நிலைபடந் தூணில்லாமற் றரித்த மீனெடு மதியும்ரண்டே. (201)

(இ-ள்):—ஞாயிற்றுக் கிழமையில் முதல் வானம் உண்டாயிற்று; அது சுத்த வெள்ளியாலானது. இரண்டாம் வானம் திங்கள் அது பொன்னுக இருக்கும். மூன்றும் வானம் செவ்வாய் அது வைரமாக இருக்கும். நாலாம் வானம் புதன் அது முத்தாக இருக்கும். ஐந்தாம் வானம் வியாழன் அது சிகப்பு மாணிக்கமாக இருக்கும். ஆறும் வானம் வெள்ளிக்கிழமை அது புஷ்பராகமாக இருக்கும். ஏழாம் வானம் சனி அது நீல முதலிய பல ரத்தினங்களாலும் உற்பத்தியாயிற்று. எ-று

மதியும் பலபல லெவ்குக்கலம் அந்தவானேழி னுள்ள தெல்லாம் பதியா யறுஷுமேற் குறுசு வைத்துப் பாங்காய்க் குறுசுமேற் றறுகாவுமா, யிதமா யமைந்துமேற் றவிசையேற்றி யெங்கும் ஸமதாக விரை நிறைந்து, விதனைச் சுமந்ததில் அறுசதனை யிறையோன் மலக்கல்லோ வேந்தி கொண்டார். (202)

(இ-ள்):— சூரிய சந்திரர்களும் அந்த வானத்தின் முகடுகு களின் வழியாக ஓடியாடவும், லௌஹு கலம் குர்சு முதலானவை களும் அந்த அருஷைச் சுற்றிச் சுழலவும், கிரஹங்களான நட்சத்தி ராதிகள் பூத்து நிற்கவும், றப்பு தன் ஆசனமாகிய பீடத்தில் வீற்றிருந்து ஸமதான கோலத்துடன் அமர்ந்தான். எ-று.

ஏந்து மறுஷதின் வஅுப்பமேதா லெழுபத்திராயிரம் வீதியாக,
* ஏந்து வீதிக்குங் குறையில்லாம லெழுபத்திராயிரமுத்துச்சர,
மீந்த பெரிதான சரமொன்றுக்கு மைம்பதினாயிர மாணிமுத்து, மேந்த
முத்துமே சரிநிதான மெழுவான் புவிக்கு மேலதிகமாகும். (203)

(இ-ள்.):— இவ்வளவு கனதியுள்ள அறுஷை ஒரே ஒரு மலக்கு தன் கையால் ஏந்தி நிற்கவும், அறுஷின் பெருப்பமாவது எழுபத்தீ ராயிரம் வீதியுடையதாகவும், வீதி ஒன்று ஒன்றுக்கும் எழுபத் தீராயிரம் முத்துச்சரங்கள் தொங்கவும், ஒவ்வொரு சரத்திலும் ஐம்பது ஆயிரம் ஆணி முத்துகள் இலங்கவும், ஒவ்வொரு முத்துக் களும் இந்த உலகத்தைப் போல் ஐம்பதாயிரம் உலகத்தின் திண்ணம் கொண்டது. எ-று.

அதிகம் பெரிதாக விளங்கு முத்து மடுத்த முத்திடைமைஞ்
நூறுண்டும், விடுத்த சரத்துக்கோர் சரத்தினிடை விரிவு பதினென்
ணுயிரமாண்டுதான், ஒருடுத்தசரம் பச்சை மரகதமாக் துலங்கு
வரத்தச் சுடருமாகும், பதியா யமைத்திறை தவிசிருந்த பாரம்
பெருநாளாந் திங்களாறே.

(இ-ள்):— இந்த முத்துக்கள் ஒன்றுக் கொன்றுக்கிடை ஐந்நூறு வருஷத்து தூலதூரம், ஒரு சரத்துக்குச் சரம் இடையே பதினாயிர வருஷம் தூலதூரம். அந்த சாங்களின் ஒளிவுகள் நவரத்தின ஒளிவுகளும் தரும். றப்பு வீற்றிருந்த நாளாகிறது பெருநாளாகும். இன்னும் ஆறும் திங்கட்கிழமை என்பதுங் கூடும். எ-று.

ஆறு திங்களி லடுத்த செவ்வா யாழம் நரகேழுமொயி
லோடையு, நாறுஞ் சுணையோடு நடக்கும் பால நஞ்சுவிடப்பாம்பு
தேழுங்காலி, நீறு படுமேழு நரகலோக நிசானிநரகுக்கோர் கோடி
தலந், தாறு தலத்துக்கோர் கோடிமாளி யதற்கு மாவுதே எனந்த
மாகும். (205)

(இ-ள்):— திங்கள் போக அடுத்த செவ்வாய் கிழமை யன்று ஏழு நரகங்களையும், வைஅுன் என்கிற அக்கினி யோடையும் காற்றம் பொருந்திய குளிகளையும், கிருத்துல் முஸ்த்தக்கின் பாலத்தையும், பாம்புகள் தேள்கள், நட்டுவக்காலிகள், பூரான்களையும், நரகத்து ஸபானியாக்கள், நிஷானிகள், செவிட்டு மலக்கு, ஆறு அடுக்கு நெருப்பு ஸ்தம்பங்கள், இருட்டு அறைகள் முதலானவைகளும், கோடி கோடி அக்கினி வீடுகளும் படைக்கப்பட்டது. எ-று.

* ஏந்த வீதி எந்த வீதி

அனந்தங் சதளதின் வலுப்பமேதா லைஞ்நூறுண்டும் வாலினீ அஞ், சுமந்த கடைவாலி லொன்பதாகுஞ் சுமந்தவிடமதிலணு வெடுத்தே, யமைந்த வானேழு முயரவைத்தா லந்த வானேழுந் தெறித்துபோகு, மனந்தங் கோடிதானரகந்தன்னை யாதியமைத்த நாட்செவ்வாயேயே. (206)

(இ-ள்.):— அந்த நரகத்தின் கொடிய விஷஜெந்துக்களில் நின்றும் ஒரு தேளாகிறது; அதன் வால் கொடுக்காகிறது; நீளத்தில் ஐந்நூறு வருஷத்துதலைதூரம் உண்டும். அதன் நுனியில் நின்றும் ஒரு கடுகு அத்தனைப் பிரமாண விஷத்தை எடுத்து, ஏழு வானத்திலும் தொட்டு வைத்தால் எல்லா வானமும் அப்படியே இடிந்துபோகும். இப்படியாக கொடியதுகளெல்லாம் படைக்கப் பட்டது செவ்வாய்க் கிழமையாக இருக்கும். எ-று.

ஏழு நிலைசெவ்வா யெட்டாம் புத னெட்டுச் சுவர்க்கமுமிலங்கு மொன்று, யேழு மலர்களில் பானெய்தேனு மேவி யுடைமது மிகுமணமும், வாழும் ஜென்னத்து வஸ்துகளும் வையமணற்சோலை கூறுல்கினு, நாளு புதனெட்டின் முடிந்த நாளாம் நல்ல வியாழன் தானென்பதாமே. (207)

(இ-ள்.):— ஏழுபோக எட்டாம் புதன்கிழமை யன்று எட்டு சுவர்க்கங்களையும் படைக்கப்பட்டது. பால், நெய், தேன், நன்மணம் தேவதா இன்பம் முதலான அறுசுவையுடைய ஹௌலல் கவ்தர் என்னும் நதி, இன்னும் சுவர்க்கத்து வில்தான் ஹூறுல்ஈன் கற்பகச் சோலை காமதேனுவு முதலான எல்லாப் பாக்கிய சௌபாக்கி யங்களும் படைத்து முடிக்கப்பட்டது. எ-று.

ஒன்பதாய் வந்தநாள் வியாழ முடையோ னமைத்திடு முயிரனைத்து, மின்ப துன்பமும் பாவநன்மை யிலையும் புற்பூடு மிமையோர்களும், வன்பு ஷைத்தானும் பரியுந்தேவும் வாரி யுயிர் ஜின்னும் நவமேகமு, மன்பா யமைத்தநாள் வியாழமாகு மடுத்த பத்தாநாள் வெள்ளியென்றே. (208)

(இ-ள்.):— ஒன்பதாவது வியாழக்கிழமையன்று உலகத்தின் நன்மை, தீமை, மரங்கள், புற்பூண்டுகள் ஜின்கள், பசாசுபூதங்கள், மலக்குகள், பலக்குகளும், ஒன்பது வகையான மேகங்களும் அமைத்தான். எ-று.

வெள்ளிக்கிழமையிற் பகற்பாதியில் வேத ஞலோடுங் சுகுபு நூறும், விள்ளத் தொலையாத தவநிலையும் விதமும் பகற்பாதி யிறைவன்பாக வுள்ளபடியே தானமையும்போது மொருமித்திறையவ னமைத்ததெல்லாம் விள்ளு மிறையவன், பரத்தைநோக்கி விரும்பிச் சுஜூதிலே விழுந்தநாளாம். (209)

(இ-ள்.):— வெள்ளிக்கிழமையன்று பாதிப் பகலையிலே நாலு வேதங்களும், ஸுஹுபுகளும், மஅரிபா உடைய இல்முகளையும், படைத்து மற்ற பாதிப்பகலையில் படையுண்டெழுந்த எல்லா சிருஷ்டிகளும் ஆண்டவனைநோக்கி ஸாஷ்டாங்கம் செய்தது. எ-று.

விள்ளும் சுஜூதிலே படைப்புக்கெல்லாம் வேத பெரியவன் பரிமானமாம், உள்ள உயிரான படைப்புக்கெல்லா மொளிவு நானென்றே யுவந்து நிதம், வெள்ளிவணக்கம்போ னிதம்வணங்க வேதமுறை சொல்லிப் படைப்புக் கெல்லாம், வள்ளலிறையவன் தனிநிறுத்தி வல்லோ ஞதத்தை முன்னேவைத்து. (210)

(இ-ள்.):— இன்னும் அந்த நாளையில் கல்குகள் தன்னை வணங்கின பிறகு அல்லாஹுத் தஆலா தன் உஜூதை ஆதமுடைய நெற்றியில் ஏற்றி எல்லாரும் இவர்க்கு ஸுஜூது செய்யுங்கள் என்று ஏவ. (இன்னும்)

ஆதம் சிரசதின் முஹம்மதவ கழகாமொளியினி லணுப்போல் வைத்து வேத பெரியவ னுரைத்தபடி விழுந்து சுஜூதிலே விழுந்த தெல்லா, பாதி விழுந்ததும் விழுகாததும் படைப்பிற் பலவிதமாகும் போது, சோதி முஹம்மதைச் சுவர்க்கமீதிற் சூழ்ந்த கொலுவிலே யரசிருத்தி. (211)

(இ-ள்.):— மேற்படி ஆதமுடைய நெற்றியின் கண்ணே முஹம்மதிய்யாவின் நிறைந்த ஒளியில் நின்றும் ஒரு அணுத்தனை ஒளிவை வைத்து, ஏவினதும் உடனே சிருஷ்டிகளெல்லாம் ஸுஜூதில் விழுந்தன. அவ்விதம் விழுந்ததில் இருவிதமாயிற்று. பாதி சம்மதங்கொண்டு விழுந்தன அதெல்லாம் இன்ஸான். பாதி சம்மதியாமல் விழுந்தன அதெல்லாம் பலபல கோலமான படைப்பு களாய் விட்டன. எ-று.

இருந்த சுவர்க்கசிங் காசனத்தி லெல்லாப் படைப்புக்கு மிக்றையுரைத்தான் பொருந்தி முஹம்மதை நடுவில் வைத்துப்போற்

றிச்சிங் காசனத் தெழுதரமாய், நிரம்பும் பிரகாசஞ் சுற்றி வந்து நீணட பதத்திலே யணிய வென்றே, யிறப்பும் பிறப்பில்லான்றுன் விபர மெல்லரப் படைப்புக்கும் பரிமானமாம். (212)

(இ-ள்.):— அப்பால் றப்பானவன் முஹம்மதியாவை ஒரு எவ்வர்ணமான சிங்காசனத்தில் உட்கார வைத்து சிருஷ்டிகளை நோக்கி இவரை வலஞ்சுற்றி வாருங்கள் என்றுன். அவ்விதமே உலக கோடிக ளெல்லாம் முஹம்மதியாவை பிரதக்கணஞ் சுற்றி வந்தன. எ-று.

எல்லாம் படைத்தவ னுரைத்தபடி யெழுந்த வுயிரெல்லா மொருதிரளாய், மெல்லக் கடலேழுந்திரண்டு பொங்கி விம்மி யெழுந்தாற்போ லொருகூட்டமாய், வல்லோன் சுவர்க்க சிங்கா சனத்தின் வள்ளல் முஹம்மதை நடுவே வைத்துத், துள்ளி விழுந் தோடி யேழுதரஞ் சுற்றிப் பதத்திலே சுஜூது செய்தார். (213)

(இ-ள்.):— கடல் வாழ் ஜீவராசிகள் முதலான யாவற்றும், ஜின்களும், நவகோடி ஸமஸ்தபிர்மங்களும் நமது முஹம்மதியாவை வலம் சுற்றி வந்து ஸுஜூதும் செய்து வாழ்த்தி நின்றன. எ-று.

செய்தார் பதநோகத் திருச்சரணஞ் செய்த குழுவெல்லா மெழுந்து நின்று, வையமுல கெல்லாம் புகழுமெங்கள் வள்ளல் முஹம்மது வடிவைப் பார்த்தார், மெய்யின் முழுதுமே கண்டோ ரில்லை மெனியுருவான வுறுப்பி லொன்றை, வையம் பல பேர்கள் பலவிதமாய் வள்ளல் முஹம்மது வடிவு கண்டார். (214)

(இ-ள்.):— அங்கு வந்து கூடி நின்ற எண்பது கோடி ஜீவராசிகள் எல்லாம் முஹம்மதியாவைப் பார்த்தார்கள். ஒருவராவது சரியாய் திரேக முழுமையும் கண்டவர்கள் கிடையாது. ஆனால் பல பேர்களும், பல மாதிரியான உறுப்புகளை மாத்திரம் கண்டார்கள். எ-று.

வடிவு முஹம்மது மிருந்தகோலம் வைய மனுவோர்க ளறியச் சொன்னேன், முடியாப் பதினுலு நுபுவ்வத்தோட முன்னே னபிகோலு விருந்தவாறு, நெடிய சுடரோடு விளம்பலானு னிறமுங் கண்ணுடி மதிவிருத்தம், வடிவுக் கடலோசை முஹம்மதிய்யா வடிவு குமரி போல் வரை துலங்கும். (215)

(இ-ள்.):— முஹம்மதியாவின் வடிவானது எப்படியானால் பதினான்கு துபுவத்துடன் காலாவித நிறங்களையுந் தரும்படியான பஞ்சவர்ணக் கண்ணாடியின் தோற்றம் போல ஒரு பூரண சந்திர வட்டத்தின் கலையை ஒத்து முகவரை இருதபத்து வயது கன்னிகாப் பெண்ணின் வடிவாக இருந்தது. எ-று.

துலங்குமட்சரங்குரானெழுத்துத் துய்ய கருநிறம் சுறுமாவாக, விலங்கு மாணிக்கம் பச்சை முத்து வின்னம் பலபல புட்பராக, மலங்கார மீரேழ் துபுவத் தொன்று யந்தத் தவிசிலே கொலு விருந்தா, ரிலங்கு முஹம்மதா யிருக்கும் பெண்ணை யெல்லாக் குழுவுமே யெழுந்து பார்த்தார். (216)

(இ-ள்):— அதன் மேனி முழுவதும் குர்ஆன் அட்சரங்களாற் பொதிந்தும், சுறுமா விட்டும், இருந்த தவிசோ பதினான்கு துபுவத்தின் ஒளிவுகளுடன் நவரத்ன கஜிதாதிகள் வைத்தழுத்தியது, இப்பேர்ப்பட்ட சூறத்தையுடைய முஹம்மதிய்யாவை ஸமஸ்த உலகங்களும் எழுந்து பார்த்தன. எ-று.

பார்த்தார் பல பேர்கள் பல விதமாய்ப் பாவ நன்மையும் பலனும் வேறாய், வேற்றுமையாக வதனங் கண்டோர் வேறே வேறெதான் பலனே யென்றும்; பார்த்துக் கலத்தைத் தான் லெவ்குதனிற் பாங்கா யெழுதுமென் றிரையுரைக்க, வார்த்தை நானென்ன வென்று சொல்வேன் வரையும் லெவ்குட வரிசை சொல்வேன். ( )

(இ-ள்):— முஹம்மதியாவைப் பார்த்த கல்குகளின் கூட்டங்களுக்கு திராணி போல் கிடைத்த பலாபலன்களை தீமைகளைப் பற்றி எழுத வேண்டியதற்காகவே லௌஹுல் மஹ்பூல் பலகையில் எழுதும் படியாகக் கலத்துக்கு உத்திரவு செய்யப்பட்டது, அதன் வரிசையைச் சொல்லுகிறேன். எ-று.

வரியின் முதலவன் றிருநாமத்தை வகையாய்ப் பிசுமிலை முதலெழுதி, யுரிய படைப்பெல்லா மடியாரென்று முயிறு மவனல்ல தில்லை யென்று, மரிய வுயிர்க்கெல்லா முலகுதனி லன்னங் குறையாமற் கொடுப்பே னென்றும், பெரிய தவத்தோரை மறுமை மீதில் பிரிசப்படுத்தியே வைப்பே னென்றும். (218)

(இ-ள்.):— லௌஹில் முதல் வரியில் அல்லாவுடைய திருநாமமாகிய பிஸ்மிலை எழுதி, அப்பால் இப்போது எழுந்த படைப்பு

களெல்லாம் றப்புடைய அடியார்கள் என்றும், எல்லா றூஹுகளும் அல்லாவை அன்றி வேறில்லை யென்றும், உலகத்திலுள்ள இந்த ஜீவாத்மாக்களுக்கெல்லாம் இரணங்கள் கொடுக்கப்படுமென்றும், மஅரிபாவுடைய மஹான்களுக்கும் மறுமையில் பெரிய நாஜாத் துக்களைக் கொடுக்கப்படுமென்றும் (இன்னும்)

வையம் பாவிக ணரகுக்கென்றும் வாழுந்தவமெல்லா முஹம்மதென்று, மெய்துங் கலிமாத்தான் லாஇலாஹ இல்லல்லாவென்றுமே யெழுதித், துய்ய கலிமாவை முஹம்மதுர் றஸூலுல்லாஹியைப் பின்னெழுதிச், செய்ய நபிபேரு மியார்கள்பேருஞ் சேரவெழுதியே புடைப்பையெல்லாம். (219)

(இ-ள்.):—உலகத்திலுள்ள பாவிகளை நரகத்தில் தள்ளப்படுமென்றும், நன்மையாளர்களை சொர்க்கஞ் சேர்க்கப்படுமென்றும், தவமெல்லாம் முஹம்மதுக்கு உள்ளதென்றும், எல்லாவற்றுக்கும் கலிமாவானது லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் றஸூலுல்லாஹி யென்றும், கலிமாவை எழுதி அத்துடன் நபியவர்கள் பெயரையும், நால்யார்களின் பெயரையும் எழுதி குர்ஆனையும் எழுதி. (இன்னும்)

எல்லாப்படைப்பிறை தனைவணங்க விணங்குந் தவமோடு மறிவுஞ்சொல்லி, கல்லார் தவ்மோடு பாவநன்மை நடப்பாரினித் தொகையாகவென்று, சொல்லுஞ் செயல்நன்மை சுவர்க்கஞ் சேர்வார் துன்பநரகாள்வார் கொடியோரென்று, மெல்லாம் லெவ்கிலே கலமெழுதி யெழுந்த குழுவெல்லாம் வகுத்தெழுதும். (220)

(இ-ள்.):—வணக்கம் இப்படி, பாவமிப்படி யென்றும், அது அதுகளுக்குக் கிடைக்கும் கூலிகள் இன்னது இனியது என்றும், கலமானது எழுதிவிட்டு அப்பால் முஹம்மதைப் பார்த்த கூட்டங்களின் பிரிவுகளை எழுதுகிறது. எ-று.

எழுதும் விதமான பலனேதென்று லெங்கண் முஹம்மதை யெவருங்காணப், பழுதில் லான்பி சிரசுகண்டார் படைத்தோன் மலக்கவர் குழுவுமாகு, மெழுதுந்திருநாமம் வேறுவேறே யிலங்கும் நபியவர் நுதலைக்கண்டோர், முழுது நபியாகு நாமம்வேறாய் முஹம்மதுநபி விழியைக்கண்டோர். (221)

(இ-ள்.):—என்னவென்றால் முஹம்மதின் சிரசின்வடிவைக் கண்டவர்கள் மலக்குகளாவார்கள் என்றும், முஹம்மதுடைய நுதலைக்கண்டவர்கள் எல்லாரும் நபிமார்களும், றஸூல்மார்களு மாவார்கள். இன்னும் முஹம்மதுடைய விழிகளைக் கண்டவர்கள்.

கண்டாரிறையவன் தீதாறையுங் கருணை முஹம்மது தீதாறையு, நன்றாய்த் தெரிசித்தோர் நாமம் வேறும் நபியி னிருசெவி கண்டோரெல்லா, மென்றுமறைநெறி யறிவுக்கேட்டு மிதமாய் நடப்பவர் நாமம்வேறு, மன்றே நபிகுமிழ் கண்டோரெல்லா மவரே மூமினென் றறியலாமே. (222)

(இ-ள்.):— கண்களைக் கண்டவர்கள் அல்லாவையும் றஸூலையும் கண்ட குதுபுமார்களாவார்கள். இரண்டு செவிகளையும் கண்டவர்கள், ஆலிம்கள், புலவர்கள், பாவலர்களாவார்கள். கன்னத்தைக் கண்டவர்களெல்லாம் மூஃமினனவர்களாவார்கள்.

அறிவு பொருந்திய மறைநெறியை யறிந்தோர் நபிமொழி திருவாய்க் கண்டடோர், நிறையுங்குரலோசை கழுத்துநீள நேரே தெரிந்தவர் காபிலாகு, மறைய நிறைகாபீல் குழுவெல்லோரு மார்பு முஹம்மதை மகிழ்ந்துகண்டோர், பிறகுதீனைகுமவுலாகுலம் பிரிய முஹம்மது பிறமுங் கண்டோர். (223)

(இ-ள்.):—இன்னும் முஹம்மதின் திருவாயைக்கண்டவர்கள் குர்ஆனை மனனமாயுள்ள ஹாபில்களாவார்கள் என்றும், இன்னும் மார்பைக்கண்டவர்கள் கல்பு திறந்த சீமான்களாவார்கள். முதுகைக் கண்டவர்கள், மவ்லா இஸ்லாம்களாவார்கள். எ-று.

கண்டா ரிளவயிரல்லாவுக்காங் தடிந்த பசியாற்றுங்காமிலாகுங், கண்டாரிருப்பிட மிறைபதத்திற் காக்ஷிநிலைப்பெற்ற அவுலியாக்கள், நன்றும்வலக்கையைக் கண்டோரெல்லா நாயன் பரத்திலேகைர் செய்வோரு, மென்றுமிடக்கையைக் கண்டோரெல்லா மேற்கும் ஷஹீதுகள் வெற்றிபெற்றோர். (224)

(இ-ள்.):— வயிற்றைக் கண்டவர்கள், அன்னதானம் செய்கிறவர்களாவார்கள். அதன் ஆசனங் கண்டவர்கள் அவ்லியாக்களாவார்கள். இடது கையைக் கண்டவர்கள் பீஸபீல் செய்கிற ஷுஹதாக்களாவார்கள். அதிலும்வெற்றி பெறுவார்கள். எ-று.

வெற்றி முஹம்மதி னிருதுடையும் விரும்பித் தெரிசித்த பேர்களெல்லா, மெத்த நடந்துதான் கஹ்பாவிலே மேனியிலங்கவே ஹஜ்ஜு செய்தோர், முற்று முழந்தாளின்கீழே கண்டோர் முஹம்மது நபி யும்மத்தோரிற், பத்துநாட்டொழுப் பலநாள் விட்டுப் பாவமலையேனும் பஞ்சேயாகும். (225)

(இ-ள்):— இரண்டு துடைகளைக் கண்டவர்கள் மக்காவில் போய் ஹஜ்ஜு செய்வார்கள். முழந்தாளுக்குக் கீழே கண்டவர்கள் பத்துநாள் தொழாமலும், அப்பால் தொழுகிறதுமாய் அலைகிற ஏமாற்றுத் தொழுகையுள்ள பாவிகளாவார்கள். எ-று,

பஞ்சத்தனமான தீனேரென்றும் பாங்கு நடைபிடி பலதறியார், மஞ்சுகுடைநிழல் முஹம்மதரின் மலரின் பாதத்தைக் கண்டோர்களு. துஞ்சுபுகழான முஹம்மதரின் மேனிமுழுதுமே கண்டாரில்லை, யஞ்சிற்பிரகாசஞ் சுற்றிவந்தே யணுவுங்கண்டிலார் குபிரானதே

(இ-ள்):— இந்த விதமாக பல பல உறுப்புகளைக் கண்டார்களே யல்லாமல் ஒருவராவது முஹம்மதைக் கண்டவர்கள் கிடையாது. ஒன்றுமே காணாத ஒரு கூட்டம் கடைசியில் நின்று பாதவித்தது அது காபிரீன்களாயிற்று. எ-று.

குபீருக் கதிகமாக மனந்தங்கூட்டம் கூட்டம் பிதற்கணந் தனையகற்று, நபியைப் பிதற்கணஞ் சுற்றாமலு நாடுந்தெரிசனை காணாமலும், ஹபிபைப் பிதற்கணம்வந்த பேரைக்காண்க நாணியே நின்றோரெல்லா, முகியாபலவுயிர் மிருகமியாவு முனைபிக்கெனும் ஜாகில் ஷைத்தான்குலம். (227)

(இ-ள்):— அந்தக்கூட்டம் ஒவ்வொரு கூட்டத்துக்குக் கிடைத் திருக்கும் தறஜாத்துக்களைக் கண்டு வெட்கி நாணி முகங்கோணி மற்ற கூட்டங்களுடன் வந்து சேராமல் மதிமறந்துபோய் நின்றது. இதில் நின்றுந்தான் ஷெய்தானும் அவன் கூட்டங்களும் இணை பிரிந்தது. எ-று.

ஜாஹில் குலமான ஷைத்தான் குலஞ் சகல குலமற்ற சாதிக்கெல்லாந், தாக்கில் லாக்குல நாமம்வேறாய்த் தங்கியவர் நின்ற தூரத்தாலே, பாக்கியந் துன்பம் பாவகன்மை பலனுமிவளவென் றெழுதுங்கலம், நோக்கிப் படைப்பெலாந் திருமுன்னாக கொடியில் வரச்சொன்னானுக்கத்தானவன். (228)

*(இ-ள்):—* அப்போது அந்தக் கூட்டத்தாருக்கு ஜாஹில் கூட்டம் என்று பெயர் சொல்லப்பட்டது. எல்லாக் கூட்டத்தாருடைய தூஷணைகளும் செய்யப்பட்டது. இந்த விபரமெல்லாம் கலம் எழுதி முடிந்த உடனே றப்பு எல்லாக் கூட்டங்களையும் தன்சமுகம் வரச்சொன்னான். எ-று.

அவனே படைப்பெல்லா முன்னிறுத்தி யண்ணல் முஹம்மதை யறுஷுதனிற், புவனம் பதினாறு முகவிளக்காய்ப் புதியோன் றிருமுன்னே கொழுகிவைத்துத், தவனமாயென்னைப் புகழுமென்றான் தாயுங் காயுமாய்ப் புகழும்போதி, லவனி யுலகுயிர் மலக்குமற்ற வாவியமைக்கின்ற வுயிரையெல்லாம். (229)

*(இ-ள்):—* படைப்புகள் கூட்டம் கூட்டமாக வந்து நின்றவுடன் தன் ஆஷிக்காகிய முஹம்மதியாவை அறுஷுடைய ஹாவின் பதினாறு லோகங்களுக்கும் சுடர் விடக்கூடிய ஒரு தூண்டாமணித் தீபமாகத் தொங்கவிட்டு சொல்கிறான். எ-று.

எல்லா வுயிரையு முன்னிருத்தி யேக பெரியவன் பரீமானமா, மெல்லா மமைத்தேனு னெனதாசையா லென்றனுசையை யெவர்க்கு மீந்தேன், வல்லோ னருநிசை நிறைந்தபேரும் வம்பாங் கொடும்பாவிக் கில்லையென்றே, அல்லா வுரைப்பதுக் கெவ்வுயிரு மந்தப்பரிமானுக் குகையுந்தானே. (230)

*(இ-ள்):—* நீங்கள் என்னைப்புகழுங்கள் என்றான். தாயும் காயும் என்று புகழ்ந்தார்கள். அப்பால் றப்பு கல்குகளைப் பார்த்து உங்களை யெல்லாம் படைத்தேன் என் ஆசையாலே இப்போது என் ஆசையை உங்களுக்குத் தந்து விட்டேன் என்றும், ஆனால் என்னுசை ஒன்றிருக்கிறது அது பாவிகளுக்கு கிடையாது, காதாக்களுக்குங் கிடையாது. எ-று.

உகைய மாகவே யிறைவகுத்த வுயிரென் றுரைப்பதுமொருருதிரளாம், வகையா லிறையவன் முன்னிருத்தி வடிவதிலங்கிய தனதாசையிற், றுகையி லடங்காத விறையாசையிற் றெட்டுத் தெறித்தானே துள்ளிச்சுடர், பகையில் லாவுயிர் வலதுக்கெல்லாம் பட்டு திரையாசை யொளிவானது. (231)

*(இ-ள்):—* உதயமென்பது ஒரு விதமான கூட்டம் அது றப்புடைய றஹுமத்தாக இருக்கும், அதில் நின்றுந்தான் கல்கு

களுக்கு இஷ்க்கு கிடைத்தது, அது தான் எல்லாத்துக்கு மூல கருவியாக யிருக்கும். எ-று.

ஒளிவு மிறையவ னுசையாகு மொளிவுமுயிர்க்கெல்லா மொருவனீந்தான், றெளிவொன் றொளிவான விறையாசைதான் றிறமுங் குறைவுமாய்ப் பலவிதமாய்க், கொழுகி யிறையாசைதரித்தமட்டுங் குதாயி னருளல்லோ யுதித்ததப்போ, வழுவில் லாதவன் கமாலியத்தி லனைத்து முயிர்பொங்கி யாசையாச்சே. (232)

(இ-ள்.):—ஒளிவு றப்புடைய இஷ்க்கு அதுதான் பலபல தோற்றப் பொருட்களாக சிருஷ்டிக்கப்பட்டது. றப்பு இஷ்க்கு கல்குகளின் இஷ்க்கு என்பது எப்படி என்றுல்! அது அவனுடைய கமாலியத்தில் நின்றும் வெளியானது. அதுதான் ஆலம் இன்ஸான் என்பது. எ-று.

ஆசை யிறையவ னருளினுலே யந்த றூகெல்லா மதிமோகமாய், பாச மொருறூகை யொருறூகுதான் வந்து தழுவியே முகந்ததுவு, மாசை யொருறூகை யனேகம்றூகை யாசை யாகத்தாளொருறூகு மாய்ப், பாசமாய்க் கட்டித் தழுவினதும். பாரி லுயிர் சேரும் பரிபாரமே. (233)

அப்படி அல்லாஹுத் தஆலாவின் இஷ்க்கென்ற மோகத்தால் சிருஷ்டிக்கப்பட்ட ரூஹுகளெல்லாம் ஒன்ருெடொன்று அணைத்து முத்தி முகந்துக் கொண்டதுகள். அத்தகைய குதுகுலத்துடனிருந்த ரூஹுகளெல்லாம் தங்களின் ரூஹுகளை உற்பத்திசெய்ய காரண பூதியமாயிருந்த நூறுல்அஹ்மதியாவின் ரூஹில் வந்து அடைக்கலம் பூண்டுக் கொண்டதுகள். அப்படி அடைக்கலம் பூண்டுக்கொண்ட ரூஹுகளை நூறுல் அஹ்மதியாவென்ற பரஞ்சோதி தன் கருணை என்ற அன்பால் அணைத்துக்கட்டிக் கொண்டது, அந்த மகிமையின் வல்லபத்தால் எல்லா றூஹுகளும் தன் பரிவாரத்துடன் ஒன்று சேர்த்துக் கொண்டதுகள்.

பாரப் பெரியவனொளிவாசையிற் பலன்பெற் றிருந்தோரைப் பகரக்கேளீர், கேிற் பெரியோரு மிமையோர்களு நிலத்திலறியாம லிறப்போர்களு, மாரு மிறைவாசை தரித்தில்லர் தானல்லல் ஷெயித் தானுக் கொசருவுமா, மேரு பறுலாசை தரியார்குத மிம்மை மறுமைக்கும் பாவிதானே. (234)

(இ-ள்.):—அந்த ஒளிவை யநுசரித்தவர்கள், மலக்குகளும், ஜின்களும், அநுசரியாதவர்கள், கொசருக்களும், பாவிகளுமாகும்.

எல்லாத் திருமுன்னே நிறுதிங்கொண்டங் கெங்கோன்பரிமான மேதுசொல்வா, னெல்லாப் படைப்புக்கும் பொதுவாயொரு வென்று னமானித மிருக்குதென்றும், அல்லா வமானிதமென்ற பொரு ளறியபெரும் பொரு ளார்சுமப்பா, ரெல்லா மலக்குஜின் பரியுந்தேவு மென்றன் மனுவானதெவ்வுயிரே. (235)

(இ-ள்.):—இவ்வளவு படைப்புகளையும் றப்பு தன் திருசமு கத்தில் நிறுத்திக்கொண்டு, என்னிடம் ஒருஅமாநிதம் இருக்கின்றது அது மெத்தப்பார தூரமானது, அதை உங்களில் யார் சுமப்பார் சொல்லுங்கள் என்றும். (இன்னும்)

எல்லா வுயிர்களே சொல்லக்கேளு மென்ற னமானிதஞ் சிந்தாமலே, நல்லாப்பேணுரை நரகுசேர்ப்பே னுயனுயிரான வமானிதத்தை வல்லாண்மையுடன் பேணிவைக்க வலுமைக்குல மாரு சொல்லுமென்றான், அல்லா திருமுன்னே யுயிர்கள் சொல்லு மா திபெரியோனே தம்பிரானே. (236)

(இ-ள்.):— அந்த அமாநிதத்தைப் பேணார்களை நரகஞ் சேர்ப்பேன் அதைப் பேணிச்சுமந்து காப்பாற்றுபவரைச் சொல்லுங்கள் என்று றப்பு சொன்னான். எ-று.

ஆதி பெரியோனே தம்பிரானே யறியும்வகை யெல்லாம் வகுத்தவனே, சோதி பெரியவா வமானிதத்தைச் சுமக்கத் தகுமில் லாக்குலங்களென்றும், நீதி மலக்குஜின்பலவுயிரு நேராயிறை முன்னேயே லாதென்றும், ஆத நபியொளி யிறையை நோக்கி யந்த வமானிதஞ் சுமப்பேனென்றே. (237)

(இ-ள்.):— அதற்குப் படைப்புகள் சொல்லும் றப்பனே! பெரியவனே! அந்த அமாநிதப்பொருளை எங்களில் யாருக்கும் சுமக்கச் சக்தியில்லை யென்று சொல்லி விட்டன. அதன் பிறகு ஆதம் நபியாகிறவர் றப்பை நோக்கி நான் அந்த அமாநிதத்தைச் சுமக்கிறேன். எ-று.

சுமப்பே னெனச்சொல்ல வாதநபி சொன்னானிறையவன் கொடுத்தேனென்று, மமைப்பேன் முஹம்மதை மனுக்குலத்திலாலத் துயிரெல்லா முமக்கடுமை, சமைப்பேன் மறைகாலுமனுடர்க்காகுஞ் சகல படைப்பெல்லா மனிதர்க்காகு, மமைப்பேன் சுவர்க்க முமுலக வாழ்வை வையமனிதர்க்கே படைத்தேனென்றான். (238)

(இ-ள்.):—அவ்விதம் ஆதம் நபி நான் சுமப்பேன் என்று சொன்னதின் பிறகு றப்பு அப்படியே கொடுத்தேன், முஹம்மதை உம்முடைய மரபில் உற்பத்தி செய்கிறேன், ஆலத்தை யெல்லாம் உமக்கு அடிமை ஆக்கிறேன், நாலு வேதங்களும் உமது சந்ததி களுக்காக இறக்கின்றேன். சகல ஜந்துக்களும் உமது சந்ததி களுக்கே ஆக்கி வைக்கிறேன், என்றான் எ-று.

படைத்த படைப்பெல்லா மனுடர்க்காகும் பார வமானித மேதோவெனி, லெடுத்த முஹம்மது மார்க்கந்தனி லென்னை யவனென்றே யினையில்லாமற், சடத்தி லொளித்தது பரவே யென்று தானே நானென்றுந் தானிறையக், கொடுத்தேன் மனுடர்க்கு மனுக்குலத்திற் குருவு முஹம்மது நானேயானேன். (239)

(இ-ள்):— நான் படைத்த படைப்பெல்லாம் மனிதற்குத் தான். அமானிதமாவது, என்னை அறிகிறது, அறிந்து வணக்கஞ் செய்கிறது, அதற்கு சற்குரு முஹம்மதாக இருக்கும். முஹம்மது என்பது நானேயாகும், என்று ஆதத்துக்கு றப்பு சொன்னான். எ-று.

நானே மனுடர்க்குச் சொந்த மென்று காயன் பரிமான முரைக்கும் போது, வேண வகைளான வுயிர்க ளெல்லாம் வேண்ட வேண்டியே நபியைக் கேட்கு, மென்ன விதத்தாலு மனுரூபமா யென்தன் முஹம்மதை யமைப்பே னென்று, சொன்ன மாராய மனுடர்க்கிரை சொல்லத் தொலையா நாள் வெள்ளிபத்தே. (240)

(இ-ள்):— நானே மனிதர்க்குச் சொந்தக்காரனுகுவேன் என்றும் சொல்லினான். என் ரூபத்தில் முஹம்மதை மனிதர்களுக்குக் கிடையில் உற்பத்தி செய்வேன் என்றும் றப்பு நல்மாராயஞ் சொன்ன நாளாகிறது வெள்ளிக்கிழமையாக இருக்கும். எ-று.

பத்துத்தெய்நியி லாறுநாளிற் படைத்த படைப் பெல்லா மிறை முன்னாக, மற்ற நாளொன்று சனிக்கிழமை மன்னன் படைப்பெல்லா முன்னே நிற்கக், குற்றப் பாவிக ணரகுதனிற் கொடுமைத் தழன் மூட்ட வேணு மென்று, முத்த பரிமான மிசுறாயிலே யுமது கதுப் பிட்ட பேழை வாங்கி. (241)

(இ-ள்):— பத்துகநி ஆறு நாளையில் எல்லா வஸ்துவும் எழுந்து நிற்க, மற்றுவது நாளாகிய சனிக்கிழமை யன்று பாவிகளுக்காக வேண்டி நரகத்தில் நெருப்பு மூட்ட வேணும் என்று இஸ்ருயீலை அழைத்து உமது பேழையைத் திறந்து வையும் என்றான். எ-று

பேழை திறந்தழ னரகேற்றவும் பெரியோ னுரைப்படி மெழுப் பேழையை, மீளத்திறக்கவு நெருப்பின் மீதின் வேங்கைப் புலி யொன்று வெள்ளையாகத், தாழப் பதுங்கியே வாலடித்துத் தலையை

யுயர்த்தியே யிருந்து கொண்டே, யூளை யிடுங்கோடை வானிடிபோ லொலித்துக் குரலோசையேது சொல்லும். (242)

(இ-ள்):— அப்படியே தன் பேழையைத் திறந்து வைத்தார். குபீரென்று பத்திய நெருப்பில் ஒரு வேங்கைப்புலி வெள்ளை நிறமாக வாலை யடித்து, தலையை உயர்த்திக் கொண்டு கோடை காலத்து இடியைப் போல் கெர்ச்சித்து சொல்லும். எ-று.

சொல்லத் தொலையாத விதங்க ளெல்லாஞ் சோதி பெரியவனமைத் தெல்லாம், அல்லா வொருவனே யழிவில்லாதா னரியபடைப் பெல்லா மழிய வென்று, நல்லான் படைப்பெல்லா மழிக்கும் வேங்கை நானே மவுத்தென்ற நாமமாகுஞ், சொல்லாற் செயலாலும், வலுமையாலும் சுரூப வுருவான சோதி யெல்லாம். (243)

(இ-ள்):— நானுகிறது. றப்புடைய படைப்புகளை யெல்லாம் அழித்து விடக்கூடிய வேங்கையாகிய மவுத்து நானுக இருக்கும்.

எல்லா மழிப்பது நானேயாகு மிறையோ னொருவனே யிருப்ப தாகு, மில்லா தெனக்கு முன் னொருபடைப்பு நீறு பொடி செய்வே னிமிடத்துள்ளே, வல்லோ னறுஷோடு வான்புவியும் வகையு மலக்குகள் பலவுயிருங், கல்லு மலைபுல்லும் விருட்சம்பூடுங் தக்க பெரியவனமைத் தெல்லாம். (244)

(இ-ள்):— என்னுலே தான் வஸ்துக்களும், கல்குகளும், அழியும், என் முன்னே எப்பேர்ப்பட்ட அண்டலங்களும் பொடி, பொடியாய்ப் போகும். மலக்குகளும், ஜின்களும் என்னால் அழிந்து போவார்கள். எ-று.

எல்லா மழிக்கவே யெனைப்படைத்தா னெங்கு நிறைந்து நானிருப்பே னென்றுஞ், சொல்லுங்குரலோசை சில முளக்கந் தோன்ற நடுங்கியே யுயிரனைத்து, மெல்லாந்தடுமாறி நினைவழிந்தே யிருந்த திருந்தாப்போ லுருகிநீரு, யெல்லா முன்போலே றகுமத் தென்னு மிறையோன் கடலிலே விழுந்து போச்சே. (245)

(இ-ள்.):— மவ்த்தானது இவ்விதம் சொன்ன சொல்லால் படைப்புக ளெல்லாம் நடுநடுங்கி உருகி றஹ்மத் தென்னும் கடலில் நீராய்க் கலந்து விட்டன. எ-று

விழுந்த வுயிரெல்லாங் கடனீர் தன்னில் விருப்புற் றெழுந்துமே யிறையை நோக்கி, விழுந்து சுஜூதிலே விழுகும் போது மேலோனி

சுரூயீ றன்னைக்கூவிக், கழிந்த நெருப்பைத் தானரகுதனிற் கையாலணன் மூட்டிச் சலவையரகச், சினந்த வேங்கையைப் பேழை மீதிற் சீக்கிறமாக வடையுமென்றான். (246)

(இ-ள்.):—அந்த படைப்புகள் றப்பை நோக்கி ஸுஜூதில் விழுந்து கிடந்தன. அப்போது றப்பு இஸ்றூயிலைக் கூப்பிட்டு நெருப்பை நரகத்தில் அடைக்கவும், புலியைப்பேழையில் அடைக்கவும் உத்திறவு செய்தான். எ-று.

அடைத்தார் வேங்கையைப் பேழை மீதிலந்தவனலைத்தான ரகின் மூட்ட, வெடுத்தவாங்கார கோபமாக வெழுந்தநரகமு மொரு சுழலாய்த், தொடுத்த நாவுதான் பத்தொன்பது துய்யோன்ப தியெல்லாமழிப்பேனென்று, கடுத்த சினங்கொண்டுவானை நோக்கிக் கடிகிநரகேழும் வருகும்போது. (247)

(இ-ள்.):—அதுபோல் வேங்கையைப் பேழையிலும், நெருப்பை நரகத்திலும் அடைத்தார், உடனே ஏழு நரகங்களும் அழுன்றெழுந்து வானங்களைப் பொசுக்கி விடுகிறதுபோல் வரும் போது. எ-று.

ஏழு பூமியு மதிரவேங்கை யிடியின் முழக்கத்தால் மிகநடுங்கி, நாளும் பாதாள லோகநோக்கி நழுகும் பூமியைச் சுமக்கவென்று, காளைச்சிரசொன்று வளைந்தகொம்புகவையு மொன்பதுலட்சமாக, வேழு புவிபதி னெண்ணுயிரம் மெல்லா ஆலமுஞ்சுமக்க வைத்தான்.

(இ-ள்.):—மேற்படி புலியின் சப்தத்தாலே ஏழு பூமிகளும் அதிர்ந்துவிட்டன. அதை அசையாமல் சுமப்பதற்காக வேண்டி ஒரு காளைமாடு அதற்கு வளைவான கொம்பு அதன் பணர்கள் ஒன்பது லட்சம் உள்ளது. அதை ஏற்படுத்தினுன். எ-று.

சுமக்கு மிடபத்தைத் தகுத்தருவுஞ் சுமக்கு மூசிதான் தகுத் தருவை, யமைக்கு மூசியைக் கிண்ணமேந்த வந்த கிண்ணத்தை யாவுமீதிற், சமைக்கு மரவுக்கோர் நவரமானி சகல மகரத்தின் செகுளிநிற்கும், நிமைக்கு ஞெடிக்குமுன் ஞுனிமலையி னிருண்ட கலமேலே மகாநிற்கும். (249)

(இ-ள்.):—அத்தக்காளை மாட்டைச் சுமக்க ஒரு கலசத்தை உற்பத்தி பண்ணினுன், கலசத்தைத் தாங்க தஹ்த்தருவை உண்டாக்கினுன், அதிலொரு கிண்ணத்தை உண்டாக்கினுன்,

கிண்ணத்தை ஒரு பாம்பைக்கொண்டு தாங்கச்செய்தான், பாம்பை ஒரு மீனைக்கொண்டு தாங்கச்செய்தான். அந்த மீன் இருண்ட சமுத்திரத்தில் நிற்கும். எ-று.

நிற்குக்கடருங்கிறு நிமலேயி னோராயனைத்துமே நழுவும்போது, வைக்கு நிலேயாக நரகினுட வடக்குவாசலினிறுத்தி வைத்தா,னெக்கு நரகுவான் குறுஷறுசு மோங்கும் விருட்சமும் லெவ்குகல, மற்குஞ் சுவர்க்கபா தாளலோக மைம்பதினுயிரம் புரிசைதாங்கும். (250)

(இ-ள்.):—அந்த இருட்டுகடலே நரகத்தின் வடக்குவாசலின் வழியாக உள்ள அக்கினிக் கோட்டையண்டை ஆக்கிவைத்தான்.

தாக்கஞ் சரியவுஞ் ஜிபுரியீலேத் தலங்க ளனைத்திலுங் கலிமாத் தன்னைத், தாக்கு மிறைசொல்ல முன்னிலேயிற் றக்க பதியெல்லா நிதானமாக, மீக்க பதியெல்லா நிலேயாய்நிற்கு மேலே வாராமனரகு சுடத், தாக்பேதியவன் ஹயாத்துல்கைபார் தண்ணீர் தனைக் கொண்டே படைத்தானெல்லாம். (251)

(இ-ள்):—அப்பால் ஜிபுரிலேக்கொண்டும் எல்லாத்தலங்களிலும் கலிமாவை எழுதச் செய்தான், நரகத்து கொதிப்பு மேலே வராமல் ஹயாத்துல் கைபார் கடலே அமைத்தான். எ-று.

படைத்த பெரியவத னிருளறையிற் பண்டுநுக்கத்தாக விருந்தது தான், றெடுத்த அலிபாக வொளிவளர்ந்து தூய்யோன் முஹம்மது மதிற்பிறந்து, விடத்திற் பவளமாய் நபியிறஸூலு விறையின் வலதில் வெண்டரளமாகத், தொடுத்த நடுநிலேயாதம்பச்சை துலங்கு முச்சுடரிலங்கும்போது. (252)

(இ-ள்.):—றப்பு தனியே நுக்தாவில் இருந்து அலிபை வெளி யாக்கி முஹம்மதை அதில் நின்றும் வெளியாகச் செய்து முத்து, பவளம், பச்சை என்னும் முச்சுடர்களேயும் படைத்து இலங்கும் போது. எ-று.

முச்சுட ரொன்று யிலங்கும்போது முந்த நிறைந்திடு மிருட் களெல்லா, மச்சங் கலங்கியே திசை விட்டோடி அஜாசீ லெனு மொருவுருவெடுத்துத், துட்சணத் தோஷன் கொடியன்காலன் றுஷ்மனரகில்வந் திருந்துகொண்டான், வைச்சநரகமே துலங்குமற்ற வகையுமிறையவன் றுன்படைத்து. (253)

(இ-ள்):— முச்சுடர்கள் இலங்கும்போது, அதைக்கண்டு வெருண்டோடின இருட் கூட்டங்களானது அஜாஸி லென்கிற ஒரு உடம்பெடுத்து, அதன் முகூர்த்தமாக கொடிய பாதகனும், பாமரப் பயலும், காலனுமாகிய மூதேவியான இபுலீசு, நரகில் வந்திருந்து கொண்டான். எ-று.

படைத்த நிறுத்தவே யுலகுநிலை பாரநரகேழிந் தரிக்கும்போதி, லடுத்த காவியா நரகப்பந்தி லசாசீ லெனுமொரு மலக்குண்டானுன், வெடித்த கழுதைபோற் குறலோசையும் வேகமிருகம்போற் கரடி ரோமந், துடித்த குரங்குகை நாக்குவடுத் துதிக்கை மதகரிகாலும் வாலும். (254)

• (இ-ள்):— மற்றபடி ஹாவியா என்னும் நரகத்தில் அஜாசீல் என்று ஒரு மலக்கு உற்பத்தியானுன், அவன் குரலோசை கழுதையைப் போலும், வேகம் புலியைப் போலும், கை குரங்கைப் போலும், வாலும், காலும் யானையைப் போலும். எ-று.

வாலும் பணைத்துட லரவுதந்தம் வாயில் விநாற்றஞ் சிரசிற் கொம்பு, கோலும் வலக்கையி லிடக்கைகொள்ளி கொடுமைத்தன மெல்லாங் குடியிருந்த, கோல மிபுலீசுபிறந்த நாளாங் கொள்ளி நரகுக்கு வைத்தநாளா, மாலத்துயிரெல்லா மவுத்துண்டான வவதி பிறந்தநாட் சனிக்கிழமை. (255)

(இ-ள்):— உடல் பாம்பு போலும், வாயில் பீ நாற்றம், தலையில் கொம்புகள், வலது கையில் கிழக்கோலும், இடதுகையில் நெருப்புக் கொள்ளியும், கொடுமைத்தனமெல்லாம் உள்ளவனுகவும், பாவி இபுலீசு பிறந்தான். ஆனதால் சனிக்கிழமை இபுலீசு பிறந்த நாள் நரகுக்கு நெருப்பு மூட்டின நாளாகவும் இருக்கும். எ-று.

சனியோடேழுநாட் சரியானபின் சாற்றுமிறையவன் பரிமான மாந், தொனியா மவுத்தான வேங்கையுட துடிக்கா வுயிரெல்லா முருகி நீருய்ப், பனியாய்க் கடனீரிற் சேர்ந்திருந்த பாரமலக்கான வுயிரை யெல்லாந், தனியோன் மலக்கெல்லாம் வாருமென்றுன்றுனே மலக்கெல்லா மெழுந்தாரப்போ. (256)

(இ-ள்):— சனிக்கிழமையோடு எழுநாளும் சரிநிரம்பினபிறகு மேற்படி மவ்த்தின் சப்தத்தால் நடுநடுங்கி ஸாஷ்டாங்கத்தில்

விழுந்து கிடந்த மலக்குகளை யெல்லாம் றஹ்மான் அழைத்தான். உடனே மலக்குகள் எல்லாரும் கிட்டவந்து கூடிநின்றார்கள். எ-று.

எழுந்தே யிறையவன் மலக்கின்கூட்ட மெண்ணிலடங்காதவேக கூட்டம், விழுந்த போதுதான் றூகுமுன்னே வேறேவேற தானுரு வெடுத்துக், குளிர்ந்தநீர்சூடு நவரெத்தினக் கோலம் பலரூபம் பெரும் படைப்பு, மெழுந்து பெருங்கூட்ட மிறைமுன்னாக நிற்குமிறையவ னேதுசொல்வான். (257)

(இ-ள்):— அவர்களுடைய றூஹுகள் எல்லாம் வேறுவேறு ரூபங்களுடன் வந்து றப்புடைய சமுகத்தில் கூடி நின்றன. எ-று.

சொல்லுமிறையவன் பரிமானந்தான் சொல்லத்தொலையாத விமையோர்களே, யெல்லா மென்னைத்தானே புகழ்ந்திடுங்க ளென்றனேவலைச் செய்திடுங்கள், வல்லாண்மை பொய்யும் பெருமை கோபம் வைய்யா முஹம்மதை வரமேசெய்யு, மெல்லா மலக்குட குலமல்லாதே யிறையோன் மலக்குக ளனைவபேரும் (258)

(இ-ள்):— றப்பு மலக்குகளைப் பார்த்து நீங்கள் எல்லாம் என்னைப் புகழுங்கள், என்னுடைய ஏவலைச் செய்யுங்கள், ஆங்காரம், பொய், பெருமை, கோபம் இந்தப் பாவச் செயல்களைச் செய்யாதிருங்கள், என்றான். எ-று-

நாலு மலக்குட னிருபத்தேழும் காயன் பரத்திலே யிருக்க வென்று, மேலு மிமையவர் குலத்துக்கெல்லா மேலாந் தலைவனு மாஜாசீல்தன்னைக், கோலுங் கரத்தானைப் பார்த்துக்காவல் கொண்டே யிறையவ னிறையேவலை, ஆலமைத்தவன் அஜாசில் தன்னை யரசுங்காவலென் றப்போவைத்தான். (259)

(இ-ள்):— இது முடிந்த உடனே நாலு பெரிய மலக்குகளையும் இருபத்தேழு மலக்குகளையும் பார்த்து நமது அறுஷுடைய அலுவலைச் செய்ய வேணுமென்று அமைத்தான். அஜாஜீலை எல்லா மலக்குகளுக்குந் தலைமைத் தனமாக ஆக்கிவைத்தான். எ-று.

அரசுக் காவல னஜாஸீலென்று மவன்கையடக்கமாமிமையோ ரெல்லாம், வரிசைப் பணிவிடை யிறையேவலை வழமை யாகவே கோடி காலம், அருஷைப் படைத்தவன் லவ்குதனி லாகிமுதற்றனே யெழுதி வைத்தான். பிரிச மாகவென் மலக் கெல்லோர்க்கும் பெரிய மலக்கொன்று காபிருகும். (260)

(இ-ள்.):— இவ்விதம் மலக்குகளுக் கெல்லாம் அஜாஸீல் தலைமையாக இருந்து எத்தனையோ கோடி காலமாக காரியம் நடத்தி வரும் போது லௌஹில் றப்பு, மலக்குகளுக் கெல்லாம் தலைமை யானவன் காபிராய்ப் போவான் என்றெழுதி வைத்தான். எ-று.

காபிர் குலத்துக்குத் தலைவனாகைக் காலம் வெகுகோடி நரகானுவான், பாவம் பல வுயிர் செய்வ தெல்லாம் பாவி யவன்றனே சுமப்பா னென்றுங், காவியாவிலே குடியிருப்பு ஹபீபு முஹம்மதுக் கிவனே பகை, மேவுஞ் சுஜூது தா னெனக்குவந்து மேலாந் தலத்திலே செய்யாதாலே. (261)

(இ-ள்):— இன்னும் காபிரீன்களுக் கெல்லாந் தலைவனாகுவான், நரகத்துக்கு அவனே இறையாகுவான், என் ஹபீபாகிய முஹம்மதுக்கு அவனே பகையாகுவான், உலகத்தார்கள் செய்கின்ற பாவங்கள் எல்லாம் அவனையே சேரும், இத்தனை கேடும் என் ஆதத்துக்குத் தலைசாய்க்காததினாலே என்றெழுதினான். எ-று.

செய்யா னிறைக்கேற்ற சுஜூதெனவே தீமைக் கொடும்பாவி யிவனே யென்று, மெய்யா லெழுதிய லவ்குதனை மெத்தக் கருத்தாகவஜாசீல் பார்த்தே, யெய்யும் பிழையெல்லாம் பொறுப்பவனே யென்னை வருத்தாதே கொடுமை யென்று, வையம் புவிவான மலை புற்பூடு வாரித்தலமெல்லாங் குறையில்லாமல். (262)

(இ-ள்.):— இவ்விதம் எழுதின லௌஹை அஜாஸீல் பார்த்தான், பார்த்து றப்பிடம் வந்து பிழை பொறுக்கிற றகுமானே அது ஆர் அந்த விதி என்னை வந்தணுகும்படி யாக்கிடாதே! என்று ஓடி யோடி வணங்கினான். எ-று.

குறையில்லாமலே யிறை வகுத்த கொற்றபதினெண்ணாயிர மாலமு, நிறையக் கடுகிடை யில்லாமலே நெற்றி தனைவைத்துச் சுஜூது செய்து, மறையி னிறைந்திடு மறப்பொருளே மன்னாவெனச் சொல்லி யழுதழுது, குறையா யெழுபதாயிரம் வருடம் கூவி யழுததல்லோ சுஜூது செய்தான். (263)

(இ-ள்.):— அல்லா படைத்த பதினெண்ணாயிரம் ஆலங்களிலும் ஒரு கடுகு இடமில்லாமல் பார்த்து இருந்து வணங்கி எழுபதினாயிரம் வருஷ காலம் வரைக்கும் அழுது உருகி ஸுஜூது செய்தான். எ-று.

செய்யு மிறையவன் மலக்கெல்லோருஞ் சேறப்பணிவிடை யிருந்த காலம், வையம் பதினெண்ணுயிரமாலமும் வான மறுஷோடு குறுசுக் கெல்லா, மெய்யாத் துலங்கிய முஹம்மதியா மேலோ னறுஷிலே கிந்திலாகத், துய்யோன் கொழுகிய விளக்கை நோக்கிச் சொன்னுன் முஹம்மதே சுடரொளியே. (264)

(இ-ள்.):— இப்படி மலக்குக ளெல்லாம் றப்புடைய பணிவிடையி லிருந்து வந்த காலமானது முஹம்மதியா வானது அறுஷில் நவரத்ன வெளிச்சமுள்ள கிந்தீலா யிருந்த காலமாக இருக்கும். அந்த வெளிச்சமானது ஆலமெல்லாவற்றிற்கும் ஒரு ஏகஜோதி மயமாக ஒளி செய்ததாக இருக்கும். அதைப் பார்த்து.

ஒளிவி லுயர்ந்திடு மரகதமே உண்மை முஹம்மதே முஸ்தபாவே கொழுகிச் சுடர்தீப மிளகிக் கீழே குத்துபுதயமாய்க் கொழுந் தொளிவாய்ப், பழுதி லாகாலாம் வானந்தனிற் பாரவிருதெல்லா மணிந்துக் கொண்டே, எழுபதாயிர மாண்டுள்ளாக விரியுமெழுப தாயிர மாண்டுபின். (265)

(இ-ள்.):— அந்த தீபத்தை நோக்கி றப்பு என்ன சொன்னுன்? என் முஹம்மதே! என் விளக்கே! மரகதமே! என் ஹகீகத்தே! முஸ்தபாவே! இந்த விளக்கானது இன்னும் எழுபதினுயிரம் வருஷத்திற்குள்ளாக கிழ்பால் முகத்தின் கண்ணே குதுபு நட்சத்திர மாக உதிக்கும் என்று அறிவித்தான். எ-று.

ஆண்டு வெழுபதினுயிரந்தா னந்தவானத்தினிறை முன்னுகத், தோன்று மெழுபதாயிரமாண்டு தான் ருெகுத்துக்கிழ்பாலிற்று லங்கநோக்கித், தோன்றுமிப்படிக்குத்துபுதயந் தொகையா பெழுப தாயிரஞ் சில நாள், பூண்டவிருதுதான் பணியேதென்றுர் புகழும் சுருபமா யிருப்பதாமே. (266)

(இ-ள்):— அதன் பிறகு எழுபதினுயிரம் வருஷம் சென்றதின் பிறகு அது வானத்தளவில் வந்து எழுபதினுயிரம் வருஷம் மட்டிலும் ஜோதி செய்யும், அப்பால் எழுபதினுயிரம் வருஷம் சென்று மறுபடியும் கிழ்பாலில் வந்து எழுபதினுயிரம் வருஷம் வரையிலும் நின்று, அப்பால் அது ஒரு சுருபத்தை யெடுத்து வரும் என்ருன். அதே படி வந்தது. எ-று.

இருக்த வொளிவிலே குத்தாபுதய மிலங்கும் பெண்ணல்லோ முஹம்மதிய்யா, விறைக்த சிறசிலே கிரிடக்தானு நிகரில்லாப் பச்சை வைரத்தாலே, யிருக்த சருவக்து மலிபுலியா மிருதோ டணிகாதில் அசனுசைனுஞ், சிறக்தமார்பதிற் பதைக்கமேதான் செப்பத் தொலையாத குறுஆனுமே. (267)

(இ-ள்):— அது எப்படி யிருக்ததேயானல் ஒரு முஹம்மதியா என்ற திருநாமத்துடைய பெண் உடைய சூறத்தில் இருந்தது. அதன் தலையில் கிரீடம் இருந்தது, பக்சையாலும், வைரத்தாலும் தலைப்பாகை யிருந்தது, அந்த சர்பந்தானது அலியாக இருக்கும். இரண்டு காதிலும் குண்டலம் இருந்தது, அவைகள் ஹஸன் ஹுஸைன் இருபேர்களுமாக இருக்கும். அதன் மார்பில் ஒரு ரத்னப் பதக்கம் இருந்தது, அதானது குர்ஆனுக இருக்கும். எ-று

ஆன கணையாளி யுதுமானுபா மபூபக்கருமர் கடையமாகக், காணு மிடைபூட்டு முலகமாதா காலிலிருதண்டை யாதம்ஹவ்வா, மாணிக்கச் சொண்டு பசுங்கிளிதான் மகிழ்ந்து கரத்திலே யேந்தியது, வானேன் குதறத்தா லுதித்தகௌது வள்ளல் முஹியித்தீன் வடிவுதானே. (268)

(இ-ள்):— அதன் விரலில் ஒரு மோதிரம் இருந்தது, அது உதுமானக இருக்கும். அதன் கையில் இரண்டு கடயம் இருந்தது, அவைகள் அபூபக்கரும் உமறுமாக இருக்கும். அதன் இடையில் பட்டி இருந்தது, அது பாத்திமா நாயகமாக இருக்கும். அதன் பாதத்தில் தண்டைகள் இருந்தது, அவைகள் ஆதமும் ஹவ்வாவுமாக இருக்கும். மாணிக்கச் சொண்டுள்ள ஒரு பஞ்சவர்ணக்கிளி கையில் ஏந்தி யிருந்தது, அது நமது நாயகம் ஜகத்சற்குரு முஹியித்தீன் ஆண்டவர்களாக இருக்கும். எ-று

வடிவு பதினொன்று மரூபமொன்றும் வல்லோன் குதறத்தால் குத்தாபுமாகும், அடியு முடிவில்லா னமைத்தவித மறிந்தாற் பதினொரு அகமியமும், படியிற் பதினொரு விலாயத்தொன்று பாரிலுரைத்தது மிதுதான் முன்னே, வடிவு பொருந்திய குத்தாபு தானும் வல்லோன் குதறத்தா லிருக்கும்போது (269)

(இ-ள்):— இந்தப் பதினொரு வடிவுகளும் பதினொரு இல்முகளாக இருக்கும். இவைகளை அறிந்தால் தடையில்லாமல்

பதினொரு விலாயத்துக்களும் கைகூடிவரும். ஆகவே மேற்படி குதுறத்துள்ள குதுபுதயமானது இருந்து பிரகாசித்துக் கொண்டு வரும்போது. எ-று.

இருக்கும்போதுதா னிறையுரைப்பா னென்றன் மலக்கெல்லாம் வாருமென்று, சிறப்பு மலக்கான பெருங்கூட்டமே நீங்கள் கடத்தேறும் வழிதானென்று, சிறப்பா முஹம்மதை மனுரூபமாய்ச் செய்யிதெனுங்கோலஞ் செய்யப்போறேன், பிறக்கு முயிர்க்கெல்லாம் ஆதந்தன்னைப் பிதாவென் றுரைக்கவே தாகமானேன்.

(இ-ள்):— இப்படி யிருக்கும்போது றப்பு மலக்குகளை நோக்கி அழைத்தான். மலக்குகள் வந்தபோது அவர்களை நோக்கி என் மலக்குகளே! நீங்கள் கெதி பெருகிறதற்கு ஒரு வழியிருக்கிறது. என்னுடைய மஉஷூக்காகிய முஹம்மதிய்யாவை இன்஁ஸான்களின் சூறத்தில் இருப்பப்போகிறேன் உற்பத்தியாகிற மனுஷர்களுக்கெல்லாம் ஆதத்தை தகப்பனுக ஆக்கப்போகின்றேன். எ-று.

இறப்பும் பிறப்பில்லா ஞானியாகு மெனக்கிங்கு வந்தவர் ஆதமாகு, சிறப்பமாயென்றன் மலக்கோர்களே நீண்ட வலுமையு முறைப்பு முள்ளோர், பெருத்த மலக்காகு வலுமையாரு பேதை யுலகமண் ணெடுத்துவா, வொருத்த ரொருத்தராய்ச் சொல்லு மென்று னுடையோன் றிருமுன்னே யுரைக்குமெல்லாம். (271)

(இ-ள்):— எனக்கு உகப்புள்ள ஆதத்தை உலகத்தார்களுக்குத் தகப்பனுகப் படைக்கப் போகின்றேன், ஆனதால் அவருடைய பொருட்டால் நீங்களெல்லாம் சுகமடைவீர்கள். நல்ல அவரைப் படைக்கிறதற்காக உலகத்தில் போய் மண்ணெடுத்துக் கொண்டு வரவேண்டும், அதற்கு யாருக்கு சக்தி உண்டும்? ஒருத்த ரொருத்தராய் சொல்லுங்கள்? என்றான். எ-று.

எல்லா முரைத்திடு மொருமொழியா யாறஹீம் றப்பில் ஆலமீனே, வல்லரண்மையுண்டோ வுனையல்லாது வல்லமை யில்லைப் புவியெடுக்கச், சொல்லால் ஹாறூத்து மாறூத்துவுஞ் சுழன்று வலங்கரித் தேதுசொல்வா, ரெல்லர் மலக்குக்கும் வலுமையாங்க ளெங்க ளிருவரா லாகுமென்றார். (272)

(இ-ள்):— அப்போது எல்லா மலக்குகளும் றப்பை நோக்கி என்ன சொன்னார்களானல், யாறப்பே! றஹ்மானே! அந்தப்

புவியில் போய் மண்ணை யெடுத்துவர யாராலும் சக்தி கிடையாது என்றார்கள். அதற்கு ஹாறூத்து மாறூத்து என்கிற இரண்டு மலக்குகளும் றப்பே! எங்களுக்கு இரெம்பவும் பலமிருக்கிறது நாங்கள் போய் எடுத்து வருகிறோம், உத்திரவு தரவேண்டும்; என்றார்கள். எ-று.

ஆகா துங்களாற் பஞ்சையென்றே யாதி பெரியவ னுரைக்கும் போது, வேக பெரியோனே தம்பிரானே யெங்க ளாலேதானெனு மென்று, வாகுபிரத்தினை லிறையுரைத்த வசன மதைத்தட்டி வரும் போதுதான், ருகாயிருவரும் வரும்போதுதான் றங்கள் பெலமெலாந் தடுமாறியே. (273)

• (இ-ள்):— அதற்கு றப்பு அந்த மலக்குகளைப் பார்த்து அந்த வேலை உங்களால் முடியாத காரியம், நீங்கள் மெத்தவும் வலுக் குறைந்தவர்கள், என்று றப்பு சொன்னதற்கு, அந்த மலக்குகள் மறுபடியும் றப்பை நோக்கி அந்த வேலை எங்களால்தான் முடியும் என்று வற்புறுத்திச் சொன்னார்கள். மலக்குகள் இவ்விதம் றப்புடைய சொல்லைத் தட்டி வரும்போதே அவர்களுடைய வல்லமை யாவும் தடமாறிப்போனது. (எ-று)

தங்கள் பலமெலாக்தடுமாறியே தளம்பித் தளம்பியேவரும் போதினின், மங்கை யுருவமாயிளம் பெண்ணாக மதுவின்குட மொன்று சிரசிலேற்றிக், கொங்கைபணியாடை கொவ்வையிதழ் கூறுல்கினபோலே வடிவுகொண்டே, யிங்கிதமாகப் பூமாதேவி யிருவர் வரக்கண்டங் கேதுசொல்வாள். (274)

(இ-ள்):— இவ்விதம் ஹாறூத்து மாறுத்துகள் வரும்போது, ஒரு பெண் மிகுந்த அலங்காரத்துடன் ஒரு கள்ளுக்குடத்தை தலை மேலேற்றி இருமுலைகளுங் குலுங்கும்படியாக குறுக்கு வழியில் வந்து நின்று கொண்டு சொன்னதாவது. எ-று.

ஏது நெடுந்தூர மெங்கேபோறீ ரிளைப்புக் களைப்பாறவென்ன வேண்டு, மீது பானக்கம் தாகந்தீரு மிந்தா குடியு மென்றவள் கொடுக்கப், பாதகமானவெறிச்சலத்தைப் பருகியிருவருமதிமயங்கிக், கோதையொரு பூமா தேவியுடன் கூடிசணவிலே கொழுகினரே. (275)

(இ-ள்):— ஓ! வாலிபர்களே எங்கே போகிறீர்கள் நில்லுங்கள்! இதோ என்னிடம் பானகம் இருக்கிறது, குடியுங்கள்

என்று வார்த்து வார்த்துக் கொடுத்தாள். துனியா வென்கிற பெண் கொடுத்த கள்ளை வாங்கிக் குடித்து வெறிகொண்டு அவளை ஜினைச் செய்யும்படியாகக் கெஞ்சினார்கள். எ-று.

கோமுகிச் சனுவிலே பூமாதேவி குழந்தை யுருவொன்று பெற்றாளப்போ, வழுகத் துடங்கியே மயக்கந்தீர்ந்து வந்தக் குழந்தையைக் கொலையுஞ் செய்து, வழுவில்லாதவன் றிருமுன்னாக வந்தேயிருவரு நின்றாரப்போ, முழுது மிறைசொன்ன னவர்களுக்கு மோசமின்னது செய்தீரென்றான். (276)

(இ-ள்):— அந்த இரண்டு மலக்குகளுடன் ஜினைச் செய்து ஒரு குழந்தையைப் பெற்றாள். பெற்ற அந்தக் குழந்தையையும் கொலையுஞ் செய்து வெறி தீர்ந்தவுடன் இருவரும் றப்புடைய சமுகத்தில் வந்து நின்றார்கள். நின்றவர்களை றப்பு நோக்கி பாதகர்களே! நான் சொல்லவில்லையா? நீங்கள் இன்னவேலையல்லவா செய்துவிட்டு வந்தீர்கள். எ-று.

செய்யும் ஜினைவுக்கும் மதுவெறிக்குஞ் சிசுபாலனை யறுத்த தற்கும், வையை முலகெல்லா மழியுமட்டும் வாதைப்படுவதற் கடுமை யென்று, துய்யன் பரிமானஞ் சொன்னபடி தொலையாவமளியே துடங்கிச் செய்தார், ஐயோ வெறும் சந்த மொழிவதில்லை அதாபைப் பிரித்துத்தான் இருவர் சொல்வார்;. (277)

(இ-ள்):— நீங்கள் செய்த ஜினைவுக்கும், வெறியைச் சாப்பிட்ட தற்கும், பிள்ளையைக் கொலை செய்ததற்கும் கியாமநாள் பரியந்தம் வேதனைப் படுங்கள் என்றான். உடனே ஸபானியாக்கள் அவர்களை அதாபு செய்யத்தொடங்கினார்கள். அவர்கள் இருவரும் ஐயையோ! என்று கை சேதப்பட்டவர்களாக மன நொந்து அழுதார்கள். எ-று.

சொல்லாமற் பெரியவன் சொற்றட்டினாற் சூரையாகுமே யுலகத்தோர்க்கு, மெல்லா மிறையவன் மலக்கின்கூட்ட மிந்த வருத்தங் கண்டே நடுங்கி, அல்லா திரு நாம மறந்திடாம லனைத்து மிறையைப்பார்த் தேதுரைக்கும், வல்லாண் மையில்லைப் புவி யெடுக்க வல்ல பெரியவா தம்பிரானே. (278)

(இ-ள்):— அவர்கள் பட்ட அதாபைப் பற்றி யாரால் சொல்லக் கூடும்! எல்லா மலக்குகளும் இவர்களின் அமளிகளைக் கண்டு

துளும்பி விட்டார்கள். துளும்பி றப்பை நோக்கி றப்பனே! அந்தப் புவியில் மண்ணை எடுத்து வர யாருக்காவது வல்லமை கிடையாது என்று சொல்லி விட்டார்கள். எ-று.

ஆன பெரியவன் மலக்கின் கூட்ட மனைத்துஞ் சுஜூதிலே விழுந்ததப்போ, தீன மணுகாத வாதிறைய னென்றன் மலக்கு நால் பேரும் வாரும், பேண வுலகுமண் ணெடுத்துவரப் பிரிசப்படுத்தியே யனுப்பி வைத்தான், வானோர்ஜிபுரீலு மீக்காயீலு மன்னுனுரைத்திடு முறைபோற் சென்றார். (279)

(இ-ள்):—என்று சொல்லி ஸாஷ்டாங்கஞ் செய்து விலகினார்கள். அப்பால் நாலு பெரிய மலக்குகளையும் வரவழைத்து மண்ணை எடுத்து வரச் சொன்னான். ஜிபுரீலும், மீக்காயீலும் புறப்பட்டார்கள். எ-று.

சென்று திருக்கையா லள்ளுமுன்னே செப்பு வாளப்போ பூமா தேவி, யென்று மழியாத வாதிநாய னிறையோன் மேலாணை யெனைத் தொடாதே சென்றபே ரெல்லாமேலா தென்று சிரசு பணிந்திறை திருமுன் சொன்னார், வண்டன் கொடுங்கால னிசுறா யீலும் வலுமை சிறந்திட வெழுந்தாரப்போ. (280)

(இ-ள்):— இவர்கள் போய் மண்ணை அள்ளினதும் பூமா தேவி ஓ! மலக்குகளே அள்ள வேண்டாம் ஆண்டவன் பேரில் ஆணையாக என்றாள். அவர்கள் இருவரும் திரும்பி றப்புடைய ஹலாத்தில் வந்து விட்டார்கள். அப்பால் இஸ்றாயீல் புறப் பட்டார். எ-று.

எழுந்த வேகத்தைப் பூமி கண்டு வெல்லாந் தடுமாறி நினை வழிந்து, துடங்கியேயுடற் சுருக்கி யொரு நூறு தரமாணையிடும் வேளையி, லெழுந்தேவலறியவாணை யெல்லா மெவ்வளவாகிலுங் கேட்டிடாமல், விழுந்து வொருபிடி பெரும்பிடியாய் விசையா யெடுத்த வரிறைமுன் சென்றார். (281)

(இ-ள்):— இஸ்றாயீல் வருகிற அதறப[illegible] பூமி முழுதும் பயந்து நடுங்கி நூறு தடவை ஆணை [illegible] அவர் அஞ்சாமல் விழுந்து ஒரு பிடி மண்ணை அள்ளிக் கொண்டு [illegible] றப்புடைய சமுகம் வந்து நின்றார். எ-று.




சென்றே யிறையவன் பரிமா[illegible]த்தின் சிரசைத் தாழ்த்[illegible] யொருகை நீட்டிக், கொண்டு வருமண்ணைப் பிடி விடாமற் சூதா[illegible]

றிருமுன்னே நீட்டி நின்றார், அன்று நிலையான விசுறுயீல்தா னறுப தாயிர வருட மட்டும், வண்ட னெனசொல்லிப் பார்த்தானில்லை வாய்சற் றெளியாம லேதுசொல்வார். (282)

(இ-ள்.):— பூமி மகள் இட்ட ஆணைகளைத் தட்டி விட்டு எடுத்த மண்ணை றப்புடைய சமுகத்தில் நீட்டி நின்றார். அவரை அறுபதினாயிரம் வருஷகாலமாக ஆணையைத் தவிர்த்த வண்ட னென்று புறக்கணித்து விட்டான். எ-று.

சொன்னா ரிசுறுயீ லோய்வில்லாமற் சுபுஹானல்லாஹு அல்லாஹுவென், றென்ன நினைவுள்ள னிரக்கமில்லா னென் மேலாணையைத் தவிர்த்ததாலே, னுன்னைத் தவிர்க்க நான் வலுப்ப மில்லை யுன்றனுத்தாரம் பெரிதினாலே, யென்ன விதத்தாலு மெவர் சொன்னாலு மிறைபோனேவலைச் செய்தே னென்றார். (283)

(இ-ள்.):— அதற்கு இஸ்றாயீல் றப்பை நோக்கி, யாறப்பி! யா அல்லாஹு! நான் இந்த வேலையைச் செய்தது உன் பெரிய உத்திரவின் தைரியத்தாலே அன்றி வேறல்ல, இதை நீ மன்னிக்க வேண்டும் என்று சொல்லி அழுதார். எ-று.

நின்றா ரோயாம லிறையோன் சொல்வா னீயென்னாணையைத் தவிர்த்தாயென்று, மென்று மொருபேச்சா லிசுறுயீலு மிறையேயுன தேவல் பெரிதே யென்று, ரென்றார் பதினெண்ணாயிரம் வருடமிது வேயிருவரும் வழக்குமாக வன்றே யெழுபதெண்ணாயிரமா மாண்டு சென்ற பின் னாதிசொல்வான். (284)

(இ-ள்.):— இவ்விதம் இஸ்றாயீலுக்கும், றப்புக்கும் எண்பதி னாயிரம் வருஷ காலம் வரையிலும் தர்க்கம் நடைபெற்றது. அதன் பிறகு றப்பு பொருத்தே னென்றான். எ-று.

ஆதி பெரியவ னிசுறுயீலே யனேகம் பிழை யெல்லாம் பொறுத் தேனிப்போ, வேதுங் குறையாத மலக்கோர்களே யென்ற னாதத்தை யுருவெடுக்கப், போது மெனவல்லா ராரெனவே புகழ்ந்தாரனை வோரு மேலாதென்றார், நீ தான் கொடுவந்துன் காத்தினாலே நிகரில்லாவுரு வெடுப்பா யென்றான். (285)

(இ-ள்.):— என்று சொல்லி மறுபடியும் றப்பு இஸ்றாயீலை நோக்கி இப்போது ஆதத்தைப் படைக்க நம்முடைய மலக்குக

ளெல்லாம் ஏலாதென்று சொல்வதாலே சரி. நீகொண்டு வந்திருக்கின்ற மண்ணை கொண்டே உருச்செய் என்றான். எ-று.

எடுக்க விறையவன் பருமான் கொண்டே யிசுறாயீலிருகையின் மண்ணைக், கொடுக்கஞ் சுரங்காலும் வாலுடலுங் குதிரைபோலவே யுருவெடுத்தா, ரெடுக்க விதைப்போல யுருவஞ்செய்ய வேகன் விண்ணோர்க்குப் பரிமானமா, மெடுக்குமுயிர் மண்ணுலிதனைப் பார்த்தே யெண்ணில்லாமலே யுருவஞ்செய்தார். (286)

(இ-ள்.):—அவ்விதம் இஸ்றாயீல் தான் கொண்டுவந்த மண்ணைக் கொண்டு ஒரு குதிரைபோலே அவயவம் அமைத்தார். றப்புடைய கட்டளைப் பிரகாரம் மற்ற மலக்குகளும் எத்தனையோ குதிரை உருக்கள் செய்தார்கள். எ-று.

செய்யுமுரு யெல்லா மிருக்கும்போது ஜிபுரீலுக்கிரை பரிமானமாங், கைபாலுமதுட சிறகினாலே ஹயாத்துல்கைபாறு நீரைவாரி, யெய்யும் ஆதத்தி னுருத்தவிர் வெல்லாவுரு மேலுமிறையு மென்றான், பையநீர்வாரி யெரிந்தாரப்போ பாரப்பரிக்குழா மெழுந்ததாமே (287)

(இ-ள்.):—இதுகள் இப்படியிருக்க றப்புடைய உத்திரவின்படி ஜிபுரீல் ஹயாத்துல் கைபார் கடலின் தண்ணீரை யள்ளி ஆதத்தின் உருவைத்தவிர மற்ற உருக்களில் சொரிந்தார். உடனே அவைகள் குதிரைக் கூட்டங்களாக எழுந்தன. (எ-று.)

எழுந்த பரியெல்லா நிற்கும்போதி லிணையா யஜாசீலும் வந்தானங்கே. விழுந்துகிடப்பது மேலாங்குல மிதத்தி லடங்காத கூட்டமெல்லா, மழுந்தக் கொடுமைதான் செய்யுமென்றும் ஆதந்தனையாதி வகுத்தாலினி, எழுந்த மண்குலங் கெடுமேநிண்ணமேறி யுளக்கியே யழியுமென்றான். (288)

(இ-ள்.):—அவ்விதம் குதிரைக் கூட்டங்கள் நிற்கின்ற ஸ்தானத்தில் அஜாசீல் வந்தான்: வந்தவன் கீழே சமைந்து கிடக்கின்ற ஆதத்தைப் பார்த்து இந்த உருவம் இந்த குதிரைகளில் சவாரி செய்து உலகத்தை அழிப்பார்கள் என்றான். எ-று.

அழியு மெனச்சொன்னான் பரிக்குலத்தை யஜாசீலுரைப்பது மறிவே யென்று, நெளியும் பரிக்குலம் பாதத்தாலே நீறுதுளியாக நிதமுளக்கப், பொழுது விடிந்திசு றாயீல்வந்து பொடியெல்லாஞ் சேர்த்து மறுத்துஞ்செய்ய, வழிந்த வுருவேறே செய்யவில்லை யடையாளம் வேற தாகுமங்கம். (289)

(இ-ள்.):—இவ்விதம் சொன்ன மாத்திரமே ஆதமும் குதிரைகளும் பொடி பொடியாக நொருங்கி விட்டன, மறுபடியும் இஸ்றாயீல்

ஓடிவந்து எல்லாம் பொறுக்கி யெடுத்து ஆதத்தை சமைத்தார். அப்போது ஆதமுடைய சரீரம் வேறுமாதிரி பிரண்டது எ-று.

ஆகுமுருவமும் ரூபம்வேரு யாதி பரிமானம் விண்ணோர்க் கெல்லாம், வாகா மிசுருயீல் செய்யுமந்த வடிவுபோலல்லோ செய்ய நித, மேகனிசுருயீலாதந்தன்னே யெண்பத்தி நாலிலக்ஷந்தர, மாக வெழுப்பினர் பலரூபமா யந்த விதம் ஆதம்பலதுஞ் செய்தார் (290)

(இ-ள்):—இஸ்ருயீல் ஆதமுடைய சரீரத்தை வக்கணேசெய்து செய்து அழகு பார்த்து எண்பத்து நான்கு லட்சந்தடவை புதிது புதிதாக செய்தார், அதைப் பார்த்து மலக்குகளும் செய் தார்கள். எ-று.

செய்யும் படைப்பெல்லாம் ஆதத்தனேச் செய்த விதம்பார்த்து விண்ணோ ரெல்லாஞ், செய்தா ரெண்பத்து நாலுலட்சஞ் சீயாத்து மாவும் சிறப்பும் வேருய்த், துய்ய பெரியவன் ஜிபுரியீலேச் சொன்னன் றகுமத்துக்கடனீர் தன்னே, வையம் படைப்பெல்லா மெழும்ப வென்று வாரியுருமேலே வீசுமென்றுன். (291)

(இ-ள்.):—மற்ற மலக்குகளும் எண்பத்துநாலு லட்சந்தடவை ஆதத்தைச் செய்தார்கள். வேறே வேறேயாகத்தான் இருந்தது. இப்படி யிருக்கும்போது றப்பு ஜிபுரீலே நோக்கி நீர் றஹ்மத்து என்கிற கடலின் தண்ணீரை அள்ளி உலகத்திலுள்ள படைப்புக ளெல்லாம் எழும்புக என்று வீசும் என்றுன். எ-று.

வீசுமெனச்சொன்னுன் ஜிபுரியீலும் வேதறஹ்மத்துக் கடனீர் தன்னேக், கூசா தவருட சிறகைதோய்த்துக், குல்கு அல்ஹம் துங்கூ வியோதி, வீசப் படைப்பெல்லா மெழும்பக் கண்ட வெகு கோபங்கொண்டே இசுருயீலு, நேசமாக நான் செய்ததுதா னீடுழி காலமுடியவில்லே. (292)

(இ-ள்.):—ஜீபுரீல் இறக்கைகளாலே றஹ்மத்துக் கடலின் நீரை யள்ளி குல்ஹுவ வல்லாஹுவும் அல்ஹம்தும் சொல்லி வீசிய வுடனே சிருஷ்டிகள் எழும்புவதைக்கண்ட இஸ்ருயீல் கோபங் கொண்டு நான் எத்தனே கோடி காலம் செய்த இந்த சரீரம் இன்னும் முடியவில்லேயே என்றுர். எ-று.

முடியாச் சடமான ஆதந்தனே முடிக்க வுதவிதா றெப்பனு வென், றடியில் நின்று துஆவிரந்தே யாதி பாதத்திலே யிரங்கிக் கேட்க வடிவு முஹம்மது ஆஷக்காக வந்தே யிசுருயீல்

முன்னே நிற்கச் சடமுமுருவமா வாதத்தனைச் சமைத்தார் மாசுக்குத் தன்னைப்பார்த்து. (293)

(இ-ள்):—இவ்விதம் முடியாத சரீரத்தை செய்து முடிக்க உதவி செய்வாய் றப்பே என்று இஸ்ருயீல் துஆக்கேட்டார். அப்போது முஹம்மதிய்யாவானது அவர் முன்பாக வந்து நின்றது, அதன் ரூபத்தைப்பார்த்து ஆதத்தை செய்தார். எ-று.

பார்த்துச் சமைத்திடு முருவந்தனைப் பாங்காய்நீட்டியே கிடத்தி வைத்து, கேற்றுச் செய்ததுக் கதிகமென்று நீயு மழிவதோவெனக் கோபித்து, மெத்தச் சினங்கொண்டே யுமிழ்ந்தகாறல் மேனி நடுவிலே விழுந்ததப்போ, வொற்றைச்சிறுவிரற் கொண்டெடுத்தே யுதறியெறிந்தவர் போயினரே. (294)

(இ-ள்.):—இவ்விதம் சமைத்த சரீரத்தை ஒரு மைதானத்தில் கிடத்தி இவ்வளவு காலமாக உன்னைச் செய்தேனே நீயும் அழியவா போகிருய் என்று காறினர். அந்தக் காறல் அதன் மேனியின் நடுவில் விழுந்து விட்டது. அதைத்தன் சிறுவிரலால் எடுத்து வீசி விட்டுப்போய் விட்டார். எ-று.

போனர் பரிக்குலம் பண்டுபோலப் பொல்லா வேகங் கொண் டனைத்தும் வர,வானே ரிசுருயீ லுமிழ்ந்த காறல் வயிற்றி னடுக்குழி மண்ணுனதங், கானகித்மீராய்க் குட்டிநாயொன்றுதங் தனைக்காத்து நிற்கும்போது, வேண பிறகாரம் பரிக்குலத்தை விரட்டியாதத்தைக் காத்து நிற்கும். (295)

(இ-ள்.):—இந்தக்காறல் கித்மீர் என்கிற நாய்க்குட்டியாக நின்றது. பழய குதிரைக் கூட்டங்களும் அங்கு வந்தன. வந்த கூட்டங்களை அந்த நாயானது வெருட்டி ஆதத்தைக் காத்து நின்றது. எ-று.

க்ற்றுச் சடம்ஆத மழியாவகை கண்டே யிசுருயீ லதிஜயமாய், ஏற்ற மாகவே சிரசுசெய்ய வென்ன லாகாதென் றிறைமுன்னகை, நேத்தி மாமண்ணைப் பிடித்துவல்லோ னேரே யவர்வைத்து பணிந்து நின்ருர், பார்த்தா னிறைவன் குதறத்தாலே பகர்பத்தெழுத்தினற் சிரசுண்டாச்சே. (296)

(இ-ள்.):— அந்த முறை இஸ்ருயீல் வந்து ஆதத்தைப் பார்த்தார். அதுயாதொரு குறைவுமில்லாமல் இருந்ததைக் கண்டு இனிமேல் இதற்கு சிரசுசெய்ய வேண்டும் அது என்னல் முடிந்த

காரியமில்லை, என்று மீதமண்ணை எடுத்து றப்புடைய சமுகத்தில் வைத்து நின்றார். றப்பு தன் குதுறதென்கிற கையால் அந்த மண்ணைத் தொட்டு ஒரு பார்வை பார்த்தான். உடனே தலையானது பத்து அட்சரங்களால் சமைந்து விட்டது. எ-று.

சிரத்தையுடலோடே பொருத்திப் பார்த்தார் சேர்ந்து சிரமுட லொன்றாய்க்கூடி, பொருத்தும் ஆதத்தின் வடிவைப்பார்த்துப் பொங்கி யிசுறாயீல் மிகமகிழ்ந்து, கருத்தனபியாத முருவாய்ச்சென்று கற்றபெரியோனைச் சுஜூதுசெய்தார், வரத்தைப் பொருந்திய நபி யாதந்தை வல்லோன் மகிழ்ந்துபார்த் தேதுசொல்வான் .(297)

(இ-ள்.):—அந்த தலையை உடலில் வைத்தார். அது சரியாய்ப் பொருந்திக் கொண்டது. அதைக் கண்டதும் இஸ்றாயீல் சந்தோஷப் பட்டார், அதற்காக றப்பை ஸுஜூதும் செய்தார். அந்த வடிவை றப்பு நோக்கி கீழ்வருமாறு சொல்கிறான். எ-று.

சொன்னா னென்றனின் ரகசியமே சுரூப மெனக்கொரு மாளிகையே, கண்ணா லுனைப்பார்த்து மகிழ்ந்ததுபோற் கண்டி லேனொரு காட்சியுமே, மன்னே வானர்க்கு நான்மலக்கே வந்து பாருமே யாதந்தனை, முன்னோ னுரைபடி மலக்குநாலு முடியா மகிழ்ச்சிகொண் டதனைப்பார்த்தார். (298)

(இ-ள்.):— என் சிர்றே! என் வீடே! உன்னைப்பார்த்து இப்போது நான் ஆநந்தித்ததுபோல நான் ஒரு வஸ்துக்காவது சந்தோஷிக்கவில்லை என்று ஆசீர்வதித்து விட்டு, தன் நான்கு மலக்குகளையும் அழைத்து என் ஆதத்தின் வடிவைப் பாருங்கள் என்றான். அவர்களும் பார்த்து மகிழ்ச்சி யடைந்தார்கள். எ-று.

பார்த்தா ராதத்தை மலக்குநாலும் பார்க்கவுடலதினாலு வீடாங், காற்று நெருப்புநீர் மண்ணுடைய கருவுமுருவிலே கலந்ததப்போ, பார்த்து ஆதத்தின் றூகுதன்னைப் பாதச் சடத்திலே போக வென்று, நேத்தியாகிய றூகுதானு நின்றசிர்றிலே நுளைந்த தப்போ. (299)

(இ-ள்.):—நான்கு மலக்குகளும் ஆதத்தைப்பார்த்த உடனே நான்கு அநாசிறுகளும் ஆதத்துக்குள்ளே போய் நுழைந்தன. உடனே ஆதமுடைய றூஹை உள்ளே செல்ல உத்திரவான உடனே அதன் சிர்றில் போயிருந்து கொண்டது. எ-று.

நுழைந்த வருளிலே தரிகொள்ளாம ளெடியில் வெளியே வந்துரைக்கும் றூகு, மொழிந்து தனியே காணிருக்கரிதே யுற்ற துணையெனக் காருமில்லை, நுழைந்து நுழைந்துதா னேழுதர ளெடியில் வெளியே வந்திதுவே சொல்லு, மெழுந்த சுடரான வாதிளுய னெந்தன் முஹம்மதே குத்பே யென்றான். (300)

(இ-ள்.):— றூஹானது தன் இருள் வெளியில் போய் இருந்து எழு தடவை வெளியே மீண்டது. மீண்டு றப்பை நோக்கி எனக் குத்துணையாருமில்லை எனக்கிருப்பிடங் கொள்ளவில்லை யென்றது. அதற் கதைப்பார்த்து என் முஹம்மதே என் குதுபுதையமே! என்றான். எ-று.

• என்றும் குத்பான வென்றுணையே யிரங்கி யாதத்தைப் பாரு மென்று, னன்றே குத்பான நபியொளிவு மாத முருத்தனே யணுகிப் பார்க்க, வொன்றுங் கலிமாவாய் நபியொளிவு முரைத்த விருபத்துநா லெழுத்தாற், சென்ற ஆதத்தின் சிரசுமுதற் சேரவேழுத்தெல்லாந் தரித்ததப்போ. (301)

(இ-ள்):— என்று விளித்து ஆதத்தைப் பாருமென்றான். முஹம்மதியா வானது பார்த்தது. உடனே ஆதம் சரீரமானது கலிமாவின் இருபத்து நான்கு அட்சரங்களாக நிரம்பி விட்டது. எ-று.

தரித்த நிலையெல்லாந் தவநிலையாந் தயவு முஹம்மது தாபரமாம், வருத்தி யிருபத்து நாலெழுத்தும் வளைவு மூன்றொரு வெழுத்துக் குள்ளே, யொருத்த ரறியாத நடுக்கோட்டுக்கு ளொளிவு நபியல்லோ சுடர் துலங்கி, யிருந்தும் விளக்கொளி யிலங்கும் போதே, யேறியறு வாகும் ஆதத்துள்ளே. (302)

(இ-ள்.):— அந்தக் கலிமாவின் திரைக்குள்ளே ஒரு மூன்று எழுத்தில் றப்பும் ஒளித்திருந்து கொண்டான். அது நடுக்கோட்டை யாகிய இருதய கமலமாக இருக்கும். சமஸ்தத்தையும் கை காட்டி விட்டு கள்ளனும் உள்ளே தான் ஒளித்தான். எ-று.

ஆதமறுவா ஹவ் வழகுகண்டே யந்தச் சடத்திலே யிருந்த தப்போ, வேத பெரியவன் றூகைப் பார்த்து வெளியே வருக வென்றுரைக்கும் போதிங், கேது விதத்தாலும் வெளிவாறேனு னென்றே யுதாத்தி னேறிநிற்கும், போதலாகவே பேச்சு மூச்சும் பொங்குங்குதறத்து மிருபத்தாறே. (303)

(இ-ள்.):— இவ்விதஞ் செய்ததின் பிறகு றூஹை றப்பு வெளியே வருகிறாயா என்றான். அதற்கது எது ஒரு காரணத்தாலும் நான் வரவேண்டியதில்லை என்று சொல்லிற்று. கலிமா இருபத்து நாலுடன் குதறத்து இரண்டுங் கூடி இருபத்தாறு இல்முகளும் ஆதத்தில் சரிவர நிரம்பி விட்டது. எ-று.

இருபத் தாறுமே நிறையும் போதி லெழுந்த பெருந்தும்மலிரு நாசியிற், சுரூபமுயிர்வந்த போதிலாதம் சொன்னார் அல்ஹம்து லில்லாஹியென், றிருவிழி மேலாம் முழித்துப் பார்க்க வேதனறுஷி லேகலிமாக் கண்டே, யொருபத் துத்தாங் கலிமாச் சொல்லி யுரைப் பாரியாறப்பில் ஆலமீனே. (304)

(இ-ள்):— மேற் சொன்ன இருபத்தாறு இல்முகளும், சரிவர நிரம்பின உடனே, ஆதமுடைய இரண்டு நாசியின் வழியாகவும், தும்மல் வந்து தும்பினார். அப்போது தான் ஆதத்துக்கு சரிவர றூஹு வந்தது. வந்தவுடன் அவர் வாயால் அல்ஹம்து லில்லாஹி என்றார். மேலே அறுஷைப் பார்த்தார். அதிலே கலிமா எழுதி யிருந்ததைக் கண்டு பத்து விடுத்தம் கலிமாவைச் சொன்னார், சொல்லி கீழ் வருமாறு சொல்லுகிறார். எ-று.

உரைப்பா ரறுஷினிலுனக்கிணையா யுற்றதுணைவரா ரெழுதும் வரிக், குருபத் தருமுண்டோ வெனக்கு முன்னாற் கூறு முஹம்மது குலம் வேறுண்டா, பருவத் தென்தனி லொளிவினாலே படைத்தேன் முஹம்மதுப் பயஹாம்பரைக், குருவா முஹம்மதி லொளியினாலே கோலம்பலதெல்லா மமைத்தே னென்றான். (305)

(இ-ள்):— றப்புல் ஆலமீனே இந்த அருஷில் எனக்கும் முன் ஒரு வஸ்துவைப் படைத்தா இருக்கிறாய்? முஹம்மது என்கிறவரும் ஒரு வருண்டோ! என்றார். அதற்கு றப்பு, ஆதமே! அந்த முஹம்மதின் ஒளிவாலே தான் உம்மையும் படைத்தேன், இந்த ஆலமும் உற்பத்தியாயிற்று, என்று மறுமொழி கூறினான். எ-று

அமைத்தே னுமதுட பாலராக ஆகிறநபியாய்ப் பிறப்பார், சமைத்தே னுலகெல்லா முஹம்மதுக்காஞ் சகல புகழ்ச்சியு முஹம்மதுக்கா, மெனைத்தான் புகழ்வது மெங்குமாகு மெந்தன் முஹம்மதை யெனைவணங்க, வுமைத்தா னுகிறின் மண்டாடுமோ ருண்மை முஹம்மதுமுமதுபாலர். (306)

(இ-ள்.):—என்று கூறி இன்னும் ஆதமைப்பார்த்து ஆதமே. அந்த முஹம்மது பின்யுகத்தில் ஆகிர் நபியாகவும், உமது பாலராகவும் வந்து பிறப்பார். ஆலமும், ஆலங்களின் புகழ்ச்சியும் முஹம்மதுக்காக வேண்டித்தான் இருக்கும். இன்னும் அவரைக் கொண்டே உம்மையும், மற்ற நபிகளையும் நான்மன்றுடுவேன் என்றான். எ-று.

பாலர் முஹம்மது தீனிலென்னைப் படைத்தே னெனச்சொல்லி யெழுதல்லாகூ, மேலு மதுபாலர் நபிக்குத்தந்தை மேன்மைதருகவு மெழுதல்லாகூ, பாலன் றனையிரு விழியிற்காணப் பலன் பெற்றே னென வெழுதல்லாகூ, ஆல நபிமேலே யாசைகொண்டே ஆத மழுதழுதே து சொல்வார். (307)

(இ-ள்.):—அப்போது ஆதம் நபி றப்பை நோக்கி யாறப்பி அந்தப் பிள்ளையாகிய முஹம்மதின் மார்க்கத்தில் நான் இருக்கிறேன் என்று நீ எழுது. நான் அந்த முஹம்மதுக்குத் தகப்பன் என்பதையும் எழுது, என்று ஆதம் இன்னமும் சொல்கிறார். எ-று.

சொல்லுமிறையவன் பரிமானமாம் சொன்னவகையெல்லாம் வரையுமென்று, வல்லோ னுரைபடிலெவ்குதனில் வரைந்ததே கலமோய்விடாமல், அல்லா தனைப்பார்த்து லெவ்கு சொல்லு மாதி பெரியோனே தம்பிரானே, யெல்லா ரகசியங்குரையில்லாம லினி மேலெ ழுத்தல்லா தின்னமுண்டோ. (308)

(இ-ள்.):—ஆதம் சொன்ன பிரகாரம் எல்லாம் லௌஹில் எழுதும் படியாகக் கலத்திற்கு றப்பு உத்திரவு பண்ணினான். எல்லாம் கலம் எழுதி முடித்து இன்னம் எழுதவேண்டியது உண்டா! என்றது. எ-று

உண்டோ வெனச்சொல்லிக் கேட்கும்போதங் குரைக்க கலமொருலாமலிபை, வண்டத் தனஞ்சொன்ன பலகைதன்னை வல்லோன் ஜிபுரியீ றன்னைக்கூவி, யன்றேதான் ஹயாத் துல்கை பாறிலந்தக்கடனீரி லிறகைத்தோய்த்து, நன்றாயடியுமென் றுரைக்கும் போது நாயன்ஜிபுரியீ லடித்தாரப்போ. (309)

(இ-ள்.):—கலம் இப்படி கேட்டதும் றப்பு ஜிபுரீலைக்கூப்பிட்டு ஹயாத்துல் கைபார் கடலில் உமது சிறகைத் தோய்த்து லௌஹில் அடியும் என்றான். ஜிபுரீல் அவ்விதம் செய்தார் அப்போது. எ-று.

அப்போ நிறைந்திடும் வரியினும மனேக விதமாக வழிந்த தப்போ, வெப்போது முள்ளான் படைப்புக்கெல்லா மிடையின் மவுத்தென்றே யெழுதச்சொன்னு, னட்பாம் பலவகை யிரணம் றாகுநாளும் புதிதென்றே யெழுதினதாற், றப்பித் தப்பியே பிழைப் பாரென்றுந் தலையி லேவரி யெழுத்துமாச்சே. (310)

(இ-ள்.):—ஜிபுரீல் அடித்த சிறகின் அடியால் லௌஹில் அநேக வரிகள் விழுந்தன. அவைகளால் இன்ஸான்களுக்கு இடையில் மவுத்தென்றும், ஒவ்வொருநாளும் இரணமும், மரணமும் புதிதென்றும், ஜனங்கள் தப்பித்தப்பியே பிழைப்பார் களென்றும் பொருள் உண்டாயிற்று. எ-று.

எழுதி முடிந்த பிணிமையோர்க்கெல்லா மெம்பிரான்சொன்ன மாராயமு, முழுதும் படைப்பெல்லாம் ஆதந்தனை முன்னே யிருத்தியே சுஜூது செய்யும், பழுதி லாதவன் சொன்னபடி பார மலக்கெல்லா மொருதிரளாய்த், தொழுதே யெல்லாம் ஆதந்தனைச் சொல்வான ஜாசீலுந் தொழுதேனென்றான். (311)

(இ-ள்.):— இந்த ரகசிய முண்டுபட்டதும் றப்பன் தன் மலக்குகள் எல்லாரையும் கூப்பிட்டு என்னுடைய ஆதத்துக்கு சுஜூது செய்யுங்கள் என்று ஏவினுன். அதேபிரகாரம் ஸாஷ்டாங்கம் செய்தார்கள். அப்போது அஜாஸீலானவன். எ-று.

தொழுது பணிவிடையுனக்கே செய்தேன் தோன்றுமுறுவாத மண்ணல்லவோ, வழுது மண்ணைத்தான். வணங்கேனென்று மஜாசீலுரைத்திட வவனுரைப்பா, னெழுது மெனச்சொன்னுன் கலத்தைப்பார்த்தே யிணங்கான ஜாசீ லிபுலீசென்று, முழுதும் காபிரா மிபுலீசென்று முறையாய்வரியினி லெழுதலாச்சே. (312)

(இ-ள்.):—ஆனால் அஜாசீல் என்கிறவன் மாத்திரம் றப்பை நோக்கி நீ என்ன தான் உத்திரவு செய்தாலும் வணக்கம் என்பது உனக்கேயன்றி கேவலம் மண்ணைக்கொண்டு படைத்த ஆதத்துக்கு நான் ஒரு போதும் தலைசாய்க்க மாட்டேன் என்று மறுத்தான். அதுகேட்டு றப்பு கலத்தை நோக்கி அஜாசீல் இபுலீசு என்று எழுதச் சொன்னுன், அப்படியே எழுதியாயிற்று. எ-று.

எழுதி மீக்காயீ றனக்குச் சொல்வா னிணங்கா னஜாசீ லிபுலீசனே, முழுதுங் கசடனையாணையிட்டு மோச நரகத்தி லெறியச் சொன்ன, னபூதேயிபுலீசு மென்ன சொல்வா னாதிபெரியோனே தம்பிரானே, பழுது குலமானே னென்னிடத்திற் பார வுயிருன்னை யல்லாதுண்டோ. (313)

(இ-ள்.):—எழுதித் திர்ந்ததும் மீக்காயீலைக் கூப்பிட்டு இந்த மூதேவி ஈனத்துச் செய்யப்பட்டுப் போனான், ஆனதால் இவனைத் தூக்கி நரகத்தில் எறியும் என்று உத்திரவு பண்ணினான். அந்த உடனே இபுலீஸானவன் றப்பை நோக்கி மிகுந்த துயரத்துடன் அழுது சொல்கிறான். எ-று.

அல்லா வொருவனே படைத்தவனே யரிய நரகிலு மிருப்பவனே, யெல்லா வுயிருக்கு முயிரானவர் வெனக்கு முயிராய் நீ யிருப்பதாலே, நல்லார்க்கு நல்லா னற்பதவி நண்ணும், பதவிதா னரகிலானே, னெல்லா நினைவையு நிரப்பவல்லோ வெனக்கு முபகாரஞ் செய்வதென்ன. (314)

(இ-ள்.):—றப்பே எனக்குள்ளே இருக்கின்ற ஆத்மாவானது உன்னையன்றி வேறு ஆரிருக்கிறது! என்னை நீ நரகத்தில் போடுவது தகுமா? வேறே மாதிரியான ஒரு உபகாரஞ் செய்யவேணும் என்று கேட்டான். எ-று.

என்ன வேணுமென் றிறையுரைக்க வெங்குந் தேடிநா னுவந்து கேட்பே, னென்ன கேட்கினுங் கொடுத்தெனக்கு மென்னை யரசனு யென கேவலி, மெண்ணு முவந்ததை யெனக்காகவு மெந்தப படைப்பையுந் தடையில்லாமற், சொன்னான் கொடுத்தேனென் றுனது வாக்காற் சொல்லி லடங்காதான் சரியே யென்றான். (315)

(இ-ள்.):—அதென்ன உபகாரம் நீ கேள் என்றான். அதற்கு இபுலீசு இந்த ஆலத்தில் நான் எங்கே போனாலும் போகவும், நான் என்ன செய்தாலும் செய்யவும், என்ன நாடினாலும் சித்தியாகவும் நீ தத்துவங் கொடுக்கவேணும் என்றான். அப்படியே தந்தேனென்றான். எ-று.

என்று மழியாத னெங்குமுள்ளோ னெல்லார்க் குபகார மென்னுயகன், கண்டு கேட்டது தருவே னென்றான் கனவேகங்

கொண்டே யஜாசில் போனான் கண்டே யொருமாளி யுட்புகுந்து கண்ணுக்கடங்காத வைரப்பேழை, யன்றே துறப்பினாற் றிறந்து பார்த்தா னதிலேசரமாக வைரமாலை. (316)

(இ-ள்.):—கொடுத்தேன் என்று றப்பு சொன்னது கேட்டு பெரிய வீரத்துடன் போனான், போனவன் அறுஷில் ஒரு மாளிகையை கண்டு அதனுள் சென்றான், அங்கு ஒரு வைரப் பெட்டி பூட்டி சாவி தொங்கிக் கொண்டிருந்தது. அந்த சாவியால் லெ பெட்டியைத் திறந்து பார்த்தான், அப்போது ஒரு வைரவ மாலையானது இருந்தது. உடனே றப்பைப் பார்த்து இதை எனக்குத் தா என்றான். அப்படியே தந்தேன் என்று றப்பு சொன்னான். எ-று.

என்று சரமொன்று பதக்கமேழு மிடது மார்பிலே தரித்துப் பார்த்தான், றன்று வடமாலை தருகவென்றான் சொன்னா னிறை யவனுக்கே யென்றான், வண்ட னறுஷைவிட் டிறங்கிக்கீழே வைர மாலையைக் குனிந்து பார்த்தா, னன்றே சரமேழு நரகேன் மாயவன் றன் மார்பிலே கிடக்கக்கண்டான். (317)

(இ-ள்.):—உடனே இபுலீசு ஒரு வைரச்சரத்தையும் அதோடு ஏழு பதக்கங்களையும் எடுத்து இடது மார்பில் அணிந்தான். லஅனத்துப் பெற்றவன் உடனே அறுஷைவிட்டும் கீழே யிரங்கி குனிந்து பார்த்தான், அப்போது அந்த ஏழு மாலைகளும் ஏழு நரக மாகத் தன் மார்பில் இருக்கக்கண்டான். எ-று.

கண்டு நடுங்கியே நிற்கும்போது கத்தன் பரிமான மீக்காயீலே, வண்ட னிபுலீசை யிறக்குமென்றான் வள்ளல் மீக்காயீ ருனெழுந்தே, யன்றே அலியார்க்கென்றே வகுத்த அறுஷுத்தலம திலிருக்கும் வாளைக், கொண்டே யிபுலீசின் வலக்கைகாலுங் குறையவேகங் கொண்டவர் வெட்டினார். (318)

(இ-ள்):—இவ்விதம் கண்டு நடுங்கி நிற்கும்போது றப்பு மீக்கா யீலைக் கூப்பிட்டு இபுலீசை கீழே இறக்கு மென்றான். அவர் அருஷிற்போய் அங்கு அலியார்க்கென்று செய்து வைத்திருந்த வாளைக் கையிலெடுத்து இபுலீசுடைய வலதுகையையும், வலது காலையும் வேகங் கொண்டு வெட்டினார். எ-று.

வெட்ட வொரு காலுங்கையுமறுந்து விழுந்து கிடைக்கையி லேதுசொல்வா, னெட்டு விதத்திலல் வெட்டினானு மெனக்கேவல்

செய்வோரெங்கே யென்றான், கெட்ட செயலாகு முனதுமாய்கை
கெட்டோருனதுட யேவலாளர், மட்டு நரகேழு முனக்கேயென்றான்
மகிழ்ச்சியாயவன் சிரித்துக்கொண்டான். (319)

(இ-ள்):— மீக்காயீல் வெட்டின வெட்டால் ஒரு கையும், ஒரு காலும் அறுந்து கீழே கிடக்கையில் எங்கே எனது கூட்டங்கள்? என்று கேட்டான். அதற்கு மீக்காயீல் உனது கூட்டங்கள் காபிரீன்கள் என்றார். அதைக் கேட்டதும் கொஞ்சம் குலுங்கச் சிரித்துக் கொண்டான். எ-று.

சிரித்த இபுலீசை மீக்காயீலுஞ் சினமா யொருகையாலெழுப்பித்
தூக்கி, நிறுத்தி யிடதுகா லாலுதைத்து நேரே நரகத்திற்றள்ளிவிட,
விருத்த மாய்சுற்றிக் காவியாவில் விழுந்தா னெயிலெனுமோடைதனி,
நிறுத்திக் கரடிபோல் வளர்ந்தரோமம் நீண்ட கொம்புடனுருக்குச்
சட்டை. (320)

(இ-ள்):— சிரித்த இபுலீசை மீக்காயீல் தூக்கி எடுத்து, தன் இடது காலால் உதைத்து நரகத்தில் தள்ளிவிட்டார். ஹாவியா என்கிற ஓடையில் போய் விழுந்தான். விழுந்ததும் அவன் சரீரத்தில் கரடி போல் உரோமமும் உருக்குச் சட்டையும் உண்டாய் விட்டன. எ-று.

உருக்குச் சீராவை யுடல்புனைந்தா னொருகை யொருகாலு
முடன்வளர்ந்தா, னெருக்கும் பாதாள நரகமட்டு நேரேயோடியே
வெளியில்வந்தே, யுருக்கத் தலையேழு முடலொன்றுள்ள வுவமை
யடங்காதவுருவுமாகிச், சிறக்கும் பெண்ணுரு மனுவடிவாய்ச்
செரப்பணியெல்லா மணிந்து கொண்டான். (321)

(இ-ள்):— உண்டானதும் பழயபடி அறுபட்டகால் கைகளும் வளர்ந்து விட்டன. அப்போது கொடிய விகார ரூபத்துடன் அங்கிருந்து எழுந்து பாதாள மட்டிலும் வெருண்டோடி, ஒரு அழகிய ஸ்திரீயின் ரூபத்திலாகி நகை யெல்லாம் அணிந்தான். எ-று

கொண்டா னுமைபோல வடிவுரூபங் கோதிக் குழன்முடித்
தணிந்துகொண்டு, மண்டலமெங்குந் தனது மாயை மருட்ட
வழிபார்த்தே யிருக்கும்போதி, லொன்றுங் கிடையாமற் பண்டுபோல
வொழிந்து நரகத்தி லிருந்தானப்போ, தன்று நெடுங்காலஞ்
சென்றதற்பி னதிபெரியவன் பரிமானமாம். (322)

(இ-ள்):— உமாதேவிபோல கறுத்த ரூறத்திலாகி, தன் மாயா விநோதத்தால் உலகங்களை யெல்லாம் மருட்டிவிட வழி பார்த்தான். ஒன்றும் சாயாமல் பழயபடியே நரகத்திலேயே கிடந்தான். அதிலிருந்து நெடுங்காலஞ் சென்ற பின்னால். எ-று.

ஆதியீசனு மும்மூர்த்தியு மனேகந்தேவதைக் கடல்லெழுப்பி, மாதை யுமையாளு மீசநாதன் மங்கை யிடாவிலா விற்பிறந்தே, யீதுசலமதி லமைத்திருந்த தெல்லாங் கடலினின் றெழுந்ததப்போ, சோதி பரிமானந் தேவர்க்கெல்லாஞ் சொன்னானதத்தைத் தொழுங்க ளென்றே. (323)

(இ-ள்):— ஆதி யீஸ்பரனும், மும்மூர்த்திகளும், முந்நூற்று முக்கோடி தேவர்களும், கடலில் உற்பத்தியானார்கள். அப்போது ஈஸ்பரன் தன் தேவர்களைக் கூப்பிட்டு ஆதம்நபிக்கு ஸாஷ்டாங்கஞ் செய்யச் சொன்னான். எ-று.

தொழுங்களெனச் சொன்னான் றெழுகுமுன்னே தோசி யிபுலீசுமோடிவந்து, முழுதுங் குழுவதிற்குறைவிடாமன் மோச மெனுமாயைப் பொடியைத்தூவி, யழு தழுதுகா னெல்லோர்முன்னே ஜையயோ விதிப்பய னிஃதோவென்றான், றெழுதங் கிபுலீசைச் சகல தேவுஞ் சொல்லு மெமதையா வெனச்சொன்னதே. (324)

(இ-ள்):— அவர்கள் தொழுகிற நேரத்தில் இபுலீஸானவன் வந்து, தன் மாயப்பொடியை அவர்கள் மேல் தூவி, அடா! என்ன வேலை செய்கிறீர்கள். அது மண்ணல்லோ! அதற்கேன் வணக்கம்! அப்படியாவது எனக்காவது செய்யுங்கள்! என்றான். அது கேட்டு அந்த தேவர்களெல்லோரும் இபுலீசை ஐயா! எங்கள் சாமியாரே, கிருபை செய்யும், தம்பிரானே! என்று அர்ச்சனை செய்தார்கள். எ-று

சொல்லு வானப் போதிபுலீசுதான் சூழ்ந்த தேவரே பெரியோர்களே, எல்லோர்க்கும்முன்னே யென்னைவகுத்தா னெனக்குத் தெரியுங்கா னெவ்விதமு, நல்ல விபரமாய்ப் பிரித்துச் சொன்னே நான்சொன்ன சொல்லைக் கேளாமலே, அல்லா வுரைப்படி செய்வேனென்ற ஆறாத்துமாறாத் திருபேருந்தன். (325)

(இ-ள்):— அதன் பிறகு அவர்களை இபுலீசு நோக்கி, ஓ! தேவர்களே! எல்லாப் படைப்புக்கு முந்தி என்னைத்தான் படைக்கப்

பட்டது. எனக்குத் தெரியாத வழமை புதுமை யென்ன இருக்கிறது. ஹாறூத்து மாறூத்துக்கள் இந்த ஆதத்தால்தான் கெட்டார்கள். அது உங்களுக்குத் தெரியாதா? என்ருன். எ-று.

இருபேரு மிந்த மண்ணுதத்தை யிணங்கிச் சுஜூதிட்டாரி யானிருக்க, வுருவான மண்ணைத் தொழுதானென்றே யோயாவமளி யென்றுரைத்தான் பின்னு, முருவம் பணியாம லுனைப்பணி ஒருயர்ந்த அஜாசிலின் குலமுகாமே, மறுபேச் சுரையில்லாதேலா தென்ருல் மகிழ்ந்தே யெல்லோரும் வாழலாமே. (326)

(இ-ள்):— ஆனதாலே தேவர்களே நீங்கள் யாவரும் இப்போது நான் சொல்கிற பிரகாரம் கேட்க வேண்டும், றப்பை நோக்கி இந்த மண்ணுக்கு வணக்கஞ்செய்ய, எங்களால் ஏலவேயேலாது என்று ஒரே பிடிவாதமாகச் சொல்லி விடுங்கள். அப்பால் அவன் செய்கிறதைப் பார்த்து நாமெல்லோரும் ஒன்று கூடியிருந்து வாழலாம் என்று சொன்ஞன். எ-று.

வாழ்வின் பெருமையை யென்ன சொல்வேன் வருத்தம் வரும் பாட்டை யென்னசொல்வே, னேழைத் தனம்வேண்டா மென்பேர் வேண்டா மினங்கிச் சுஜூதிட வேண்டாமென்று, காளை யிபுலீசு போனபின்பு கத்தன் ஜிபுரியீ லாதன்தனைச், சூழ்ந்த தேவர்கள் குழுமுன்வைத்துச் சொன்னுர் சுஜூதிட்டுத் தொழுங்களென்றே.

(இ-ள்):— இன்னமும் இபுலீசானவன் தேவர் கூட்டங்களைப் பார்த்து அதனுல் கிடைக்கிற வருத்தங்களைக் கவனிப்பீர்களானுல் பின்னுக்கு அநேக செல்வாக்குகள், இருக்கிறது. உஷார் உஷார் என்னையாவது என்பேரையாவது சொல்ல வேண்டாம். ஜாக்கிரதை! என்று சொல்லி விட்டுப் போய் விட்டான். மூதேவியான இபுலீசு போன பிறகு, ஜிபுரீல் ஆதமைத் தூக்கி சுமந்து கொண்டு வந்து அந்த தேவர் கூட்டத்தில் வைத்து, இதுக்கு ஸுஜூது செய்யுங்கள் என்ருர். எ-று.

தொழுகப் பரிமான்ம் ஜிபுரியீலுஞ் சொன்ன மாராயந் தனக் கொவ்வாமற், குழுவுக் கரசான வீயனுதன் கோவேயுமையாளு மும்மூர்த்தியு, மெழுமைக் குலமல்லா விதைவணங்க வெங்கள் குலம்சாகாக் குலமேயாகு, முழுதும் பணிவது மில்லையென்ருர் முன்னேன் ஜிபுரியீலாதத்தனை. (328)

(இ-ள்):— ஜிபுரீல் சொன்ன உடனே, அந்த தேவர்களெல்லாம் மனமுரண்டவர்களாக ஜிபுரீலை நோக்கி, நாங்களோ! சாகாத கூட்டங்களாக இருக்கிறோம். இந்த ஆதமோசாகிறவராக இருக்கிறார். அப்படி இருக்க, நாங்கள் இவருக்கு ஸாஷ்டாங்கஞ் செய்ய மாட்டோம், என்று சொல்லி விட்டார்கள். எ-று.

ஆதந் தனை யவர் சிரசிலேந்தி யாதிபெரியவ னறுஷில் வைத்து வேத பெரியோனே யெம்பிரானே வேணவிதமெல்லாஞ் சொல்லிப் பார்த்தே, ஆதந் தனைநோக்கிச் சுஜூது செய்ய வாகாதெனச் சொன்னார் தேவரெல்லாம், வாதைக் குலமெல்லா மிபுலீசுக்கு வார்த்தைப் பணிவிடை செய்யவென்றான். (329)

(இ-ள்):— தேவர்கள் மறுத்த உடனே ஜிபுரீல், ஆதத்தைத் தூக்கி தலையில் வைத்துக் கொண்டு, அறுஷில் போய் இறக்கி, றப்பனே றஹ்மானே! நான் அந்த தேவர்களுக்கு வேண்டியமட்டும் சொன்னேன், அந்த முரண்டர்கள் ஒருவிதத்திலும் ஸாஷ்டாங்கம் செய்யமாட்டோம், என்று சொல்லி விட்டார்கள், என்றார். அதற்கு றப்பு அந்தக்கூட்டங்கள் லஅனத்துப் பெற்றவனைந் துயர்ந்து விட்டார்கள், என்று சொன்னான். எ-று.

செய்யாக் குலமெல்லாம் ஷைத்தானென்றே சேர்க்க நரகத்திற் பரிமானமாக், துய்யபரிமானஞ் சொன்னபடி தொலையா நரகேழு மிபுலீசுக்குச், செய்யும் பணிவிடை ஷைத்தான்குலச் சேனைப் பரியைந்து பேருமென்றாய், வைய நரகாண்டங் கிருக்கும்போது வல்லபெரியவன் பரிமானமாம். (330)

(இ-ள்):— அவ்விதம் வணங்காத குலத்தையெல்லாம் நரகவாதிகளான ஷெய்தான் கூட்டங்கள் என்றான். அதே பிரகாரம் அவர்கள் இபுலீசுக்கு பணிவிடை செய்ய திட்டமானார்கள். எ-று.

வல்ல பெரியவன் பரிமானந்தான் வகையாம் வைரம் வெண்டரளத் தாலே, சொல்லத் தொலையாத மரகதத்தாற் றுலங்கு முத்தாலும் பவளத்தாலும், அல்லா றஹ்மத்தின் ஹயாத்துல்கைபா றந்தக் கடலிலே தானிருந்து, மெல்லாங்குறை யில்லா தோன்று போலே யெழுபதிலக்கத்தை யெழுப்பினனே. (331)

(இ-ள்):— அதன் பிறகு றப்பு ஆதிதுனியா என்னும் ஒரு யுஹத்தை உற்பத்தி பண்ணும் பொருட்டு முத்தாலும்,

மரகதத்தாலும் பவளத்தாலும், மாணிக்கத்தாலும் எழுபது லட்சம் மாளிகைகளை ஹயாத்துல் கைபார் கடலில் நின்றும் எழுப்பினன். எ-று.

எழுப்பு மாளிகை யொருமுத்தாலே யெந்த யுலகெங்கும் கோடிமாளி, முழுப்பச்சை முத்தால் மனுடரெல்லா முடியாதவர் காலம் வயதாயிர, மெழுப்பியுலகமு மனுவு மாளி யென்தமாளிக்கு மாண் பெண்ரண்டா, யெழுப்பியுலகத்தைவான் புவிக்கு மிடையினி றுத்தியே யிருக்கும்போது. (332)

(இ-ள்.):— அப்படி எழுப்பிய மாளிகைகளில் ஆண் பெண் இரண்டு ஜோடிகளாக வைத்து அவர்களுக்கு வயது ஆயிரம் கொடுத்து, பூமிக்கும், வானத்துக்கும் இடையில் நிறுத்தினன். எ-று.

இருக்கு முலகெல்லாமழிக்கவென்றே யெழுந்தானிபுலீசுவே கருப, நிரக்குமாணிக்க முலகமெல்லா நேரேயோளிவீச நேர்வா சமுஞ், சிறக்கு மழகோடு நரைதாடியுஞ்சிங்கார மென்னச் சொல்லப்போமோ, வெவர்க்கும் வயதார யறிவாளரா யெழுபது நகரெங்குஞ் சென்றான்.

(இ-ள்.): அந்த உலகத்தை அழித்துவிட வேண்டி இபுலீசானவன் ஆங்காரத்தோடும் பிரப்பட்டு நரைத்ததாடியுடனும், பெரிய தலைப்பாகையுடனும், கைத்தடியுடனும், பெரிய மஷாயிகு என்று பேர் வைத்துக்கொண்டு ஊர் ஊராய்ப் போனன். எ-று.

சென்றானகருள்ள வாணூம் பெண்ணுஞ் சேர வந்துதான் பதம் பணிந்தே, யென்றுங் காண்கிலோம் பெரியவரே யிவ்வூ ரிறங்கிய விதமே தென்றார், பண்டு நெடுங்காலம் பெரியவாள் நாம் படைத்தோன் அறுஷிலே தவம் புரிவோ, மண்டலமெல்லாம் ஜிபுரீலென்று மகிழ்ந்திங்குரைப்பது மெனைத்தா னென்றான். (334)

(இ-ள்):—அவனைக்கண்ட அந்த வூரையுடைய ஆண்களும், பெண்களும் வந்து வந்து கூடி, அவன் பாதம் பணிந்து இத்தனை தூரம் மஹாத்மாவாகிய நீர் யார்! எங்கிருந்து வருகிறீர்கள்? என்று கேட்டதற்கு, இந்த உலகமெல்லாம் புகழ்பெற்ற ஜிபுரீல் என்பது நான்தான், இப்போது நான் அறுஷிலிருந்து வருகிறேன். என்றான். எ-று.

தான்முன் றஹ்மத்துக்குவந்ததென்றுன் முழ்வுவரச் சற்றும் பொறுக்கமாட்டே, ஞன்று னிறங்கினே னிறையல்லாம னடக்கும் விதமுற்ற செய்தி சொல்வேன், வானேன் பரிமானமண்ணுதத்தை மகிழ்ந்தே யென்னுட சிரசிலேந்தி, நானே நகரெங்கும் வருவேனுளை நாயனுரைத்தா னென்றதுவுஞ் சொல்வேன். (335)

(இ-ள்):— இன்னும் சொன்னதாவது:—றப்புடைய றஹ்மத்துக்குச் சொந்தக்காரன் நான் தான், இன்னும் அல்லாஹ்வுக்குத் தெரியாத செய்திகளும் நான் சொல்வேன், ஒரு வேளை றப்புடைய உத்திரவுபடி மண் ஆதத்தைச் சுமந்து கொண்டு உங்களிடம் வந்தாலும் வருவேன் என்முன். எ-று.

சொல்வேன் ஜிபுரியீ ஞனேயென்று சுரூபம் வேளுக விருப்பேனப்போ, வல்லோ ஞதத்தைத் தொழுகச் சொன்னுன் வாருமென வெல்லோர் தமையபைப்பேன், அல்லா வுரைத்தாவு மார் சொன்னுலும் ஆதமண்ணல்லோ வெனச்சொல்லுங்கள், சொல்லாதே நீங்கள் தொழுதீராகிற் சொன்னே னரகல்லாற் சுவர்க்கமில்லை. (336)

(இ-ள்):— அப்படி வருவது நான்தான் ஜிபுரீல் என்று சொல்வேன், ஒருவேளை உருவம்மாறி யிருப்பேன் என் தலையிலிருக்கிற ஆதத்துக்கு ஸுஜூது செய்யச் சொல்வேன், நீங்கள் ஒருபோதும் அந்த மண்ணுக்குத் தலைசாய்க்க வேண்டாம். அப்படி அத்துமீறி செய்வீர்களானல், உங்களுக்கு நரகமே அன்றி சுவர்க்கமே கிடையாது என்று சொன்னுன். எ-று.

இல்லை யொருக்காலும் பதவி சொர்க்கமென்பே ரெவர்க் கொன்றுஞ் சொல்லவேண்டா, மெல்லோரு மொன்று யதிர்ந்து பேசு மிழந்த பேச்சொன்றும் பேசவேண்டாம், பொல்லா நெறியெல்லாம் வருத்தி வைத்துப் போனுனிபுலீசு நரகநாட்டில், வல்லோ னுரைப் படியாதந்தமை வாரிச் ஜிபுரியீ லெடுத்து வந்தார். (337)

(இ-ள்):—இவ்விதம் அந்த மாணிக்க உலகத்தாரை கெடுத்து அந்த நாச வழியைக்காட்டிவிட்டு இபுலீசானவன் நரகம் போய்ச் சேர்ந்தான். அதன்பிறகு றப்புடைய உத்தாரப் பிரகாரம் ஜிபுரீலும் ஆதத்தைத் தூக்கிக்கொண்டு வந்து சேர்ந்தார். எ-று.

வந்து நகரோரை வரவழைத்து வரிசை யாகவேயாதந்தமை, முந்தக் கொலுவிலே நிறுத்திவைத்து முன்னேன் தனைத்தொழும்

பாங்குபோலே, பந்தி யாகவே நகரிலுள்ள படைப்பிலாணும் பெண்ணுலகமுமாய்ப், பிந்தா தே தொழு மெனவுரைக்கப் பேசுவாரப்போ தெல்லாருமே. (338)

(இ-ள்.):—ஜிபுரீல் வந்து அந்த உலகத்தார்களை அழைத்து அவர்களுக்கு ஆதத்தைக்காட்டி நீங்கள் ஆண்களும், பெண்களும் றப்புடைய உத்திரவுக்காக இந்த ஆதத்துக்கு ஸுஜூது செய்யுங்கள், என்றூர். எ-று.

எல்லாருஞ் சொல்வா ரேதுகாணு மெந்த காளுமில்லாப் புதுமை, நில்லாதே சொல்லு நகரைவிட்டு நீநியோ மண்ணை நிறுத்திமுன்னே, வல்லோ னுரைத்தானு மார்சொன்னாலும் வருந் தோமினிவர வேண்டாங்கண்டீர், நில்லா தேசெல்லு கிமிசநோ நீரு மினிமேலும் வரவும்வேண்டாம். (339)

(இ-ள்.):—ஜிபுரீல் சொன்ன வார்த்தையை அவ்வுலகத்தார்கள் கேட்டதும் ஒவ்வொருத்தரும் அடங்காத சினங்கொண்டு ஜிபுரீலைப் பார்த்து "ஏதுகாணும் இது காலங்களாக இல்லாத புதுமை சும்மா கிடக்கிற ஒரு மண்ணுங்கட்டியைத் தூக்கி வந்து நிறுத்திக்கொண்டு அதற்கு வணக்கமேதுக்கு காணும்! போதும்போதும் உமது சகவாசம்! நீர் வந்து வெகு நேரமாகிறது. நடந்து காட்டும் இனிமேலும் நீர் இங்கே வரவும், வேண்டாம்" என்று சொல்லி விட்டார்கள். எ-று.

வேண்டா மெனச்சொன்னுர் ஜிபுரியீனு மிக்கோ னுதத்தைச் சிரசிலேந்தி, யாண்ட பெரியவனறுஷில் வைத்தேயாதி பேரியோனே தம்பிரானே, யேன்ற விதமெல்லாஞ் சொல்லிப்பார்த்தேனீசப் பாவி யென்றிமையோர். சொல்ல, மாண்ட விசுறுயீ லானவர்க்கு வல்ல பெரியவன் பரிமானமாம். (340)

(இ-ள்.):—அப்பால் ஜிபுரீல் ஆதத்தைத் தூக்கித் தலையில் வைத்து அறுஷில் வந்து, றப்பே, அந்தப்பாதக ஜனங்களுக்கு நான் எவ்வளவோ சொல்லியும் அவர்கள் ஒருவிதத்திலும் இணங்கினர் களில்லை. நான் திரும்பிவிட்டேன் என்றூர். எ-று.

பெரியோன் பரிமான மிசுறுயீலே பேழை யதனின்முன் வைத்தவேங்கை, யுருவந் தெரியவே காணும்விழி யுமது விழியாலே நரகமெல்லா, மெரியுந் தணலாகக் கோபங் கொண்டே யெழுப

துலகையும் பாருமென்று, ஹுருகி யிசுறாயீலுணர் வழிக்தேயோ யாதே சொல்லி யழுத்துணிந்தார். (341)

(இ-ள்.):— ஜிபுரீல் சொன்னவுடன் அல்லாவுக்கு கோபமீறி இஸ்றாயீலைக் கூப்பிட்டு உமது பேழையில் இருக்கிற அழிவு என்கிற வேங்கைப்புலியைக் கொண்டு அந்த உலகத்தை ஒரு பார்வைபாரும், என்றான். அதைக்கேட்டு இஸ்றாயீல் மனமிரங்கி அழுதார். எ-று.

அழுதே சொல்லுவார் யாறஹீமே யாதி பெரியோனே யெம் பிரானே, பழுது வருமென்று பரிமானபடி பாரப் புவிமண்ணை யெடுக்கும்போதே, யழுது புவியிடு மாணைத்தட்டி யள்ளி யிடும்படி மண்ணையேந்தி, யெழுபதி னெண்ணா யிரம்வருட மேங்கி யழுதது மெனக்குப்போதும். (342)

(இ-ள்.):— இஸ்றாயீல் அழுது றப்பை நோக்கி யாறப்பி முன்னமே அந்த ஆதத்தைப் படைக்க மண்ணெடுக்கும் போது அந்தப் பூமியானது தட்டிய ஆணையும் விலக்கிவிட்டு நான் கொண்டு வந்ததற்கு இந்தப் பாதகம் எனக்குப் போதும். எ-று.

எனக்குப் பரிமான மிதுதவிர வெந்தப் பணிவிடைக் கிணையில்லானே, யுனக்கிங்கு வந்தவர் பேரைச்சொல்லி யுன்றன் பேரையுஞ் சொல்லியல்லோ, வெனக்குப் பெரியவன் பேரைச்சொல்லி யெந்த வாணையும் விடுவாரப்போ, துனக்குச் சரிகாணு மென்மேற் குற்ற முயர்ந்த பெரும்பாவஞ் சுமக்கமாட்டேன். (343)

(இ-ள்):— உலகத்தார்கள் எந்த ஒரு கருமத்துக்கு உன்னையும் உனக்கு உகந்தவர்களையும் கொண்டல்லவா சத்தியஞ் செய்வார்கள். அதற்கெல்லாம் நான் சம்மதிக்க வேண்டியது வரும், அந்த பாவங்கள் என்னைச்சேருமே! எ-று.

சுமக்கும் பெரும்பாவ நல்லசெயற் சேராம லுன்னை விலக்கி வைப்பே, னெனக்கு வாராமல் விலகும்போது வெல்லாஞ் சுமப்பது நீயோவென்றார், நமக்குச் சேர்வது நன்மைகாணு நாயன்கொடுத்நான் என்றெவருஞ் சொல்லச், சமைக்கும் பரிபார முலகவாழ்க்கை சகல வாழ்வுடன் மதலையேது (344)

(இ-ள்.):— அப்படி எல்லாவற்றிற்கும் சம்மதித்து ஒரு பாவத்தைச் செய்ய வேண்டுமானல் அவைகளை நீ எந்துக்

கொள்வாயா? என்ருர். அதற்கு றப்பு தன்மைகள் தான் தான் ஏந்து. கொள்வேன். எ-று

ஏது பலனுந்தான் கிடைத்தபோதி லிறையோன் கொடுத்தான் என் றி2ன யே சொல்ல, வேதனை வந்தாலதுவே சொல்ல வெண்ணேவுதானும் வெகுவாய்ச் செய்வேன், வேதனையெல்லா மஜாசீல் செய்ய விளேந்தபாவமு மதனைச்சேரு, மீது செய்வேனு னென்றபோதி லிசுருயீல் சொல்வா ரியாறப்பனு. (345)

(இ-ள்):— பாவங்கள் எல்லாம் இபுலீசைதான் சேரும். அப்படியே உலகங்களில் பேச்சு நடைபெறச் செய்கிறேன். என்றவுடன் இஸ்ருயீல் சொல்கிருர். எ-று.

றெப்பனு வெங்க ளுயகா றெப்பில் ஆலமீனுனவனே, யொப்பான பாவச் செயலுக்கெல்லா முண்டு படச்செய்தா யிபுலீ சென்றே, யப்போ திறையவ னிபுலீசையு மைந்து தலைவரு மனேகந்தேவு, நட்பா யனைத்தையு முன்னிருத்தி நாயன் பரிமானமாய் உரைத்தான். (346)

(இ-ள்):— அப்போது இஸ்ருயீல் றப்பை நோக்கி, றப்பனே! இபுலீசை பாதகச் செயலுக்காக படைத்தாயா என்ருர். ஆம்! என்று உடனே இபுலீசையும், அவன் கூட்டங்களையும் அருகில் நிறுத்தி பின்வரும் செய்திகளை யெல்லாம் சொல்கிருன். எ-று.

அப்போ தஜாசீலே முன்னிறுத்தி யாதிபெரியவ னேதுசொல்வான், எப்போது முள்ள நாயனல்லோ வெந்தன் முஹம்மதை யுலகுதனி, லொப்பாமனுருபஞ் செய்யவேணு முலகிலுயிரெல்லாம் புகழவேணுந், தப்பல் லாமனு வெல்லோருக்குந் தகப்பனுனவ ராதந்தானே. (347)

(இ-ள்):— இபுலீசுக்கு றப்பு சொன்னதாவது, நான் தான் உலகங்களுக்கு கர்த்தனுனவன். முஹம்மதாகிறவர், என் ஹபீபாகவும் இருக்கும். ஆதமானவர் சகல உயிர்களுக்கும் மூல பிதாவாக இருக்கும், என்றும். (இன்னும்)

ஆல முலகெல்லா மரசாளவு மாணும் பெண்ணுமா யுலக மெல்லாம், வேத முலகெல்லாம் புகழவேணும் விளங்குஞ்செய்

நன்மை தீமை செய்தே, மேது முயிரெல்லா மிறக்கவேணுமென் முன்வருகவே நன்மை தீமை, நீதஞ் செலுத்தியே நன்மையெல்லா நீண்ட நபி சொர்க்க மாளவேணும். (348)

(இ-ள்):— அவருடைய மக்கள் உலகத்தில் இராஜாக்களாகவும், ஆண் பெண்களாகவும், சந்ததி பெறுகிறவர்களாகவும், வேதங்களைக் கொழுகினவர்களாகவும், எனக்கு வணக்கஞ் செய்கிறவர்களாகவும், கியாம நாளையில் எல்லா உயிர்களும் ஹலாக்காக வேண்டும், நன்மை தீமைகளின் பட்டோலை என் சமுகம் வரவேண்டும், என் முஹம்மது கடைசியில் சொர்க்கத்தைக் கட்டியாள வேண்டும். (இன்னும்)

ஆளு நரகந்தானுனதுதேச மனியாயமெல்லாஞ் சேரவேணும், வாழு முலகந்தான் கடன்மலையாய் மகிழ்ந்தே யிருக்கிற பலவிதமுஞ், சூழுங் கழுவேறு மலைவேறுமாய்ச் சொல்லு முலகெல்லாம் புவி வேறுமாய், நீள மகமேரி னீயிருந்து நிதமுந் தேவர்களுனைப் பணிய, (349)

(இ-ள்):— ஏ! இபுலீசே அந்த மனுக்கள் செய்கிற பாவத்தால் வருகிற அநியாயங்களெல்லாம் உன்னைச் சேரவேண்டும். அந்த உலகமானது கடல்களும், மலைகளும் சூழ்ந்ததாக இருக்கவேண்டும். நீயும் உன் குட்டி ஷெய்தான்களும் மலைகளிலும், கடல்களிலும், இருந்து வரவேணும், உன்னை ஷெய்தான்கள் பணிய வேணும். (இன்னும்)

பணிந்தே யுலகெலாந் திரிந்திடவும் பரிபார மெங்குஞ் செய்திடவுங், கணிந்து நாற்பதி லெக்ஷமாண்டு கால்ந் தேவர் களுலகாளவு; மணிந்திங் காதத்தின் குலங்களெல்லாமனேக நெடுங்கால மாளும் போது, துணிந்த யிசுருயீ றனக்கிறையோன் சொல்வானுயி ரெல்லாம் வாங்கவென்றே. (350)

(இ-ள்):—உலகம் உற்பத்தியான ஆதியில் உன் கூட்டத்தார்கள் ஆளவும், அதன் பின்னால் ஆதமும், அவர் மக்களும் உலகத்தை யாளும்போது நீனும், உன் கூட்டங்களும் ஒதுங்கி யிருக்கவேண்டும். உங்களாளுகை நாற்பது லட்சம் வருஷம் நடைபெறும். ஆதமுடைய மக்களோ! கணக்கில்லாத காலம் ஆளுவார்கள். அப்போது நான் உலகத்தை ஹலாக்காக்க வேண்டும். (இன்னும்)

செய்யும் விடத்தாலும் வியாதியாலும் செத்தா ரெனச் சொல்லத் தீங்கினாலும், வையம் பிழையாது மருந்தினாலும் வலிய வுயிர் விட்டார் வாளா லென்றுஞ், செய்யும் சகிதானர் சலத்தினாலுஞ் செய்த சூனிய மிறந்தா ரென்று, மையோ வெனச் சொல்லி பல விதத்தா லழிந்து போனாரென் றுரைக்க வேணும். (351)

(இ-ள்):—இன்லான்கள் மரணித்தால், மருந்தால், மாயத்தால், வைத்தியத்தினால், மந்திரவாளியால், நீரால், நெருப்பால், வாளால், வியாதியால் செத்தார்கள், என்று அவர்களே சாட்சி சொல்ல வேண்டும். (இன்னும்)

உரைக்கு மவுத்தெல்லாம் பல பேர் சொல்லி யுடையோன்றிரு நாம முரைந்திடாமற், சிறக்கு மிசுறுயீ லுயிரை வாங்கிச் செத்தா ரெனச் சொல்லிக் கொள்ளாமலே, யிறக்கப் பல பல விதங்கடோன்று வெவர்க்கும் பலகோல மெடுப்பாயென்று, றுரைத்த வகையெல்லாங் கேட்டு நின்று ஞெருபேச்சுமறிற் சொன்னானில்லை. (352)

(இ-ள்):— அல்லா மவுத்தாக்கினான் என்றும், இஸ்றயீல் உயிர் வாங்கினா ரென்றும், ஒருவன் ஞாபகத்திலாவது வந்து சொல்லாமல் செய்வேன். அந்தப் பழிக ளெல்லாம் உன்னைத் தானே சேர வேண்டும், என்று றப்பு சொன்னான். அதற்கு இபுலீசு ஒன்றும் பேசாமல் கழுமரம் போல நின்றான். எ-று.

சொல்லுக்கு பதிற் சொல்லாமலே சொன்ன வகை யெல்லாந் தொகுத்துப் பார்த்தே, யெல்லாம் பிரயாசம் செய்த பின்னு மென்ற னெதிரியோ வுலகாளுவா, னெல்லா நினைத்தல்லோ கவலையாகி யேது முறையாம னிற்கும் போது, வல்லோனவனிபு லீசைப்பார்த்து பதிலென்ன சொல் நீ சொல் நீ யென்றான். (353)

(இ-ள்):— றப்பு சொன்ன தெல்லாம் மனதில் பதிய வைத்த வனாக உள்ளுக்குள்ளே ஆஹா! நாம் இவ்வளவு கெடுதிகள் செய்துமா நம் எதிரியும் அவன் மக்களும் உலகத்தை ஆளுவார்கள். நல்லது அவர்களுக்குள் பகையை விளைவிக்கலாம் என்று எண்ணி நின்றான். அப்போது றப்பு, நீ ஏதும் சொல் என்று வற்புறுத்தினான். எ-று.

சொல்லென் றுருமூன்று பரிமான் பின்னர் சொல்லிப் பெரு திலை நின்றானப்போ, தெல்லாங் கேட்டல்லோவீசனுத னிபுலீசு

முன்னுனின்று சொல்வான், வல்ல பெரியோனே யிபுலீசுடன் வகையா யுரைத்திடு முரைகளெல்லா, மெல்லா மெனைபார்த்துச் சொன்னுயானு லிந்த நேரமே செய்வே னென்றுன். (354)

(இ-ள்):— அப்போது இபுலீசு ஈஸ்பரன், உமா, மும்மூர்த்திகள் ஆகிய ஆறு பேர்களும் றப்பை நோக்கி நாங்கள் கேட்கிறபடி தரவேண்டும் என்றுர்கள். றப்பு அப்படியே தந்தேன் என்றுன். எ-று.

செய்யு மோரிடம் புரிந்திருப்பேன் சிறந்த கடல் வேறு மலை வேறுமாய், வையம் புவிவேருய் வளப்படுத்தி வருட மெண்ணைந்தா மிலக்கமுந்தான், செய்வேன் பலனேவுந் தீங்குகளுஞ் செத்தாரெனச் சொல்லப் பலவிதமும், பையப் பொருத்தியே வைப்பே னென்று பகையனிபுலீசு பகர்ந்திடவே. (355)

(இ-ள்):— உலகத்தில் நாங்கள் சென்று யுகமென்றும், பொய் கதைகளென்றும், புராணங்கள் என்றும், வருஷம், மாதம் என்றும் பல கோவென்றும், ஏற்படுத்துவோம், காம வேலையைத் தூண்டுவோம், என்று சொன்னுர்கள். எ-று.

அன்று பெரும் பாவம் மனைத்து மொன்று யஜாசி லதனையே செய்வே னென்றுன், என்ற போதுதா னிறை மகிழ்ந்தே யெல்லா வரமுந்தா னுனக்கேயீந்தே, னன்று நன்று நீ நினைத்த தெல்லா நடக்கும் விதமெல்லா முனக்கேயீந்தேன், மண்டல மாளப் புவிதிருத்த மகாமேர் புரியவும் பரிமானமாம். (356)

(இ-ள்):— அப்போது றப்பு இபுலீசை நோக்கி நல்லது அப்படியே எல்லாவித வரங்களும் தந்தேன். உன் சம்பிரதாயங்களை யெல்லாஞ் செய் பார்ப்போம், என்று கட்டளை கொடுத்தான். எ-று.

பரிமானங் கொண்டே யீசனுதன் பாதை திருத்தியே நிற்கும் போது, பெரியோன் ஜிபுரீலு மீக்காயீலும் பெரிய உலமாக்கள் போல வந்து, வரிசை யெழுபது நகரஞ் சென்று வல்லோனுதத்தை வணங்கு மென்றே, அறுஷைப் படைத்தவன் சொன்னுனென்று மனேகவிதஞ் சொன்னு ரிமையோர்களே. (357)

(இ-ள்):— உத்திரவு போல இபுலீசும் அவன் ஜனங்களும் உலகத்தை நோக்கி நிற்கும் தருணத்தில் ஜிபுரீலும், மீக்காயீலும், பெரிய உலமாக்கள் போல அங்கே ஷெ உலகத்திற்கு வந்து ஜனங்களே! நீங்கள் ஆதத்துக்கு ஸுஜூது செய்யுங்கள், அறுஷை யுடைய நாயன் சொல்லி இருக்கிருன் என்றுர்கள். எ-று

இமையோ ருரைதட்டி யேலாதென்று ரிமையோர் ஜிபுரீலு மீக்காயிலு, மெமையாளும் றெப்பில் ஆலமீனே யெங்களுரை யொன்றுங் கேட்டாரில்லை, யிமையோரேயென்ற னிசுறுயீலே யினிமேலாகிலும் பாருமென்று, னிமையோ ரிசுறுயீல் கோபங் கொண்டே யிரண்டு விழியாலு மெரியப்பார்த்தார். (358)

(இ-ள்):— அந்த மாணிக்க உலகத்தார்கள் இவர்கள் சொல்லை ஒரு அணுத்தனையாகிலும் சட்டபண்ணுததினாலே றப்பிடம்வந்து சங்கதியைச் சொன்னார்கள். றப்பு இஸ்றாயீலைக் கூப்பிட்டு இப்பவாகிலும் பாருமே! என்றான். இஸ்றாயீல் அடங்காத கோபத்துடன் ஒரு பார்வை பார்த்தார். எ-று.

பார்த்தாரெழுபது நகரமொன்றாய்ப் பத்தியெரிந்ததே பரிந்து சுற்றி, முத்துநகரமு மனுவுமாளி முடியக் கருகியே வெந்து நீறாய் மெத்தமலைபோல யுலகுதனில் விழுந்ததெழுபது கரிக்குவியல், கத்தனுரைப்படி யீசனுதன் காட்சிப் புவியெல்லா மாளுநாளின். (359)

(இ-ள்):— இஸ்றாயீல் பார்த்த பார்வையால் அந்த மாணிக்க உலகத்தில் உண்டான எழுபது நகரங்களும் தீப்பற்றி எறிந்து எழுபது கரிக்குவியலாக பூமியில் வந்து விழுந்தன. இபுலீசும் அத்துடன் உலகத்தில் வந்தான். எ-று.

நாலு நாற்பத்திலக்ஷமாண்டு நடத்தி யுலகெல்லா நெறிநீதியாய், வாழுமுமையாளு மீசனுதன் வரத்தாலவர்கால முடிவான பின், ஆளும் பெரியவனுதிகாய னண்ணல் ஜிபுரியீ றன்னைக்கூவி, யாளும் பெரிதான றஹ்மத்தென்னும் மரியகடனீரைச் சிறகில்வாரி. (360)

(இ-ள்):— உலகத்தில் இபுலீசு வந்து நாற்பது லட்ச வருஷம் அரசாண்டான். இதற்குள்ளே பரமசிவன் பார்வதி காலம் முடிவாயிற்று. அதன் பிறகு றப்பு ஜிபுரீலை அழைத்து றஹ்மத் தென்னும் கடல்நீரை உமதுரெக்கையில் தோய்த்து, அந்த எழுபது கரிக்குவியல்களிலும் வீசும் என்றான். எ-று.

சிறகிநீர்தோய்த்துக்கரியின்மீது சிதறவடியுமென் றுரைக்கும் போதி, லிறகி லெடுத்திடுங் கடல் நீர்தன்னை யெல்லாக் கரியிது மிணையைச்சாத்தி, நிறைய மறையெல்லாங்கரியினின்று நெடியப் படைப்பெல்லா மெழுந்ததப்போ, பரையு முருவெல்லா நெருப்பினாலே பனீயாதஞ்சேர டெழுபதாச்சே. (361)

*(இ-ள்)*:— அதே பிரகாரம் ஜிபுரீல் செய்த உடன் அந்த கரிக்குவியல்களிலிருந்து எல்லா ஜீவராசிகளும், புற்பூண்டுகளும் உற்பத்தியாயிற்று. அப்பால் நாற்பது பனியாதங்களும் ஜெனித்தார்கள். இன்ன ஒரு சொற்படி எழுபது ஆதங்கள். எ-று.

எழுபதாதமுஞ் ஜோடுஜோடா யிருந்து பரிபார முலகமெல்லா, மெழுப தாயிரம்வருடமெட்டு மிவர்களொடுங்கால நடக்கும்போது, பழுதிலாதவன் ஜிபுரீலுக்குப் பரிமா னுரைத்திடுங்கேதோவெனில், முழுதுங் குபிர்க்குலம் பனீயாதங் கண் முன்னுலே வையு மாதந்தமை. (362)

*(இ-ள்)*:— எழுபது ஆதங்களும் உற்பத்தியாகி எழுபது எழுபது ஆயிரம் வருஷகாலங்களாக உலகத்தை இராஜியபரி பாலனம் நடத்தினர்கள். அந்தக் காலத்தில் றப்பு ஜிபுரீலைக் கூப்பிட்டு இந்த பனியாதங்கள் முழுதும் காபிரீன்களாக இருப்பதாலே நீர் ஆதத்தைக் கொண்டுபோய் அவர்கள் முன்பாக வையுமென்று உத்திரவு செய்தான். எ-று.

ஆல நபிதம்மை பனீயாதங்க ளடங்கலும் வந்து தொழுக வென்று, வேத பெரியவன் ஜிபுரியிலே வேதநிலையிலே சேரு மென்றான், பாதகஞ் செய்யு மிபுலீசுதான் பதறி யழுதுமுன் னெழுந்துபோன, ஞேது முலமாக்கள் வடிவுபோலே யொப்பில் அலடங்காத சிங்காரமாய். (363)

*(இ-ள்)*:— அவ்விதம் வைத்து ஆதத்திற்கு ஸாஷ்டாங்கஞ் செய்யச்சொல்லும் என்றான். அப்படி ஜிபுரீல் வேதப் பிரசங்கங்கள் செய்தார். இதைக் கண்ட இபுலீசானவன் பதறி யோடி ஒரு *மஹாரிஷியைப்போல் உடையணிந்து ஒரு அஞ்சனக் கோலுங்கையில் பிடித்தவனுக, (இன்னும்)

சிங்காரமாகவிபுலீசுதான் சென்றான் பனீயாதங் குழுநடுவே, யங்க மழகான வடிவைப்பார்த்தே ஆராரெனக்கேட்டார் பனீயா தங்க, ளெங்கே யிருந்தவ ரெங்கே வந்தீ ரெங்கட்குபகார மேது சொல்வீர், பங்கப் படுத்தவே பனீயாதத்தைப் படைத்தோனுரைத் திடும்பரிசு கேளீர். (364)

---

* இவ்வை தமிழ் ஸாஸ்திரிகள், நாரதன் என்பார்கள்.

*(இ-ள்):*— அநேக சிங்காரத்துடன் ‡ பனீ ஆதங்களின் குழுக்களுக்கு நடுவே சென்ருன். அவர்கள் இவனைக்கண்டு ஓ! மஹாஆத்மாவே நீர் யார்! எங்கிருந்து வருகிறீர், என்று கேட்டு பாதார்ச்சனை புரிந்தார்கள். எ-று.

பரிமா னஞ்சொன்னுன் ஜிபுரீலுக்குப் பண்டே யுருச்செய்த மண்ணுதத்தைக், குழுவோர் கண்முன்னே நிறுத்திவைத்துக் கூண்ட பனீயாதங் குலங்களெல்லாக், திருவாய்ப் பணியவும் சுஜூதிடவுஞ் செய்வேன் சுஜூதிட்டாற் றீங்குகளை, யுருவான வாத மண்ணுனதா லுங்கள் குலமெல்லாம் பாவிதானே. (365)

*(இ-ள்.):*— ஓ! ராட்சஸர்களே! நீங்கள் உஷாராய்யிருக்க வேண்டும். ஜிபுரீல் ஒரு மண்ணைத் தூக்கிக்கொண்டு வந்து அதற்கு ஸாஷ்டாங்கஞ் செய்யச் சொல்வார் அதற்கு நீங்கள் இணங்க வேண்டாம் இணங்குவீர்களே யானுல் நீங்கள் பாவியாவீர்கள்

பாவிக் குலமென்று குப்பார்செய்யப் பரிமா னிறையவன் ஜிபுரீலுக்குக், காவியாவிலே சேரமலே கரும மறியவேதெரியச் சொன்னே, ருவி யருந்தாலும் சுஜூது செய்யோம் ஆதமண்ணல் லோவெனச் சொல்லுங்க, ளேவுஞ் ஜிபுரீயில்வருவாரினி யென்பேர் மீக்காயீ லென்று சொன்னுன். (366)

*(இ-ள்.):*— அவ்விதம் செய்வீர்களானுல் இனி நீங்கள் ஈடேற்றம் பெறுவது எள்ளு. உங்கள் குடி யிருப்பு நரகமாக இருக்கும், ஆனதாலே என் சொல்லை ஒரு தேவாமிர்தம் போலப் பாவித்துக் கொண்டு, நாங்கள் மேலான கூட்டங்கள் அந்த மண்ணுக்குத்தலைசாய்க்க மாட்டோம் என்று ஒரே நிலையாய் நின்று விடுங்கள். இரண்டு பேரில் ஒருவர் ஜிபுரீல்வருவார். என்பேர் மீக்காயீலாக இருக்கும் என்ருன். எ-று

சொல்லிக் கொடுமையை வருத்திவைத்துச் சோரனிபுலீசு போனபின்பு, வல்லோன் ஜிபுரீயீலாதந்தமை வாரிக்கொடு வந்தார் பனீயாதமுன், அல்லா வுரைப்படி யாதந்தமை யன்று தொழு மென்றே ஜிபுரீல் சொல்ல, வெல்லோருஞ் சொன்னுர் மண்ணல்லவோ வெங்கள் குலம் வன்னி பெரிதுதானே. (367)

---

**‡ பனியாதங்கள் என்பது ராக்ஷஸர்கள், இராவணனும் அந்தக் கூட்டந்தான்.**

*(இ-ள்.)*:—இவ்விதம் பாதகச் சொல்களை யெல்லாம் சொல்லி கல்ல ஆணியை அரைந்து விட்டு இபுலீசானவன் போன பிறகு, ஜிபுரீல் ஆதத்தைக் கொண்டு வந்து அந்தப் பனிஆதமிகள் முன்னே வைத்து ஓ! ஜனங்களே, ஆண்டவன் கட்டளைப்படி இந்தஆதத்துக்கு ஸாஷ்டாங்கம் செய்யுங்கள், என்றார். அதற்கந்த ஜனங்களெல்லாம் ஒருப்படத்திரண்டு கூடி, இது மண்ணல்லவே! நாங்கள் மேலான படைப்புகளாக யிருக்க இதற்கு எவ்வண்ணம் வணக்கஞ் செய்வோம் ஒருக்காலும் செய்யமாட்டோம்: என்றார்கள். எ-று.

வன்னிவணங்குமோ புவியைநோக்கி வருந்தோ மெனச் சொன்னாரொரு மொழியாய், முன்னோன் ஜிபுரியீலாதந்தமை முன் போல வருடசிறகிலேந்தி, யெண்ணிலடங்கானே பெரியவனே யிணங்காக்குலம் பனீ யாதமெனச், சொன்னான் ஜிபுரீலே யாதந்தமைச்சுவர்க்கபதியிலே வையுமென்றான். (368)

*(இ-ள்.)*:—நாங்கள் சூரிய சந்திர வம்மிஷத்தார்களாக இருக்க நாங்கள் பூமியை ஒருக்காலும் வணங்கமாட்டோம், என்று ஒரே பேச்சாகச் சொல்லிவிட்டார்கள். அப்பால் ஜிபுரீல் ஆதத்தைத் தூக்கி பழயபடி சுமந்து கொண்டு அறுஷில் வந்து றப்பே! அந்த பனீ ஆதமிகள் பொல்லாதவர்களாக இருக்கிறார்கள், என் சொல்லுக்கு இணங்கவே இல்லை என்றார். உடனே ஆதத்தைக் கொண்டுபோய் சுவர்க்கத்தில் வைக்கும்படியாக உத்திரவு செய்தான்.

வைத்தார் சுவர்க்கத்தி லாதந்தமை வல்ல பெரியவன் பரிமான மாங், கத்தா பெரியவன் றகுமத்தென்னுங் கடலைப்பார்த்து தானேது சொல்வா, னெத்துந்திரளான மங்குலங்க ளேகவுருவெல்லாம் வாருமென, வெற்றி யலங்கார முழக்கமாக வெளியிலெழுந்ததே வெகுகூட்டமாய். (369)

*(இ-ள்.)*:—அப்படியே ஜிபுரீல் வைத்துவிட்டார். அப்பால் றப்பு தன் றகுமத்தென்கிற கடலை யழைத்து மேகக்கூட்டங்கள் யாவும் இந்த சமயம் வந்து சேரவேண்டும் என்றான், உடனே சண்ட மாருதங்களுடன் ஆரவாரித்து மேகசாலங்கள் கெர்ஜித்து எழுந்தன.

கூட்டமாகவே யெழுந்தமேகங் குறையில்லாமலே யெழுந்த தப்போ, தேட்டி லடங்காத பெருங்கூட்டத்தை யிதமா யொன்பது பிரிவு செய்து, காட்டில் விதமெட்டா மெட்டுமேக நபிக்குக்குடை

மேக மிராஜாவுமாங், கூட்டு மிராஜாங்கங்குடை நபிக்குக் கொள்ளு மிருநான்கு விபரந்தானே. (370)

(இ-ள்.):— அவ்விதம் வந்த மேகங்களில் எட்டுவகையும், நபியவர்களுக்கு குடை பிடிக்கின்றமேகம் ஒன்று ஆக ஒன்பது வகைபடுத்தி அவைகளில் எட்டுப் பிரிவினைகள் ஆனது. எ-று.

தானே வைரம்பொன் முத்துரத்னங் தரணிபொழியுமங் குலமே யொன்று வானசந்தனம் பொழியுமேக மக்கினி யொன்று பொழியுமேக, மான மரங்கல்லாற் பொழியுமேக மண்மாரி யாகப் பொழியுமேகங், தேனுஞ் சர்க்கரை பொழியுமேகங் தினமும் பனியாகப் பேயு மொன்றே. (371)

(இ-ள்.):—முத்துக்களை அள்ளிப்பெய்கிற மேகம் ஒன்று, சந்தனத்தைப் பெய்கிற மேகம் ஒன்று, நெருப்பைப் பெய்கிற மேகம் ஒன்று, கல், மரங்களை வாறிப்பொழிகிற மேகம் ஒன்று, மண்மாரி பெய்கிற மேகம் ஒன்று, தேன், பால்களை வாரிப்பொழிகிற மேகம் ஒன்று, பனித்தண்ணீரை சொரிகிறமேகம் ஒன்று, ஆக, எட்டு வகை மேகங்களும் பெருத்த கூட்டமாக வந்தன. எ-று.

பேயும் விதமேழு மேகமேழும் பெருங் கூட்டமுமாகுமழை மேகங்க, ளாய மங்குல மிருநான்குக்கு மரசனுகுமே குடை மேகமுஞ், சாய நவமேக மிறைவகுத்துத் தக்கமீக்காயி லரசனுகப், பேயு மழையெல்லாம் ஹயாத்துல் கைபார் பெரிய கடலிலே சலமெடுக்க. (372)

(இ-ள்.):—இந்த எட்டுக்கும் அரசனுகிறதுகுடை மேகந்தான். இந்த ஒன்பது வகையான மேகங்களுக்கும் தலைமையாக மீக்காயீலை ஏற்படுத்தி அவைகளை ஹயாத்துல் கைபார் கடலில் போய் ஜலம் அள்ளும்படியாகக் கட்டளையிட்டான். எ-று.

எடுக்கும் பாற்கடல் ஹயாத்துல் கைபா றிறங்குநீரைத்தான் மீக்காயீலு, மெடுத்து வளர்ந்தநீர் மேகமெல்லா மிருந்து சூல்முற்றி மாதமூன்று, விடுக்கந் தலையினீர் பால்செமித்து வேண வுயிரெல்லா நீரில் வர, வடுக்கு நீருல குயிராகவு மாதி பெரியவன் பரிமானமாம்.

(இ-ள்.):—அவ்விதம் எடுத்த நீரை மூன்று மாதக்காலங்களாக தன் கெர்ப்பங்களில் வைத்துப் பனி உண்டாக்கி, மிகுந்த ஆரவாரத் துடன் சோனுமாரியாகப் பொழியும் படியாய் ஆக்கியாபித்தான்.

ஆதிபெரியவன் மீக்காயீல்தா னள்ளி யளந்திடுங் கடனீர் தன்னை, மோதி மங்குலமழை பொழிய முழுதும் பனீயாதம் குலமழிய, வரதியுரைப்படி மீக்காயீலு மந்தக் கடனீரை யள்ளி விட்டே, யேதுங்குறையாமன் மழைபொழிய வெல்லா மழிந்ததே பனீயாதங்கள். (374)

(இ-ள்.):—இவ்விதம் பொழிந்த மழையில் அநேக ஆனை மீன்களும் செளிந்தன. இரண்டு மாதக்காலங்களாக இரவு பகல் பெய்த அடங்காப் பெருமழையால் பனீ ஆதமிகளின் நாடு நகரங்களெல்லாக் தவிடு பொடியாய்ப் போய் அந்தக் குளிரின் கடூரத்தால் பனீ ஆதமிகள் எல்லாரும் கொடுகிவிரைத்து விலவிலத்து ஹலாக்காகி விட்டார்கள். அதோடும் ராக்ஷஸயுகங்கள் முடிந்து போயிற்று. எ-று.

---

## ஹவ்வா பிறந்தது.

ஆதம் வன்னிதா னெருப்பானதா லந்தச்சலத்திலே யழிந்த தப்போ, ஆதகபியுல்லா சுவர்க்கநாட்டி லனேககனியெல்லா மருந்து நாளிற், சோதி நபியாத மாளிகைமுன் சொல்லத் தொலையாத வலங்காரமாய், மாதர் குருவான வுலக மாதா மரத்தின் கனியாக விருந்தாரப்போ. (375)

(இ-ள்.):— பனீ ஆதங்கள் இவ்விதம் கொடும்பனிநீரால் அழிந்த பிறகு மண் ஆதம்சுவர்க்க லோகத்தில் வீற்றிருந்தார்கள். இருந்து கற்பக சோலையில் தான் நாடிய பழவர்க்கங்களைத் தின்று வந்தார்கள். அப்போது, ஆதமுடைய மாளிகைமுன் நின்ற ஒரு விருட்சத்தின் கனியாக ஹவ்வா இருந்தார்கள். எ-று.

கனியா யிருந்தது ஹவ்வாவுமாங் கனியின் சுடரொளி யழகு வீச, வினிய கனியுட வழகுகண்டே யிந்தக் கனிதின்ன வேணு மெனத், தனிய னிடத்திலே யாதநபி தருக வெனச் சொல்லி துஆவிரந்தார், கனியை யவர்கையிற் கொடுவெனவே கத்தனுரைப்படி ஜிபுரியீலும். (376)

(இ-ள்):— ஹவ்வா அம்மா அவர்கள் இருக்கிற கனியாகிறது அதிகமான ஒளிவு வீசிக் கொண்டிருந்ததினாலே ஆதமுக்கு அந்தக் கனியின் பேரில் ஆசையுண்டாகி, றப்பை மன்றாடி துஆக் கேட்டார்.

உடனே றப்பு அந்தக் கனியைப் பறித்து அவர் கையில் கொடுக்கும் படியாக ஜிபுரீலுக்கு உத்திரவு பிறந்தது. எ-று.

உரைக்க விறையவன் ஜிபுரியீலு முவந்து கனிதனைக் கொடுக்க வாங்கி, மறைக்கு ளடங்காத கனிரசனை மகிழ்ந்தா ராதத்தம் வயிர்பொருமி, யிருக்கு மவருட இடவிலாவி லெழுந்து சிலந்தி போலுடையும்போது, தரைக்கு நி க ரி ல் லா வடிவுகொண்ட தையலெனும் ஹவ்வா பிறந்தாரப்போ. (377)

(இ-ள்):— அதே பிரகாரம் ஜிபுரீல் அந்தக் கனியைப் பறித்து ஆதம் கையில் கொடுத்தார். உடனே ஆதம் அதை வாங்கித் தின்றதும் வயிறு பொறுமி ஆதமுடைய இடது விலாப்பக்கத்தில் ஒரு சிலந்திக்கட்டிபோல் வீங்கிற்று. அப்பால் அது உடையும் போது, அதனுள்ளிருந்து அழகிய வடிவுடனே, ஹ வ் வா பிறந்தார்கள். எ-று.

பிறந்த மதலையைப் பெற்றதாதை பிரிசப்படக்கண்டு பெரிய நாயன், வருந்தி யிருவர்க்கு மணமுடித்தான் வாழ்ந்து சுவர்க்கத்தில் இருக்குநாளிற், பெரிய கசடுள்ள விபுலீசனும் பெண்ணின் சுரூபமாய் வந்தானங்கே, யிருந்து ஹவ்வாவு மிபுலீசனு மிருவர் வளமையும் பேசினரே. (378)

(இ-ள்):— பிறந்த ஹவ்வாவின் பேரில் ஆதம் இனியில்லாத மோகங்கொள்கிறதை, றப்பு தெரிந்து அவர்கள் இருபேருக்கும் கலியாணஞ் செய்து வைத்தான். அப்பாலவர்கள் சுவர்க்கலோகத்தில் இருக்கும் போது இபுலீசு அங்கு வந்தான். எ-று.

பேசியிருக்கையி லிபுலீசுதான் பெரிய கோதுமைக் கனியெடுத்து நேசம்பிரியாம லிருக்கஆத நீயு மவருமே யு ண் பீ ர ா னு ல், வாசமுமையல்லா லொருமாதரை வருந்தா வகைக்கிது மருந்தா மென்று, மேசி யெறிந்தாலுங் கொடுத்தீராகி லெல்லா நுங்கையில் அடங்கிப்போமே. (379)

(இ-ள்):— கசடுள்ள மூதேவியான இபுலீசும் அங்கேவந்தான். வந்தவன் ஒரு பெண்ணுடைய ரூபத்தில் வந்தான். அப்போது இபுலீசும் ஹவ்வாவும் தங்கள் பழக்கங்களைப் பேசினவர்களாக இருந்தார்கள். இருக்கும்போது இபுலீசு றப்பு விலக்கின கோதுமைக் கனியைப் பறித்துக் கொண்டு வந்து, ஹவ்வா கையில் கொடுத்து

இந்தக் கனியை நீங்கள் இருவரும் தின்ருல் ஆதம் உம்மையன்றி வேறு பெண்மேல் இச்சிக்கமாட்டார், இது ஒரு ஈடு மருந்தாக இருக்கும். இனி யெல்லாம் உமது கையில்தான் சிக்கிவிடும், என்று சொன்னன். எ-று.

அடங்கா திருந்தவ ரெனதுநேச ரடக்கிக் கொடுத்தது மிக்கனிதா, னிடங்காடனையவும் பற்றிவைத்தே யிபுலீ செழுந்து தான் போனபின்பு, கெடுதல் தெரியாமலாதம்நபி கிளியின்மொழி மாதினிடத்தில்வந்து, மடியி லிருத்தியே ஹவ்வாதமை மகிழ்ந்து பேசியே யிருக்கும்போது (380)

(இ-ள்):— இன்னும் இந்தக் கனியானது எனது நேசர்களில் அநேகம் அடங்காதவர்களை யெல்லாம் அடக்கிக் கொடுத்தது, என்று சொல்லி ஹவ்வாவை நல்ல கட்டு படுத்தி விட்டு இபுலீசு போய் விட்டான். அப்பால் ஆதம் நபி ஹவ்வா உடைய மாளிகைக்குள் வந்து மடியில் ஏற்றிக் கொஞ்சி விளையாடிக் கொண்டிருக்கும் போது. எ-று.

இருக்கும்போதுதான் ஹவ்வா சொல்வா ரெனக்கு வாக்கொன்று தருகவேணு, மிருக்கு முயிர்கேட்கி லுமக்கே தந்தே னெந்த வகைக்குமே யிணங்தேனென்றுக், திருக்கை யடித்துத்தான் சிரசுதொட்டுத் தீங்காஞ் சத்தியஞ் செய்தபின்பு, பெருக்கும் பிழையான கனிகோதுமைப் பேதையெடுத்தல்லோ கொடுத்துச் சொல்வார். (381)

(இ-ள்):— அந்த இன்பமான நேரத்தில் ஆதத்தைப் பார்த்து ஹவ்வா சொல்வதாவது, நீங்கள் எனக்கு ஒரு வாக்குறுதி தர வேண்டும் என்ருர். உடனே ஆதம் இந்த சமயத்தில் நீ என் உயிரைக் கேட்டாலுங் தருகிறேன், என்று வலக்கையில் அடித்து தலையைத் தொட்டு பெரிய சத்தியம் செய்து கொடுத்தார். அதன் பிறகு ஹவ்வா அந்தக் கோதுமைக் கனியை எடுத்து ஆதம் கையில் கொடுத்து சொல்கிருர். எ-று.

சொன்ன பிராமண மிதையருந்தச் சொன்னு ளெனதுடதோழி யென்ரு, ளென்னமதிகாணு மிபுலீசனு மிந்தக்கனி தன்னை யிருவருண்டால், முன்னுளிறைதந்த தவங்குலேக்து மோசப் பெரும்

பாவியாவோமென்றார், என்ன விதத்தாலு மிதுதின்னுதா லெனக்கு
மூமக்கினி யில்லையென்றார். (382)

(இ-ள்):— இந்தக் கனியைத் தின்னும்படியாக என் தோழி சொன்னாள். ஆனபடியால் தின்னத்தான் வேண்டு மென்றார். அதற்கு ஆதம் சொல்வார், இது என்ன பேதைப் புத்திகாணும்! அது தோழியா? இபுலீசல்லவோ! இந்தக் கனியைத் தின்றால் பாவியென்று றப்பு சொல்லியிருக்கிறான் என்றார். அதற்கு ஹவ்வா என்ன விதத்தாலும் நீங்கள் இந்தக் கனியைத் தின்னத்தான் வேணும். இல்லாவிட்டால் இப்பவே உங்களுக்கும், எனக்கும் உறவு இல்லவே இல்லை என்று சொன்னார். எ-று.

இல்லை யெனஹவ்வா பிரிவுசொல்ல வேங்கியழுதாதங்கனி
யெடுத்துச், சொல்லுங் கனிதனை யிருவருமாய்த் தின்றவுடன்றாக
மோகமாகி, வல்லபெரியவன் சுவர்க்கந்தனில் வலமுஞ் சலமுமாய்
நிறையும்போதி, லெல்லைப் பதியாளன் சுவர்க்கம்விட்டே யிருவர்
தமைத்தூக்கி யெறியுமென்றான். (383)

(இ-ள்):— ஹவ்வா சொன்ன பிரிவான வார்த்தையை ஆதங் கேட்டுப் பரிதாபத்துடன், அழுது புலம்பிக் கை சேதப்பட்டவராக மேற்படி கனியை இருவரும் தின்றார்கள். தின்றதும், பசியுடைய தாகமும், காமத்துடைய மோகமும், ஈண்டாயிற்று. பசிக்குத் தின்னதின்ன வயிற்றில் மலஜலம் உற்பத்தியாகி ஆசனத்தின் வழியாக காற்றும் வந்து நாற்ற முண்டாகினது மல்லாமல் அந்த துப்புறவான சுவர்க்க லோகத்தைச் சுற்றி சுற்றி கொல்லைக்கிருந்து எங்கு பார்த்தாலும் நாற்றமும், நரகலுமாக்கி வைத்தார்கள். எ-று.

எறியு மெனச் சொன்னான் பெரியநாய யேகனுரைப்படி
ஜிபுரியிலும், பெரியோ னாதத்தை யெழுவானிலும் பேதை
ஹவ்வாவைப்படுவானிலு, மெறியவிருவருந் தனியேநின்று யேங்கி
யாயிரம் வருடமட்டும், அரிய பெரியோனே தம்பிரானென் றல்லா
தனைநாடியழுதாராதம். (384)

(இ-ள்):— ஆதம் ஹவ்வா இருவர்களும் சுவர்க்கத்தை அசிங்கஞ் செய்யத் தலைப்பட்டதும் றப்பு ஜிபுரீலைக்கூவி ஆதமையும், ஹவ்வாவையும் தூக்கி இதே க்ஷணத்தில் எறியும் என்றான். அந்தப்படி ஜிபுரீல் ஆதத்தை எழுவான் திசையிலும், ஹவ்வாவைப்

படுவான் திசையிலும் எறிந்து விட்டார். இருவரும் வந்து விழுந்த இடங்களில் கிடந்த கோலத்துடன் ஆயிரம் வருஷகாலமாக றப்பையும், தாம் இருந்த செல்வாக்குகளையும், நினைத்து அழுதார்கள். எ-று.

அழுதா ராயிரம் வருடமட்டும் வணுவுமிரங்கிலனுதி நாயன், முழுதும் பிழையெல்லாம் பொறுப்பவனே முஹம்மதை யெந்தன் பாலனாகப், பழுதுவாராம லமைப்பவனே பாலன் றனக்கு நான் பிதாவல்லவோ, வெழுத முடியாத முஹம்மதுக்கா யெந்தன் பிழை யெல்லாம் பொறுப்பவனே. (385)

(இ-ள்):— ஆயிரம் வருஷம் வரையிலும் ஆதம் நபி அழுது, றப்பை நோக்கி யாறப்பி! நீ சொன்ன பிரகாரம் முஹம்மதை என் பிள்ளையாகப் பிறப்பிப்பதனுலேயும், அவருடைய நூறை நான் சுமந்த பறக்கத்தாலேயும், என் பிழையைப் பொருத்தருள். என்று கெஞ்சினர். எ-று.

பொறுப்பாய் பிழையெல்லா முஹம்மதுக்காய்ப் புகழ்ந்தேன் முஹம்மதை யுனதறிவாற், சிறப்பா முஹம்மது நாமஞ்சொல்லச் சீக்கிரம் வாருஞ் ஜிபுரியீலே, நிரப்பமாகவே யாதம் ஹவ்வா நீடூழி வாழ்க வுலகமீதி, லிருக்கும் பதியின்பேர் மக்கக ரிருவர் தமைக் கூட்டி வாரு மென்றான். (386)

(இ-ள்):— இவ்விதம் ஆதம் நபி நமது நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமுடைய நாமத்தைக் கொண்டு கெஞ்சின உடனே, றப்பன் சீக்கிரம் ஜிபுரீலைக் கூப்பிட்டு நான் ஆதமுடைய பிழையைப் பொறுத்துக் கொண்டேன், நீர் ஆதமையும், ஹவ்வாவையும், கூட்டிக்கொண்டு மக்கம் என்கிற ஸ்தலத்தில் விட்டு விடும், அவர்கள் சந்ததி பெருகினவர்களாக உலகத்தில் நீடூழி வாழட்டும் என்றான். எ-று.

கூட்டி யிருவரை மக்கநகர் கோதையுடனுத மிருக்குநாளி, லேட்டிலடங்காத வாதிநாய னிமையோர் மீக்காயீ றன்னைக்கூவி, நாட்டிலாதத்தை யிறக்கிவைத்தே னுலா வகையெல்லா நிறைய வென்றே, யாட்டம் பெரிதான றகுமத்தென்னு மறியகடனீரை மேகம்வாரி. (387)

(இ-ள்.):—ஆதமும், ஹவ்வாவும் பக்கத்தில் வாழ்ந்திருக்கும் போது றப்பு மீக்காயீலைக் கூப்பிட்டு, ஆதமை நான் உலகத்தில் இறக்கி யிருப்பதால் அவருக்கு கறுஅத்துக்கு வழி செய்யும் பொருட்டு நீர் மேகங்களை யழைத்து றகுமத்தென்னும் கடலில் போய் நீரையள்ளச் செய்து மழையை வருஷிக்கப் பண்ணும் என்றான். எ-று.

வாரி ஜலத்தை மங்குலங்களுண்டு வையமுழுதுமே மழை பொழியப், பேராற்பெரியவன் சொன்னபடி பெய்யு மழையாக வுலக மெல்லாஞ், சீராய்ப் புற்பூடு பலவிருட்சஞ் சிறந்த வகையெல்லா நிறையவென்றான், பார கடனீர்தான் பலவித்தாகப் பாங்காய் விருட்சம் பற்புற்பூண்டாச்சே. (388)

(இ-ள்.):—அவ்விதமே மீக்காயீல் மழை பொழியச் செய்தார். அந்த மழையால் றப்புடைய உத்திரவுபடி தானியாதி விளைபொருட்களும், விருட்சாதிகளும் புற் பூண்டாதிகளும், ஆதிவித்தாக உற்பத்தியாயிற்று. எ-று.

உண்டுபடச்செய்தா னொருமொழியி லுண்டுபடுத்தியவுயிரை யெல்லா, மன்றேயுலகத்தி லிறக்குமென்று மனைத்து மிறங்கியே யொன்றேடொன்றாய், நன்றாய்ப் பரிபார முலகுயிரு கடத்தி யுலகெலா நிறையுநாளின், மண்டலமெங்கும் ஆதநபி மண்ணில் விளைத்துண்ணப் பரிமானமாம். (389)

(இ-ள்.):—அத்துடன் அறுவாஹில் ஆதத்துடன் உண்டு படுத்திய உயிர் ஜீவாதிகளையும் இறக்கினான். உலகமெல்லாம் பல ஜீவசந்தடிகள் பெருகிவிட்டன. அதன் பிறகு ஆதம் தீன்களுக் குரிய ஆகார வஸ்துக்களைப் பிரிக்கத்தெரியாதவராக இருந்தார். அப்போது முதல் ஸுஹுபுகள் என்னும் தேவக்கட்டளை இறங்கிற்று. எ-று.

மண்ணை யுழுகவும் பலதானிய மகிழ்ந்து விளைந்ததை யருந்த வென்றே, யெண்ணி லடங்காதான் விதித்தபடி யிருந்துபரிபார கடத்துநாளி, லெண்ணி லடங்காத பெரியவனே யென்று நிதம் புகழ்ந்தாதநபி, முன்னா ளுனதுட வொளிவிலான முஹம்மதைக் காண வாசையானேன். (390)

*(இ-ள்.)*:—அந்த சுஹ்புகளின் வாயிலாக ஏர் கட்டி பூமியை உழுது, விதை விதைத்து கிரை குழைகளைப்பறித்து, காய்கனிகளைக் கொய்து, இன்னின்ன விதம் சமைத்து சாப்பிடவேண்டு மென்ப தெல்லாம் சொல்லிற்று. அதன் பிரகாரம் ஆதம் செய்து வரும் போது றப்பை நோக்கி, உன் ஒளியில் முத்தாக இருந்த முஹம்மது தென்னும் வடிவைக்காண மெத்த ஆசையாக இருக்கிறது, என்றார். எ-று.

ஆசை பொருந்திய வெனதுபால ரஹ்மதொளிவை யென் பாத்திலாக்கென், றோசையாய்ச்சொல முஹம்மதுதா னொளிவுக் குத்தாபையு மொருமுத்தாக்கி, நேசமாயாத முதுகுதனி னேரே யுயரத்தி நிறுத்திவைத்தான், வாசநபியாதம் ஹவ்வாவுமாய் வாழ்ந்தே யிருவரு மிருக்குநாளில். (391)

*(இ-ள்.)*:—ஆனபடியாலே அந்த வரிசையான பிள்ளையின் ஒளிவை என் முதுகின் கண் பிரகாசிக்கும் படியாகச் செய்தருள் என்றார். உடனே றப்பு முஹம்மதிய்யத்தான ஒளிவையும், குதுபு தையத்தையும் ஒரு முத்தாக ஆதமுடைய முதுகந்தண்டில் நிறுத்தி வைத்தான். அதிலிருந்து ஆதமும், ஹவ்வாவும் இன்பகரமாக இருக்கிற காலத்தில். எ-று.

இருக்கும்போதினி லிபுலீசனு மிலங்குமறிவாளர் வடிவு கொண்டே, யுருக்கமாய்ச் சொன்னான் ஹவ்வாதமை யுலகி லுமக் கேது மதலையில்லை, யிருக்கு தெனக்கொரு வேழைப்பால னெடுத்து வளவென்றே யவர்க்குச்சொல்லி, யுருக்க மாய்வாடா மகனே யென்றான் அப்போ அகுமது வோடிவந்தான். (392)

*(இ-ள்.)*:— இவ்விதம் இருக்கும்போது இபுலீசு ஹவ்வா வுடைய இடத்துக்கு ஒரு பெரிய ஆலிமைப்போல் வந்து ஏது பிள்ளை? உனக்கு இது பரியந்தம் குழந்தையில்லை? நல்லது இருக்கட்டும். என்வசம் ஒரு ஏழைப்பிள்ளை இருக்கிறது. அதை எடுத்து வளர்ப்பாயாகில் அதன் பறக்கத்தைக் கொண்டு உனக்குப் பிள்ளைப் பலன் உண்டாகும் என்று ஏமாற்றிச் சொல்லி வாடா மகனே என்று கூப்பிட்டான். எ-று.

வந்தா னகுமது மிபுலீசுமுன் வடிவு பொருந்திய பாலனை, இந்தா பிடியுமென் றவன்கொடுத்தா னிணங்கி யிருகையால் ஹவ்வா

வாங்கி, யெந்தன் குழந்தையென் றெடுத்தணைத்தே யிலங்கு முகத்தையு முத்திக்கொள்ளத், தந்தே னெனப்போனு னிபுலீசப்போ தகப்பன் றனைத்தேடி யழவும்பாலன். (393)

(இ-ள்):— கூப்பிட்டதும் அகுமறு என்கிற கன்னுஸு ஓடிவந்தான். அந்த அழகிய கன்னுஸைப் பிடித்து, இந்தா பிடி என்று கொடுத்தான். ஆசையுடன் ஹவ்வா இரண்டு கையையும் நீட்டி வாங்கி அவனுடைய முகத்தை வளைந்து வளைந்து முத்திக் கொண்டார். உடனே இபுலீசு கொடுத்தேன் கொடுத்தேன் பத்திரம் என்று சொல்லி விட்டுப் போனுன். எ-று.

அழுகை யமர்த்திஞர் பாலகனை யாதகபி வந்தாரப்போதேக, குழவிக் குரலேது வரிசையேது கூறுமெனக் கேட்க ஹவ்வா சொல்வார், கிழவர் பெரியவ ரொருவரீந்தார் கிடையா திதுபோலே வடிவுபாலன், முழுதுங் கெடுத்தவ னிபுலீசவன் மோசம் வருத்தவே வந்தானென்ருர். (394)

(இ-ள்):— அப்போது கன்னுசு இபுலீசைத் தேடி அழுது கொண்டிருந்தான். ஹவ்வா, அட மகனே! கண்மணியே! அழுகாதே என்று அணைத்துக்கொண்டிருந்தார். அந்த நேரத்தில் ஆதம் வந்தார். வந்து, இங்கே குழந்தையின் சப்தம் ஏது! அது எவ்விதம் வந்தது? என்று கேட்க, ஹவ்வா சொல்வார், ஒரு பெரிய கிழவர் கொண்டு வந்து கொடுத்தார், இந்த பிள்ளையைப் போல் அழகுள்ள குழந்தை இனி நமக்கு அகப்பட மாட்டாது என்ருர். அதைக் கேட்டு ஆதம், அடிபைத்தியக்காரி நம்மளை சுவர்க்கத்தில் இருக்க வொட்டாமல் குடி கெடுத்த பாவியான இபுலீசல்லோ அந்தக் கிழவன் என்ருர். எ-று.

வந்தா னிபுலீசு நமைக்கெடுக்க வடிவுப் பாலன்ருன் கன்னு சாகுந், தந்தா னகுமறென் ருெருபேர் வைத்துத் தனது கசடெல்லாந் திரட்டி யொன்ரு, யந்தநேரமே யிளம்பாலனை யனேகப்பிளப்பாக வறுத்தறுத்தே, யிந்தப் புவியிலே குழியைக்கல்லி யெடுத்துப் புதைத்தல்லோ மிதித்து வைத்தார். (395)

(இ-ள்):— என்று சொல்லி மறுபடி ஹவ்வாவே இந்த உலகத்திலும் நம்மைக் கெடுக்கவந்தான். இந்தக் குழந்தையானது அவனுடைய கசடு என்னும் கன்னுஸாக இருக்கும். உன்னை

ஏமாற்ற வேண்டி அஹமது என்கிற பேர் வைத்துக்கொடுத்தான் என்று உடனே அந்தக்குழந்தையை அநேக துண்டங் கண்டங்களாக அறுத்து பூமியில் குழிதோண்டிப் புதைத்து மண்ணை மூடி வைத்தார். எ-று.

வைத்தார் மதலைமே லாசைகொண்டு வாயிற் புலம்பியே யிருந்தார் ஹவ்வா, கத்த நபியாதம் போனபின்பு கபட னிபுலீசு வந்தானங்கே, பத்தினிமாதே பாலனெங்கே பாரிற் புதைக்கவும் பயித்தியமோ, வொத்தை கொடியிட்டு மகனே யென்று ஓடி வந்ததே யொளிவுபாலன். (396)

(இ-ள்):— அந்த நேரத்தில் பிள்ளையின் பேரில் ஆசையுடன் ஹவ்வா அழுது புலம்பினவராக இருந்தார். ஆதம் போனபிறகு ஹவ்வாவிடம் இபுலீசானவன் வந்து ஏ! பிள்ளை ஹவ்வாவே குழந்தையை அறுத்து புதைத்தது என்ன புத்தி யென்று சொல்லி மகனே வாடா! என்று கையை சிட்டிகை தட்டினான். உடனே அகுமது ஓடி வந்தான். எ-று.

பாலன் றனைமுன்போல் கொடுத்துப் போனான் பார்த்தாராத முமனம்பதறிப், பாலன் றனைவெட்டித் தீயிலிட்டுப் பத்தியெறிந்து நீறாகிப்போச்சுக், கோலந்தெறியாம னீறைவாரிக் கொண்டு ஜலத்திலே கரையவிட்டார், மேலும் ஆதந்தான் போனபின்பு வீம்பனிபுலீசு வந்தானங்கே. (397)

(இ-ள்):—வந்த பாலனை முன்போல ஹவ்வாவிடம் கொடுத்துப் பத்திரம் என்று சொல்லிவிட்டுப் போனான். அந்த நேரம் ஆதம் அங்கே வந்தார். குழந்தை யிருக்கக் கண்டவுடனே இன்னுலில்லாஹி யென்று பதறி உடனே அதை நெருப்பிலிட்டுக் கொழுத்தி சாம்பலாக்கி வாரிக்கொண்டுபோய் தண்ணீரில் கரைத்து விட்டார். ஆதம் போனபிறகு இபுலீசு இரண்டாந் தடவையும் ஹவ்வாவிடம் வந்தான். எ-று

வந்தா னிபுலீசு ஹவ்வாவுடன் வடிவின் பாலன்று னெங்கே யென்றான், மூந்த வகைபோல வெட்டிச் சுட்டு மோசநீரிலே கரைத்தாரென, விந்தாபரென நொடித்தான் கையை யிறந்த பாலன்றான் வந்ததப்போ, திந்தாவெனஹவ்வா கைக்கொடுத்தே யிபுலீசெனும் பாவிபோயினனே. (398)

(இ-ள்):— வந்து எங்கே நான் தந்த குழந்தை என்றான். அதற்கு ஹவ்வா நெருப்பிட்டு நீரில் கரைத்து விட்டார், என்று சொன்னார். இதோ! பார் என்று ஒரு சிட்டிகை தட்டினான். உடனே கன்னாசு அவன் கையின் வழியாக வந்து விட்டான். வந்த குழந்தையை ஹவ்வாவிடம் கொடுத்து விட்டு இபுலீசு போய் விட்டான். எ-று.

போன பின்பு தானுதம் வந்து பெண்ணே யேது காண்பால னென்றார், தானேசலத்திலே வந்ததென்றார் தக்பீர் சொல்லித் தலை யறுத்தே, யேனமதில் வைத்து நீரை யூற்றி யேற்றியனலிலே தான வித்துத், தானும் ஹவ்வாவு மாகவுண்டார் தனக்குச் செய மென்று னிபுலீசனே. (399)

(இ-ள்):— அதன் பிறகு ஆதம் வந்தார். மூன்றாந் தடவையும் குழந்தை யிருக்கக் கண்டார். என்ன ஹவ்வாவே எது குழந்தை என்று கேட்டார். அந்தக் குழந்தைத் தான் தண்ணீரில் நின்றும் முக்குளித்துக் கொண்டு வந்து விட்டது என்று ஜவாபு சொன்னார். அப்பால் ஆதம், அவனை தக்பீர் சொல்லி அறுத்து சட்டியிலிட்டு அவித்து இருவருமாகத் தின்று விட்டார்கள். அதைக் கண்ட இபுலீசு இப்பதான் ஜயகாலம் பிறந்தது, என்று சந்தோஷங் கொண்டாடினான். எ-று.

செயமா முடலுக்குள் மூன்று பங்காய்ச் செனித்துப் பிதா வாதஞ் செய்த குறை, பயமில்லாமலே யகுமறென்ற பாலன்றனைய வாறுத் தருந்த, வுவமையாகவே மூன்று பங்கா யுடலிற்றரித்திடும் வகையை கேளும், வகையா மீரலும் பற்குத்தியும் வழியும் பித்திலும் கலந்ததாலே. (400)

(இ-ள்):— அவ்விதம் உண்ட அகுமறுடைய தேகச்சதை யானது மூன்று வஸ்துக்களுடன் கலந்து விட்டது, அவைகளாவன ஈரல், பல் குத்தி, பித்து இந்த மூன்றிலும் கலந்தது. எ-று.

கலந்த பித்தினிற் கசப்புண்டாச்சுக் கறுப்பு நிறமீரல் பல்லுக் குத்தி, மலர்ந்த வறிவெல்லா மறந்து போச்சு மன்னுமதிலுண்டாம் வகையைக்கேளு, கலந்த விழியாசை பார்வை யெல்லா நாட்டுஞ் செயித்தானின் பங்கதாகு, மலர்ந்த பார்வை தான் சரியே யென்று மதுதான் சடலமன் ணிணைவுமாமே. (401)

(இ-ள்):— பித்தில் கசப்பு உண்டாயிற்று, ஈரலில் கருப்பு நிறம் உண்டாயிற்று. பல்குத்தி சாம்பல் நிறம் உண்டாயிற்று, இவைகளால் பார்வை, கேள்விகளாகிய காமங்களும் ஈரலால் மண் பேரில் உள்ள உலக மயக்கமும், பொய் பித்தலாட்டங்களும் உண்டாயிற்று. எ-று.

நினைவுஞ் சடலமும் பார்வைரண்டு நேரே பொருந்திடிற் கொடுமையாகுங், கனதியாக நீ சோம்புதலுங் கத்தா பெரியவன் உரைத்தபடி, யீனப் பெருபாவஞ் செய்யு மென்று மிபுலீ சனும் பித்தின் பங்கு சொல்லுங், துணிவாய்ச் செய்திடும் பாவமெல்லாந் தொலைக்க வழிசேரத் துணையாய்க் கூடும். (402)

(இ-ள்):— அந்த மண்ணுசை என்கிற நினைவால் உலகத்தின் கொடுமையான பாதகச் செயல்களும் பித்தின் கசப்பால் கோபம் சோம்பல், குடிவெறி, ஜினு முதலிய வெல்லாம் உண்டாகும். எ-று.

கூடுங்குபிரான நெஞ்சு மாறைற் கொலையுங் கொடுமையும் விளையுமதா, ைடுஞ் செயனல்ல நினைவுமானு னமக்குஹறு மென்றே காட்டி வைக்கும், பாடிப்பாடியே யிபுலீசுதான் பதினெண்ணுயிர மாலமட்டு, ஓடியோடியே கெக்கரித்தே யோயாதே சொல்வான் இபுலீசனே. (403)

(இ-ள்):— இன்னும் கொலை களவு, ஆங்காரங்களும் உற்பத்தி யாயிற்று. குபிரியத்துகளும் அதனுல் தான் உண்டாகும். இது கொண்டு இபுலீசு லஅனத்துல்லா பதினெண்ணுயிரம் ஆலங்களிலும் பறந்து கெக்கரை கொட்டி சிரித்தான். எ-று.

இபுலீசு வெங்கும் பறை யடித்தா னெனக்குப் பங்கேழு நபிக்கோர் பங்கு, கவியின் பிழை கண்டே யிறையுரைத்தான் காபிர் குலத்துட னுனது பாலர், புவியிற் றுயர்தீர வழுதேயாதம் புகழு முஹம்மதை விழியிற் காணக், கபியை யிருகையின் பெருவிரலிற் கண்டே யிருமென விறையுரைத்தான். (404)

(இ-ள்):— சிறித்து ஒரு பறை யடித்து எனக்கு இன்ஸானில் ஏழு பங்கிருக்கிறது முஹம்மதுக்கு ஒரு பங்கு தான் இருக்கிறது, நான் தான் வல்லமையில் மிகுத்திருக்கிறேன் என்று சொல்லிக் கொண்டே திரிந்தான். அது கண்டு றப்பு ஆதத்தின் முதுகில் இருந்த ஒளிவை அவருடைய விரலில் பிரட்டி வைத்து ஆதமே

என் ஹபீபின் ஜமாலியத்தை உமதுவிரலில் தெரிசித்துக் கொண்டிரும், என்று கட்டளை யிட்டான். எ-று.

உரைத்த முஹம்மதி னொளியானது மொன்று யாதத்தின் முதுகுதனி, னிறத்தை யிருபங்காய்ப் பிரித்துவல்லோ னேரேகை விரலிரண்டில் வைத்தான், குறித்துவிழிதேய்த்து முத்திக்கொண்டு குர்றத்தாயாஜனி யென்று, வரத்தைப் பொருந்திய ஆதநபி வாழ்ந்து பரிவார நடத்துமப்போ, சிறந்த *வெண்பத்தி ரண்டுஜோடு சேர்ந்தே யாண்பெண்ணாய்ப் பிறந்தனவே. (405)

(இ-ள்.):—விரலில் முஹம்மதின் ஒளிவைக் கண்டு கண்ணில் வைத்து முத்தி யாகுர்றத்துல் ஐனி யென்று சொல்லி முத்தினர். அந்தக்காலத்தில் ஆதமும், ஹவ்வாவும் கூடி எண்பத்திரண்டு ஜோடி குழந்தைகளைப் பெற்றார்கள். எ-று.

பிறந்த தாயிர வருடமட்டும் புவியி லிருந்ததே வயதாயிரஞ், சிறந்த முஹம்மது நபியொளிவு சீது நபியவர் புறத்தில்வர, விருந்த வாதத்தை யுலகுதனி லிட்ட தலமல்லோ கஃபாவுமே, நிறைந்த முஹம்மது நூகுநபி நின்றே யிபுறாஹீம் அலைஹிஸ்ஸலாம். (406)

(இ-ள்.):—அப்படிப் பிறந்த குழந்தைகளுக்கு ஆயிரம் வயதுகளை றப்பு கொடுத்திருந்தான். அப்பால் முஹம்மது நபியவர்களின் ஒளிவானது படிபடியாய் சீது நபியவர்களின் முதுகில் வந்து நின்றது. அவரையும், ஆதத்தையும் மக்கத்துடைய ஸ்தானத்தில் அமைக்கப்பட்டது. அப்பால் அந்த ஒளிவானது நூஹு நபியில் நின்றுந்திரும்பி இபுறாஹீம் நபியவர்களிடத்தில் வந்தது. எ-று.

ஆன விசுமாயி சுருவிழியில் அப்துல்லா நெற்றி முத்தொளி வாய், மான நிறைந்திடு முலகமாதா மங்கை யாமினு ரீன்றபாலர், தானு மனுரூப மெடுத்தார்நபி தாத்துஞ் சிபாத்துவுஞ் சாற்றக்கேளு, மானவுருவாதம் ரூபங்காண வாத முடலிலே தரித்ததெல்லாம்.

(இ-ள்.):—அப்பால் அந்த ஒளிவானது இஸ்மாயீல் நபியவர்களின் நெற்றியில் வந்து படிபடியாகத் திரும்பி அப்துல்லாவுடைய நெற்றியில் நின்றும் ஐம்பத்தொரு தலை முறையாயிற்று. அப்பால்

*எண்பத்தி ரண்டுஜோடு என்ற மொழியைப் பிரித்து எண் கணக்கென்றும் பத்துரண்டு ஜோடென்றது இருபது ஜோடி யென்றும் பொருட்படுத்துக.

பூலோக மாதாவாகிய ஆமினு அம்மா அவர்களின் கெற்பத்தில் வந்து நிரம்பி நமது நபிநாயகம் அவர்கள் மனுஷவதாரம் செய்தார்கள். அப்போதே தாத்தும், சிபாத்தும் ஒன்று பட்டது. எ-று.

தரித்த விருபத்து நாலெழுத்துத் தரிக்கு மெழுத்துக்கோர் சிபாத்துமாகு, நிலத்திற் கண்ணுடி நிழலில்லாம னீண்ட முடிகாணு மறுஷின்மேலே, யொருத்த ரறியாரே மலஞ்சலத்தை யுடலிற் புழுப்பூச்சியொட்டாதங்கந், தலத்தி லடிதோயார் பொய்யுரையார் தருத்த ருவிலே தரிக்கும்பாதம். (408)

(இ-ள்.):—தாத்தும் சிபத்திலும் உள்ள இருபத்து நான்கு அட்சரங்களின் தத்துவங்களாலே நபியவர்களின் சிரசானது, அறுஷின் மேலாகவும், சரீர நிழல் பூமியில் விழாமலும், மலஞ் ஜலாதிகளை மனிதர் கண்கள் காணமலும், சரீரத்தில்யாதொரு ஈ எறும்பு, ஜெந்துக்கள் ஒட்டாமலும், பூமியில் பாதந்தோயாமலும், தருத்தருவில் பாதம் பதியவும், பொய் உரையாத துய்தானவர் களாகவும், ஆக இருந்தார்கள். எ-று.

தரிக்கு மேகங்கள் குடைநிழற்றுந் தாபங்களை யோட்டும் வருத்தமில்லைச், சிரசிற் றரித்திடு நுபூவத்தாகுஞ் சிறந்த வுடலெல் லாமி லாஞ்சனையாங், கருத்திற் பெருமையுங் கறும்பகீனுங் கபடுங் கோபமுங் காணர்நபி, வொருத்த ரறியாமல் கத்தனுச்செய்தோ ரொருநாளசதியு மறதியில்லை, கருத்தா விருகண்ணு முன்பின் காணுங் கஸ்தூரிவாசங் காதம்வீசும். (409)

(இ-ள்.):—இன்னும் அவர்களுக்கு மேகமானது குடை பிடித்தது, சிரசில் நபித்தனத்தின் முத்திராங்கம் என்னும் நுபுவத்து தோள் மட்டும் பிரகாசித்தது, சரீரமெல்லாம் இலாஞ்சனை என்னும் தீர்க்கதரிசின ஆபரணங்கள் திகழ்ந்தது, மனதில் பெருமை, கெட்ட எண்ணங்கள், ஈயாக்குணம், கபடு, கோபம் இவை ஒன்றும் வந்து ஊசாடினவே கிடையாது; அவர்கள் பிறக்கும்போதே கத்னு என்னும் விருத்த சேதனம் செய்திருந்தது, அவர்கள் ஜீவியபரி யந்தம் ஒரு நாளாகிலும், அசதி, மறதிகள் வந்ததே கிடையாது; அவர்கள் பின்புறம் பார்த்தாலும் முகம்மானதுதெரிந்தது; உடலில் கஸ்தூரி வாசனை காத காத வழிவரையிலும் வீசிக்கமழ்ந்தது. எ-று.

வீசும் பரிமள மழகு நபி வெடித்த சிரிப்பொன்றுஞ் சிரித்தாரில்லைத், தேச மனுப்போல வுருத்தெரியுந் தெரிந்த வுருவெல்லாவுடலோவில்லை, நேசமுடன்மூடி நபியின்ரோம நிலத்திற் களைந்தவரொருவரில்லை, பேசு வறுநான்கு சிபத்ததாகப் பெரியோன் முஹம்மது நபியாகுமே. (410)

(இ-ள்):— இன்னும் அவர்கள் ஒரு நாளாவது சிரித்ததும் இல்லை. அவர்கள் சரீரத்தை ஒருவர் உற்றுப்பார்க்கும் போது இல்லாமல் மறைந்தது, அவர்களின் தலை உரோமங்கள் பிறந்த அன்று இருந்ததைப்போல் நிர்யாண திசை வரையிலும் ஒரே நிதானமாக இருந்தது, இவ்விதம் இருபத்து நாலு சிபத்தும் கூடி நபி முஹம்மதாக வந்தார்கள். எ-று.

பொருட்பால் முற்றிற்று. ஆக பாடல்-410.

---

3-வது.

## காமப்பால்.

### நவகாமமறியும் வகை

நபியை யுலகத்தி லமைத்திலேயேல் நமது பதியேது காமமேது, புவியுஞ் சகலது நபியாலேதான் பொங்கு முயிர் கடலிருந்ததெல்லாம், புவியிற் பலபல வுயிர்முளைக்கப் புருடர் தெரிவையாயிருப்பதெல்லாம், தவியா நவகாமந் தனையறிந்தாற் றன்னை யறிந்தவர் தானாகுமே. (411)

(இ-ள்):— முஹம்மது நபியவர்களைப் படைக்காத பட்சத்தில் இந்த உலகங்கள் ஏது? உயிர்களின் பேரேது? ஆனதால் உலகத்தில் சரீரமெடுத்து வந்த ஜீவாதிகள் ஒவ்வொன்றும் நவகாமம் என்கிற ஒன்பது இந்திரியங்களால் தான் அவதரித்து வந்திருக்கிறது. அந்த ஒன்பது காமங்களையும் அறிந்தவன் றப்பையும் அறிவான். எ-று.

தன்னை நிகரில்லா வாதிநாயன் றாணி யமைக்குமுன்னிருளறையிலுன்னி யெழுந்துதா னுக்தலிபா யொளிவு திரண்டதே முதற் காமபால், வன்ன மிலங்கிய விந்துநாதம் வைரத் திரளை வெண்டரளமாகப், பின்னு மொளிவதிற் சுடராய்விந்து பிறந்த கடலொன்று மிருகாமப்பால். (412)

(இ-ள்):— அல்லாஹுத் தஆலா ஆதியில் குன்தகன்ஸுல் மகுபியாவில் இருளாக மறைந்திருந்து அப்பால் தாத்தளவில் திரும்பி நுக்தாவாகி யதில்நின்றும் அலிபாகி ஒளிவானதே அது தான் முதலாவது காமமாகவிருக்கும். அப்பால் அந்த ஒளிவானது விந்து நாதமாகி முத்தாகி ஹயாத்துல் கைபார் கடலானதே, அது தான் இரண்டாவது காமமாக இருக்கும். எ-று.

பாலி லொருகாமம் பகுத்தனைந்தும் பரிவா யொருகாமமிரு பங்காக, வேலைச் சுடர்காம மூன்று மொன்றாய் விளம்பு லிங்கமாம் காமமூன்றும், பாலன் றனையடி தனிலிருத்திப் பார்க்க வொளி வேர்வை விந்து முத்தாய்க், காமக் கடலதி லுறைந்திருந்த கதையாங் காமப்பா ஞதமாமே. (413)

(இ-ள்):— அவ்விதம் அலிபானது, அலிபு, லாம், மீம், ஆகி அதுவே முத்து, பவளம், பச்சையாகிய முச்சுடரில் வந்து நின்றதே, அதுவே மூன்ருவது காமமாக இருக்கும். அந்த முச்சுடர் பின்னல் அல்லா, முஹம்மது, ஆதமாக மீண்டதே அதுவே நாலாவது காமமாக இருக்கும். எ-று.

நாலா விதத்தினு லொருகனியை நாடி மயிலுண்ண மரத்தின் கீழே, பாலாங் கிணற்றிலே யைந்துமுத்துப் பார்த்து மயிலுண்ண பதுங்கவொன்று, நாலு மயிலுண்ட தன்றேயீன நாலு திசை காகங் கூகையாந்தை, மேலு மிராஜாளி மயில்நடுவி லிதுதான் காமப் பாலைந்தாகுமே. (414)

(இ-ள்):— அப்பால் றப்பு தன் ஆசையால் ஒரு பார்வை பார்க்க அதனல் மயிலுண்டாகி அது எகின் மரத்தில் இருந்து கனி தின்ன அப்பால் அது நாலு முத்துகளையும் தின்று, நான்குமுட்டை யிட்டு காகம், ஆந்தை கூகை, இராஜாளியான குஞ்சுகளைப் பொறித்ததே அதுவே ஐந்தாவது காமமாக இருக்கும். எ-று.

ஆகந் துணுக்கிடா மயிலன்னமா யந்த ஜெபருத்தி லாடும் போதி, லேகன் கிருபையா லிணங்கினேக்கி யெங்குஞ் சுடர்காம மிறங்கிவித்தாய், வாகு பெறவன்னந் தனியகாம மதுதான் காமப் பாலாருமின்ன, மேக ஞெளிவினல் நடுங்கியன்ன மெங்குஞ் சலமாக வெழுந்தவேர்வை. (415)

(இ-ள்):— அவ்வித மிருந்த மயிலானது ஜபமுரத்தில் வந்து அன்னப்பட்சியாக ஆடி நின்றதே, அது தான் ஆறுவது காமமாக இருக்கும். எ-று.

வேர்த்துப் பாற்கடற் சேர்ந்தது தான் விளங்குங் காமப் பாலேழதாகும், பாத்திர மான கடனீர் தன்னைப் பருகு மங்குலம் பார்தனிலே, நேத்திரியாய்ப் பெற்ற வத்தனையு நிலையாங் காமப்பாலிரு நான்கிது, வேத்தமாகவே யெழுந்தவாரி யெல்லாம் படைப்புக்கு மிரணமாச்சே. (416)

(இ-ள்):— அப்பால் அந்த அன்னத்தை, மப்பு உலுக்கிப் பார்க்க அதன் சரீரம் வியர்த்து பால் கடலாகத் திரண்டதே அது ஏழாவது காமமாக இருக்கும். அந்தக் கடலால் மேகங்கள் உற்பத்தியாகி, பால் முழுதும் அள்ளிக் குடித்ததே அது தான் எட்டாவது காமமாக இருக்கும். எ-று.

இரண வகை யென்ற கனிதசையு மிலையுங் காயைந்து மிது நிறைபத், தருணம் வகையருத்தத்துவாமிர் தந்தசைரத்தம் விளைந்த நாதம், வர்ண மெவ்வுயி ருபநாதம் வருந்தி யிணக்கத்தி லெழுந்த நாதந், தருணம் பலவுயி ரெழுந்தநாதந் தசுபீகுநிலை நவகாமமே. ( )

(இ-ள்):— அந்த மேகங் கருக்கூடி பொழிய எல்லா உயிர் களுக்கும் அது இரணங்களாயிற்றே அதனுல் உலகதத்துவ இந்திரியங் களும், பிர்மதத்துவ இந்திரியங்களும், பூத கோடிகளும் உற்பத்தி யானது தான், ஒன்பதாவது காமமாக இருக்கும். எ-று.

இதமாநவகாம வெல்லாருக்கு மிருநான்கி நாமமெழுதினதால், விதமாம் வைரம் பொன் பச்சைமுத்து விருட்சம் புற்பூடு பல தானிய, இ த ம ா ய் நிறைந்ததே யொன்றேடொன்று நீதியுதிரமாய்த் தினிலாச்சுப், பதமாங் குருதி நீர் வித்தாம் வாறும் பாங்கா யுலகெல்லா மறியச் சொன்னேன். (418)

(இ-ள்):— எல்லா ஜனங்களும் அறிய வேண்டியது கடமை யாகவே இருக்கிறது. உலக வாசிகள் அறியும் படியாக அதன் முழுக் கருத்தையும் அநந்தம் தானங்களில் விபரப் படுத்திக் கொண்டு வந்து விட்டேன். எ-று.

சொன்னேன் மூவைந்து இணையத்தையுஞ் சூழ்ந்த உலகு, பல்லுயிரனைத்து, முண்ணு மமுதுடன் பாலுசெய்யு முண்பா

ருலகத்தி னுகையமாக வானும் பெண்ணுமாய்ப் பிரியும் வகை யறியாருலகத்தின் முழுமூடராம், பூணு மிரசனைதான் றொண்டை மட்டும் போனாற் குவைவதைப் புகலக்கேளே. (419)

(இ-ள்):— ஆதியில் நான் சொன்ன கனுஅத்துப் பதினைந்து எழுத்தால் தான் உலகத்தார்கள் அறுசுவையான உண்டிகளைத் தின்கிறார்கள். இதன் விபரம் நல்ல உணர்ச்சியின் மேலே தான் தெரியவரும். உலகத்தில் ஜீவராசிகள், ஆணும் பெண்ணுமாக இருக்கிற சூட்சியை அறியாத மனிதர்களும், பெரிய மூடர்களாக இருப்பார்கள். எ-று.

புகலக்கேளுமே ரசனை யெல்லாம் பொசிக்கும் வாயினில் இருக்கும் போது, சகல ரசனையு மேனுக்குத் தான் ருவியமிர்தத்தை உயரவேற்றிப், பகலு மிரவிலாத் தலத்தனிலே பளிங்கிச் சுடரைப் பார்த்தீயும் போதி, லகலா ரசனைய தனைத்துஞ்சுட ரமுதமாகவே யருந்துந்தானே. (420)

(இ-ள்):— நாம் தின்கின்ற ஆகாரங்களின் உருஷி தொண்டைக்கு கீழ் போன உடன் ரசனை மாறிப் போகும் வகையின் கருத்து என்ன? அதைச் சொல்லுகிறேன். எப்படியானுல் கல்பு உருஷியை அதன் தானமாகிய மகாமன் மகுமுதில் வைத்து கிருஹித்துக் கொள்கிறது. சிரசின் குழாய்களுக்குள் சென்றதும் பூதங்கள் நினைவுடன் சம்மந்தப்பட்டு அவைகளை இரண்டாமுறை அமிர்தமாக்கி அருந்தி விடுகிறது. அதனால் தான் தொண்டைக்கு கீழ் போனால் நம்மதல்ல. எ-று.

அருந்த இருவிழி நடுமுகத்தி லணிந்த வொளிவதின் சுடரெழுப்பிச், சிவந்த நுக்கத்தலி பாகும் பார்வை செப்பிடா ரிதைச் செப்பினேனே, திருந்த ஊண்சுக மெல்லா மென்பார் தீனுஞ் சுகமவனல்லாதில்லை, நிறைந்த வுடலுக்குட் சென்ற தெல்லா நெருக்கியேகுடற் பிரிக்கும்ரண்டாய். (421)

(இ-ள்):— இருபுருவத்துக்கும் நடுவே நமது ஆத்மா என்கிற ஒளிவு இருக்கிறது. அந்த ஒளிவே, தீன்களின் ரசனைகளைத் தின்று மற்ற எண்பத்தீராயிரம் தத்துவ கருவிகளுக்கும் அதன் சத்தைக் கொடுக்கின்றது. இதை உலகத்தார்களுக்குச் சொல்லப்படாது, ஞானிகள் கவனிக்க வேண்டும். இந்தக் கோட்

பாடாலே றப்பு அநுபவிக்காத சுகம் இன்லானில் ஏதுவுங் கிடையாது. எ-று.

பிரிக்கு மசலத்தை யிருபங்காகப் பூனுஞ் சார்வேறு சக்கை வேருய்ச், சிறக்கு மினிப்புள்ள ரசனேயெல்லாஞ் செந்தாமறையுள்ளே பதிவுமாகு, முரைப்புங் கடுமையு நுரையீரற்கா முப்பும் புளிப்பது மீரற்காகும், விரைப்பாங் கசப்பெல்லாம் பித்துக்காகும் வெகு வாயிலேப்பொல்லா மண்ணுக்காகும். (422)

(இ-ள்):—இதன் விபரங்கள் எப்படி என்ருலோ! சொல்கிறேன் உலகத்தின் சாமான்ய ஜனங்களே கேளுங்கள். அந்த ஒளிவு அனுபவித்தபிறகு மற்ற ரசனேகளே சார்வேறு சக்கை வேருகப்பிரித்து இனிப்புள்ள ரசனேகளே யெல்லாம் இருதயத்தாமரை குடிக்கும். உறப்புகளே நுரையீரல் அனுபவிக்கும், உப்பு புளிப்புகளே இரத்த ஈரல் அனுபவிக்கும், கசப்பு வகைருக்களேப்பித்து அனுபவிக்கும், இலப்புதுவர்ப்புகளே மண்ணீரல் அனுபவிக்கிறது. எ-று.

ஆகும் விதமைந்து பங்கொன்றுக்கு மந்தத் தலத்தினி லுதிரம் பூரித், தாகு முடலெல்லா நரம்பினுலே தானே யுதிரத்தாற்றமையு மாகி, யேகுந் தசையதிற் கொழுப்புமீறி யேறிச் சிரத்திலே மூளேயாகி, வாறு பெறு மூளே யுருகிவிந்தாய் வடியும் பிடரியினரம் பினுலே. (423)

(இ-ள்):—ஆகிய இந்த ஐந்து வீடுகளில் சென்று அநுபவிக்கப்பட்ட ரசனேகள் அந்தந்த பூதவாசலிலேயே இரத்தங்கள் திரண்டு நரம்புக்கால்வாய்களின் வழியாக வோடி, சதையாகி கொழுப்பு உண்டாகி, சிரசு மண்டலத்தின் ரஸ்தாவில் சென்று மூளேயாகி, அப்பால் அந்த மூளேயானது, இருதய நீனேவால் உருகிப் பிடறியின் வழியாக ஒழுவதே விந்தாகும். எ-று.

நரம்பால் வடிவது விந்துமாகு நயந்த அசனத்தி லின்னம் பாதி, விரும்பி யெழுந்தது மூலந்தன்னில் வெந்து நீரெல்லா மூல முண்டு, கரும்பு ரசனேயுஞ் சக்கைபோலே களரு மாமங்குகளிச் சலெல்லாம், விரும்பி யுண்டது மூலஞ்சேர்ந்து வெந்த வயனீரைச் சிறு நீர் சொன்னேன். (424)

(இ-ள்):—சுவையின் தத்துவ மிப்படி இருக்க சக்கையின் தத்துவமாவது, மூலமென்கிற புடலத்தில் கிடந்து வெந்து கரும்பாலேயில் சக்கை மசைவதுபோல மசைந்து அதன் வழியாகக் கொப்பளித்து ஓடிவருவதுதான் மூத்திரம் ஆக இருக்கும். எ-று.

*சொன்னே ஞலிந்தாஞ் சோதிநாதன் சொன்ன முன்சோதி யதனில் வெந்து, வெண்ணை யுருகிநெய் சிவந்துநிற்கு மேனிச் சுடரதின் மூச்சுமாக, வுன்னிச் சுடருந்தான் கிருபைபொங்கி யொளிவு உடலெல்லா மோசையாகிக், கண்ணின் மணிநடு முகந்தனிலே காணு மொளிவந்தப் பெரியவனே.* (425)

*(இ-ள்):—இவ்விதம் ஒன்பது இந்திரியங்களின் வெளிச்சத்தால் நாத விந்தானது சுவாசப்பலனுடன் நிற்கின்றது. அந்த சுவாசத்தின் பலத்தால் ஆத்ம ஒளிவானது இரண்டு நேத்திரத்துக்கும் நடுவே நின்று பிரகாசிக்கிறது. அதுவே றப்பாக யிருக்கும்.* எ-று.

*அந்தப் பெரியவன் றலந்தனிலே யாதி பெரியவ னுசையானுற், சந்தைப் பெருமொலி போன்முழங்குஞ் சத்தயாறஹீ மென்று சொல்லி, யுந்திக் கமலங்கீழ் மூலந்தனி லுற்ற முஹம்மது நபி யொளிவு, எந்த வகைநாய னென்னிறையே யாபக்கல்லாவென் றியம் புந்தானே.* (426)

*(இ-ள்):— றப்புடைய மகாமில் ஒளிவுங்கூடினுல் "யா அல்லாஹ்" என்ற சப்தம் முழங்கும். முஹம்மதிய்யத்தான ஒளிவானது உந்திக் கமல வட்டத்தின் தானத்தில் நின்றும் அந்த பரம றப்பை, யாறப்புக்கும் அல்லா என்று திக்று செய்யும்.* எ-று.

*இயம்புமொளிரண்டு மாசையானு லிணையும் பார்வையு மிரண்டு மொன்று, மியங்கத் தழுவிடு மிருபார்வையு மெரியுங் கிருபையா லுருகிமூளைத், தயங்கி டாமலே பின்றளர்ந்த தாரைநரம்பினுலிறங்கு நாத, மயங்கி டாச்சுடர் மூலந்தனின் மண்ணு தம்ஹவ்வாவொளிவு மாமே.* (427)

*(இ-ள்):— அந்த இரண்டு ஒளிவுகளும் ஒன்று கூடினுல் நேத்ரத்துக்குப் பார்வையின் சக்தியை உண்டு பண்ணும். அப்போது ஆதம் ஹவ்வா உடைய ஒளிவானது அவைகளுக்குத் தொண்டுத் தனஞ்செய்யும்.* எ-று.

*ஒளிவி னுதந்தா னிரவிபாக மோதும் யாதாபி மென்று சொல்லிச், சுழியின் மதிபாகம் ஹவ்வாசுடர் சொல்லும் யாக்காயி மென்று சொல்லி, யெளிரு மிருசுடர் கிருபை பொங்கி யொன்று யிணங்கிடு மாசையாலே, குழியி லீசுரன் றலந்தனிலே குதித்து விந்து கீழிறங்கி நிற்கும்.* (428)

(இ-ள்):— அவைகளில் ஆதமுடைய ஒளிவு சூரிய கலையாக வும், ஹவ்வாவுடைய ஒளிவு சந்திர கலையாகவும் பிரிந்தோடுகிறது. சூரியகலை யாதாயிம் என்றும், சந்திரகலை யாகாயிம் என்றும் திக்றுசெய்து ஓடும். அந்த இருகலைகளும் கூடி ஆசையாகி இன்ஸானுடைய விந்தானது உருகி வழியும். எ-று.

இறங்கித் தரித்திடுஞ் சிவந்தநாத மெரியுஞ் சூட்டினு லியங்கி வெள்ளை, யுறங்கும் வீடுதான் தாரையாகு முரைக்குஞ் சுளிமுனை தியதுதான், றிறங்கொள் வலக்கலை யதற்குமானத் தீங்குவிடக்கலை யதற்குவிடங், குறையு மீனெனுஞ் சிறக்குமென்றுங் கூறுங் கலையுடகுணமாகுமே. (429)

(இ-ள்):— வழியும் விந்தானது சிவப்பு ரெங்காக இருந்து, சுழிமுனையாகிய புடத்தில் இறங்கின உடனே வெந்து வெள்ளை நிறங்கொண்டு குதிக்கும். அப்படி குதித்த நாதம் வடகலை பின்கலை களென்னும் சுவாசங்களால் மணியாகித்திரளும். எ-று.

ஆன காமப்பா னுதிரவீட்டி லணுப்போ லடங்கிய அட்ட கோணம், பூணுஞ் சிரத்திலே தரிக்குமுயிர் பொருந்துங் குணமேழு கோணமதின், றுனே வலம்புரி நிலையதற்குத் தைய லிடம்புரி தரித்தகோண, மூணுங் குதறத்தைச் சேர்ந்தவகை யுயரம் போயினு லிரணவகை. (430)

(இ-ள்):— மேலே சொன்ன காமங்கள் ஒன்பதும், இரத்தக் கடலில் வந்து விளைந்து எட்டு கோணங்களாக ஓடி வலம்புரிக்குள் நுழைந்து, நாதமாகி அப்பால் கீதம்பாடி அப்பால் இடம்புரியில் வந்து முக்கால கிரஹ வசங்கள் எல்லாம் அமைக்கப்பட்டு, குதுறத் துடைய மகாமில் வந்து இரண வகைகள் கற்பிக்கப்பட்டு நிற்கும். எ-று.

இரணத் தரிப்பது மூன்று திசை யிளமையழகெல்லா மனையு நாலிற், றுருணம் பலாபலன் யோகஞானத் தரிக்கும் விதமெல்லா மைந்தாங்கொம்பு, வர்ணத் துன்பமுந் துயர வீரம் வகையாய்த் தரித்திடுமாறுங்கொம்பின், வர்ணம் பெரும்பிணி படும்பாடெல்லா மதிப்பாய்த் தரித்திடுமேழாங்கொம்பில். (431)

(இ-ள்):— இரணத் கற்பிப்பது மூன்றுங்கொம்பு அழகு வயதுகள் ஏற்படுவது நாலாம் கொம்பு, ஞானம், பலாபலன் கல்வி

இவைகள் ஏற்படுவது ஐந்தாம் கொம்பு. துன்பம், இன்பம், வீரம் தனம், பிணி, மூப்பு, இவைகள் ஏற்படுவது ஆறுங்கொம்பு திரும்பிணி, அதிர்ஷ்டம், ஆயுசு, இவைகள் எல்லாம் ஏற்படுவது ஏழாங்கொம்பாக இருக்கும்: எ-று.

கொம்பி லிருநான்கி னகத்தில் நிற்குங் கோலந் திரையெட்டும் பொருந்துமப்போ, நின்பங் குதறத்து மெட்டுமிதே யின்னங் குதறத்துப் பதினெட்டுத்தா, னன்பா புலகத்திற் பிறக்கும்போதி லன்றே தரிக்கிடு மமுமூன்றுந்தான், தும்பி யுருவத்திற் றரித்த நாதங் கோலவுருவந்தைக் கூறக்கேனே. (432)

(இ-ள்):— மனதில் வந்து வசாடுகிற உலக மாயைகள் நான் எட்டாம் கொம்பாக இருக்கும். இன்னும் ஒன்பதாங் கொம்பாகிறது குதுறத்து பதினெட்டும், உலகத்திற் பிறக்கும்போது நடந்த சில கருமங்களுமாக இருக்கும். இனி நாதங்களுடைய கோலத்தைச் சொல்கிறேன். எ-று.

கூறு மிருநான்காந் தரித்தநாதங் கோதையுதிரமுங் கொழுகி யொன்றாய்ப், பாறு நுக்கத்தின் பூனேத்தமாம் பச்சைப் பவளம் வெண் டாளபான, வாறுங் குதாயோடு நபியும்ஆத மத்த விருளப்போ அஜாசிலாகு, நூறென்ற நூனும் றாகும் வெள்ளை நுக்கத்துச் சுழிமுனை அலிபானதே. (433)

(இ-ள்):— எட்டு இந்திரியங்களாக உற்பத்தியான உதிரமானது ஒன்று சேர்த்து நுக்கத்து என்கிற மாமானது முத்து, பச்சை, பவளம் ஆகி அல்லா, முஹம்மது, ஆதம் ஆகி இருளானது அஜாஸிலாகி, நூனனது ஆத்மாவாகிய ஒளிவு நுக்கத்து அலிபு சுழி முனையாயிற்று. எ-று.

அலிபில் வைரந்தா னுதிபங்கா மத்த நடுநிலையிருபாகமுங், கலிமா முஹம்மது சிவந்த சுடர் காணுமக்காமன் மகுமூதுமா, மொலியா முஹம்மது கலிமாவினு அருப மிருபத்து காலெழுத்துப் பலிதமாம் பச்சை யாதமென்னும் பாரு மருபத்தை ரூபமென்றே.

(இ-ள்):— அலிபில் வைரம் உற்பத்தியாகி அது அல்லா உடைய சிபத்தில் உள்ளது. இடம், இருதயக்கமலமாகும். முஹம்மதாகிறது, கலிமாவில் செவந்த ஒளிவு. இடம், மகாமன் மகுமூதாக

இருக்கும். அது கலிமா இருபத்து நாலு அட்சர ரூபமாக இருக்கிறது. ஆதம் அருவமாயிருந்து உருவமாயிற்று. எ-று.

உருவஞ் சுடர்மூன்றி லெழுந்தவாறு மூயிரும் பரம்பொருள் விந்துநாத, முருகிச் சுழிமுனை நுக்கத்தலிபா மொளிவு பதினாலங் குலமுநீண்டு, அருவம் அன்போடு லாமுமீமும் அதுமேல் குன்னென்றவைந் தெழுத்துஞ், சுரூப முகப்பத்து பயக்கூனென்று சொன்னேன் பதினாலு எழுத்துமாகும். (435)

(இ-ள்.):— உருவமான, மூன்று சுடர்களும் ஒன்றுகூடி விந்துநாத வடிவானது உருவமான சுழி முனையாகி, நுகத்து, அலிபு ஆகி, அது பதினான்கு அங்குலம் நீண்டும் முஹப்பத்துக் கொண்டு லாமும், மீமும், கூடி குன்பயக்கூனுமாக பதினான்கு அட்சரங்களாயிற்று. எ-று.

பதினாலெழுத்தொன்று யிணங்கிநின்று பாற்கு மாகாய நிலையனின்றே, இதன் கீழறுகோண வாய்வுமாக வெழுந்து சீனென்ற அகாரநிலை, யதிலே சிகாரமென்றெழுந்தஹேயா மக்கினி மூன்று திசையுமாகு, மதிலே யிருகோண மகாரமீமா மண்ணும் சுகாரத் துருவுகாலே. (436)

(இ-ள்.):— இந்தப்பதினான்கு எழுத்துகளும் ஒன்றுபட்டு, ஆகாய ரூபத்தில் எழுந்து நின்றது. அதன் கீழ் காற்றானது ஆறு கோண வடிவமாக உலாவி நிற்கின்றது. சீன் என்கிற அகாரமும் சிகாரமென்கிற ஹேயும் அக்கினியாக மூன்று திசையாக வட்ட மிட்டது. அதில் பூமியானது, மகாரம் என்கிற மீமாக நாலு உருவமாயிற்று. எ-று.

நாலு மதலையு மீன்றபிதா நாம முழங்கிய பெருவெளியாம், காபக் கபுசைனி யென்னுமது கண்ணு மணியல்லா தின்ன முண்டோ, பாலன் ரூபமாய்ப் பிறக்கும் வகை பலதுங் கலிமா வினிலையுங்கேளும், ஆலகபிபங்கும் அல்லாபங்கு மறுநான்கிருபத்து காலெழுத்தே. (437)

(இ-ள்.):—இந்த நாலுதிசை ஸ்தம்பங்களையும், பெற்ற மாதாவானது, வானுக்கும், பூமிக்கும் இடைநடுவாகிய பெரிய வெளியாக இருக்கிறது. அது எது வென்றால் காப கௌஸைனி என்னும் ஸ்தலமாக இருக்கிறது, அதானது, நமது கண்கள்

இரண்டிலுந் தெரிகிற ஒளிவு என்கிற பார்ப்பாவாகா இருக்கும். அதானது, அல்லாவுடைய பங்கும், முஹம்மதுடைய பங்குமாகிய கலிமாவாக இருக்கும். எ-று.

இருபத்து நாலுயிரெழுத்தா யியம்பும் பனிரண் டெழுத்தைக் கேளும். அருபரூபமாய்ப் பொருந்தி நின்ற வாதிமுஹம்மது நாலெழுத்துச், சுரூபமானது அரூபந்தானே சூலென்றெழுந்தது மூன்றினலே, பெரிய வுடலுக்குண் மூலாதாரம் பிசகா திருத்தியே பாரக்கோட்டை. (438)

(இ-ள்.):—இது இருபத்து நாலு உயிர் எழுத்தாக இருக்கிறது. இதில் பனிரண்டு எழுத்துக்களைப் பற்றிய விபரம் சொல்கிறேன். அரூபமாக நின்ற சுரூபமாகிய முஹம்மதென்கிறது, நாலெழுத்து சொரூபமாகிய அருவமான றஸூல் என்கிறது மூன்றெழுத்து. இவைகள் இந்த சரீரத்தில் மூலாதாரம் என்கிற கோட்டையாயிற்று. எ-று.

கோட்டைக்கு வாச லாலுமுண்டுங் கொழுந்து புகைத்தீயா யெரியுமதிற், சூட்டிக் கலிமாவின் முஹம்மதுர் றஸூலைநீக்கியே அல்லாவென்றூர், பாட்டி னுரைத்திடு மெழுத்துமூன்றும் பத்தி யுடலினிற் சிரமதாச்சு, தேட்டி லெழுதினேன் பத்தெழுத்தை யின்ன முறைக்கிறே னெழுத்திரண்டை. (439)

(இ-ள்.):—அந்தக் கோட்டைக்கு வாசல் நான்கு உண்டு. அதில் நெருப்பும் புகையுமாக கொழுந்து விட்டு எரிந்து கொண்டே இருக்கும். இன்னும் றஸூலுக்குப் பிறகு அல்லாஹ் என்பது மூன்றெழுத்து அது சரீரத்தில் சிரசாக இருக்கிறது. இன்னும் இரண்டு எழுத்தின் விபரம் சொல்கிறேன். எ-று.

எழுத்திரண்டது விபரங்கேளு மெல்லா வெழுத்துக்குங்கடை யெழுத்து, முழுத்தமாகிய முஹம்மதுர் றஸூலுல்லாஹி என்றுரைக்கும் ஹேயாஞ், சுழித்த ஹேமூலக் குகையினிற்குஞ் சொல்லுவேனினித் துலக்கமாகச், சுழற்றிக் கலிமாவில் முஹம்மதுர் றஸூலென்றுரைப்பதில் நிற்கும்ஹேயாய். (440)

(இ-ள்.):— அந்த இரண்டெழுத்தாகிறது முஹம்மதுர் றஸூலுல்லாஹி என்பதில் கடைசியில் வருகின்ற ஹேயும்,

றஸூலுல்லா என்பதில் முன் வருகிற றேயுமாக இருக்கும். றேயானது மூலக்குகையாயிற்று. எ-று.

றேயைப் பிரித்துத்தா னிருபங்காகத் திரேகந் தனிலிருமாங்கா யென்று, வாயேயொருமாங்காய் வலதுபக்க மணியுமாங்காயோரிடப் புறமாம், ஆயும் றேமாங்கா யெனுமதனி லசதிமறதி கொட்டாவி விக்கல், நோயும் பலவகை யதற்குள்ளாகு நுவலுவேனிடப் பிறத்தின்காயே. (441)

(இ-ள்):—றேயானது இந்த சரீரம் என்னும் விருக்ஷத்தின் மாங்காயாக இருக்கிறது. அது இரண்டு வகையாக இருக்கும். ஒன்று வலது பக்கத்திலும், மற்றொன்று இடதுபக்கத்திலும் இருக்கிறது. வலது புறத்தின் மாங்காயால் அசதி, மறதி, கொட்டாவி, விக்கல் முதலான பல குணங்களும் உண்டாகின்றன. இடது புறத்து மாங்காயால். எ-று.

காயிற்குடி கொண்ட நித்திரையாங் கறுப்பு நிறமுள்ளே கலந்திருக்கும்; ஆயு மெழுத்தது அல்ஹம்தென்றால் அறியு மெழுத்தது வைந்துமாகும்; வாய்வு நெருப்பு நீர் புவியதாகும் வகையு மெழுத்தைந்த தானவாறுங், காயி லாக்கனியாங்கலிமாக் கலந்தவகையையு முரைக்குகிறேன். (442)

(இ-ள்.):—அந்த மாங்காயானது கறியநிறமாக இருக்கிறது. அதனால் நித்திரை, சோம்பல் முதலான பல குணங்களும் உண்டா கின்றன. இனி அல்ஹம் தென்கிற எழுத்து ஐந்தானது. அந்த ஐந்தும் காற்று, நெருப்பு, ஆகாயம், தண்ணீர், மண்ணென்கிற ஐந்து பூதங்களாகும். இனி கலிமாவில் காயில்லாக்கனி என்கிற விபரம் சொல்கிறேன். எ-று.

உரைக்கு முடலின் மண்ணாலுதிசை யுருவமெழுந்தது பல்லுக்குத்தி, ஷறுத்தி னதின்பேரும் அம்மாராதான் தரித்த வெழுத்ததில் காலுமாகு, நிறத்தஜீ புரீயி லிருப்பிடமா நிறமும் வெள்ளையாம் பொறப்ரகாசஞ், சிறந்த பேச்சுட வீடுமாகுஞ் செப்பும் வாயினாலு ரைப்பதுவே. (443)

(இ-ள்.):—இந்த சரீரத்தில் மண்ணானது நாலுதிசையாக இருக்கிறது. அதானது பல்லுக்குத்தியாகும். அதன் பேராகிறது அம்மாறுவாக இருக்கும், இதுநாலு அட்சரமாகின்றன. அதற்கு

அதிகாரி ஜிபுரீல், நிறமானது வெள்ளையாகின்றது. அது பேசுகின்ற வீடாகிய வாயாக இருக்கும். எ-று.

உரைத்த வகையான பத்துமிஃதொன்று மக்காமிதென் றறிய வேண்டும், நிரைத்த ஈரலிற் சிவந்தநீராய் நிற்குமே கோண மெழுத்துமீமாஞ், சிறந்த மீக்காயீ லிருப்பிடமாஞ் சேர்த்தரசனையு முப்புங்கைப்பாங், குறைந்திடாவிழிப் பார்வையாகுங் கூறும்லெவ்வாமத்தின் பேறுமாமே. (444)

(இ-ள்.):— முன்னால் சொன்ன பத்தும் ஒன்றும் மகாம் என்றறிந்து கொள்ளுங்கள். இதானது ஈரலின் கண் சிவந்த நீராக நிற்கும். இதற்கு அட்சரம் மீமாக இருக்கும். இதில் இருக்கும் அதிகாரியானவர் மீக்காயீலாக இருக்கும். இதன் ரசனையாகின்றது உப்பு ஆக இருக்கும். இதன் பேர் லவ்வாமா என்று சொல்லப்படும். இதன் மகாம் கண்ணாக இருக்கும். எ-று.

பேறும் வகைபத்தி ரண்டாமக்காம் பேசுவேன் மூன்றும் வகையைக்கேளீற், கூறு முல்கிம்மத் தென்றவாய்வு கோணு மாடத்தின் பச்சையாகத், தேறு மெழுத்ததில் வளைந்தஹேயாந் திறத்திலிசுறாபீ லிருப்பிடமாஞ், சீறு மூக்குமூச் செழுந்தவீடு சேர்ந்த நுரையீரற் புளிப்புமாமே. (445)

(இ-ள்.):—இன்னும் பன்னிரண்டாம் மகாமின் மூன்றுவது கபுசைக்கேளுங்கள். அதன்பேர் முல்ஹிமா, வர்ணம் காற்று, நிறம் பச்சை, அட்சரம் ஹேய், அதிலிருப்பவர் இஸ்றாபீல், வீடு மூக்கு, தானம் சுவாசம், சுவை புளிப்பு, உருவம் நுரையீரலாக இருக்கும். எ-று.

ஆனவகைபத்து மூன்றுமக்கா மக்கினி மூன்றுதிசையதாகத், தோணுங் கருநிறம் பித்தத்துக்குட் டுலங்கும் லாம் எழுத்துருவ மாங்காங், காண இசுறாயீல்கசப்புமநிற் காதின் வகைகேள்வியா குமிது, பூணு மிதின்பேரு முத்மயின்னா புகலு மிதுதானே நாலாமக்காம். (446)

(இ-ள்):— இனி பதின்மூன்றும் மகாம் ஆகிறது, முத்மஇன்னா என்று பேர், முக்கோண வடிவமாக அக்கினியாக இருக்கும். நிறங் கருப்பு. அட்சரம் லாம், உருவம் பித்து, அதிலிருப்பவர் இஸ்றாயீல், சரீரத்தில் செவியாக இருங்குங்கேள்வி, சுவை கசப்பு இது நாலாம் கபுசு என்பது. எ-று.

நாலு மக்காமையு மறியச் சொன்னே னவிலு மாகாயம் தாமரைக்கா, யேலும் பச்சையி லொளிகலந்தே யிருக்கும் வட்டமா யினிப்புமாகக், கோலம் வுயிரொளி மூளை முட்டுங் குறித்த எழுத்ததில் அலிபாகவும், ஆலமமைத்தானலிபுநிலை யதின்பேர்சனு பருமுகப்பத்தாமே. (447)

(இ-ள்):— இந்த நான்கு மகாம்களையும் சொன்னேன். இனி ஐந்தாவதானது, ஆகாயமாக இருக்கும். அது சரீரத்தில் தாமரைக் காயாக இருக்கும். அது ஒளிவு கலந்த நீல நிறமாகும். சுவை இனிப்பாகும். அதன் அட்சரம் அலிபு. அது மூளை ஸ்தானம் வரையிலும் நீண்டிருக்கும். அதன் பேர் ஸனுபரு, அல்லது முஹப்பத் தென்று சொல்லப்படும். எ-று.

பத்து வகையொரு வீடுதனிற் பார வீடைந்து பகுத்துச் சொன்னேன், புத்தியறிந்தவ ரறிந்து கொள்ளப் பொருளை யுரைக்கிறே ெனாளிப்பில்லாமற், சுத்த பெரியவன் அலிபுமிரு கமலத் திருக்கும்வாறதனைக்கேளு, மற்ற கதையிலே நினைக்க வேண்டா மதிப்புவிலையில்லாப் பொருளுமாமே. (448)

(இ-ள்):— ஒரு வீட்டில் பத்து வகையும், அதின் உள்ளே ஒரு ஐந்து வகை ரகசியங்களையும் விபரித்துச் சொல்லினேன். இனியும் இரகசியங்கள் இருக்கிறது, அதையுஞ் சொல்லுகிறேன், புத்தியுள்ளவர்களா யிருந்தால் தெரிந்து கொள்வார்கள். இருதயக் கமலத்தில் அலிபு இருக்கிறது, இது மதிக்கப்படாத பொருளாக இருக்கிறது. எ-று.

பொருளின் பெரியது கமலமாகும் புகலுங் கமலத்தின் பூவின் வாசம், அருளு மிருக்குது வாசந்தன்னில் அந்த வாசத்திற் கலப்பு மாகுந், திரளு மணியொளி விளக்குமாகுந் திரியுமூச்செண்ணெய் யாசையாகு, மிருளை விளக்கிய வொளிவுமாக விருக்கு மிறைசுடர் அலிபாகுமே. (449)

(இ-ள்):— அது கமலத்தின் நடுவே ஒரு விளக்காக நின்றெரி கிறது. விளக்குத் தண்டு இருதயமாக இருக்கும். ஆசையானது, எண்ணெய்யாகவும், சுவாசமானது திரியாகவும், பத்தி எரிகிற சுடரானது அலிபாகவும், நின்று கொழுந்து விட்டெரிகின்றது. எ-று.

அலிபு நிலை தன்னை யறியச் சொன்னே னடியிற் சிறந்த மூன்றங்குலமாம், பலித மாம்பச்சை நிறமதாகப் பகரு மொருபதங் குலத்தின் மேலே, வலிய பொருள் வெள்ளை வடிவிலங்கி வண்டில்லா

மலர் வானொளி போல், ஒலியும் பொருள் றப்பில் ஆலமீனு மொளிவு மிலங்குமோ ரங்குலமே. (450)

(இ-ள்):— அந்த அலிபின் நிலையானது இருதய கமலத்தில் மூன்று அங்குலத்தின் அளவு உயர்ந்திருக்கின்றது. பச்சை நிறத்தில் ஒரு அங்குலம், நீல நிறத்தில் ஒரு அங்குலம், முத்தின் நிறத்தில் ஒரு அங்குலமாக இருக்கிறது. தாமரையின் நடுவே வெள்ளை நிறமாக வண்டில்லாத மலர் வடிவாக றப்புடைய ஒளிவு பிரகாசிக்கும். எ-று.

இலங்கும் பொருடன்னைத் துலங்கநன்று யிதமா யுரைக் கிறேன். மறைப் பொருளைத், துலங்கு மொளிமுனைக் கீழதாகத் தூக்கி யுண்ணாக்கின் மேலதாகும், கலங்கா திருவிழி புருவத்திடை கண்டம் நிதானத்தி னேரேயாகு, மலங்கார மான கலிமாத்தனினி லறியுமிருபத்து நாலெழுத்தே. (451)

(இ-ள்):— இன்னும் அந்தப் பொருளை நல்ல விபரமாகச் சொல்கிறேன். அந்த ஒளியின் நுனியானது, நேத்திரத்தின் வட்டத்தி லிருந்து கீழே உண்ணாக்கின் மேல் வரையிலும் ஜோதி செய்கிறது. உயிரே இரண்டு விழிகளின் நடுவே நிதானமாக மத்தியில் இலங்குகிறது. அதுவே கலிமா இருபத்து நாலு எழுத்துக்களையும் பொதிந்து இருக்கின்றது. எ-று.

நாலா றெழுத்தினின் முஹம்மதென்ற நான் மூன்றெழுத்தையு மறியச் சொன்னேன், மேலாங் கலிமாவின் லாஇலாஹ இல்லல்லா ஹென்று மியம்புவது, கோலமா நடு அலி பென்பது கொண்ட கமலத்தின் வகையுஞ் சொன்னேன், மேலும் பதினொரு வெழுத்து முண்டு மெத்தப் பெரியது கடை யெழுத்துப், பாலாம் பலனிதைப் பின்னாற் சொல்வேன் பத்து எழுத்தையும் பகரக்கேளே. (452)

(இ-ள்):— கலிமாவில் இருபத்து நாலு எழுத்தில் முஹம்மது என்கிற பனிரண்டெழுத்தையும், விபரமாக மேலே சொல்லி விட்டேன். லாஇலாஹ இல்லல்லாஹு என்று சொல்லும் விபரமும் நடுவே அலிபுடைய கோலத்தையும், கமலத்தின் வகைகளையும் அதன், மேலே பதினொரு எழுத்துக்கள் உண்டு, அவைகளில் கடைசி எழுத்தானது மெத்தவும் பெரிய காரியமானது, அதன் விபரம் பின்னால் சொல்கிறேன். அதில் பத்து எழுத்தைச் சொல்கிறேன். எ-று.

பகரு முதலாமும் இரண்டாம் லாமும் பாரச் செவியிருபிறத் திலாகு, திகரி லாவிரு லாம்வயிற்றி னிற்கு மிரு அலிபிருவிழியி, அுகரு மிதினிடை அலிபொன்றுதா னுற்ற வாய்மொழியுறுதியாகுஞ், சிகர மேறிய மூச்சினேடே சேர்ந்தே யிருப்பது நடுவிற்கேளே. ( )

(இ-ள்):—கலிமாவில் உள்ள முதலாவது லாமும், இரண்டாவது லாமும் சரீரத்தில் இருசெவிகளின் புறமாக நிற்கிறது. மற்ற இரண்டு லாம்களும் வயிற்றில் நிற்கின்றன. லாம்களில் உள்ள இரண்டு அலிபுகளும் இரண்டு கண்களுக்கும் இடையில் பொருந்தி நிற்கின்றன. மற்ெருரு அலிபு வாய் மொழியாக இருக்கின்றது. சுவாசத்தின் வழியாக நடு அலிபானது நிற்கின்றது. எ-று.

நடுவில் அலிபை முன்னுலே சொன்னே னல்ல நடுலாமுமிதின் கூடத்தான், வடுவிலாவிரு லாமைக்கேளு வலமும் சலமுந்தான் வருமிடத்திற், கடுகி மூலத்தி னிருபுறத்திற் கனதி யாதம்ஹவ்வாவு மாகுந், தொடுத்த அலிபோடு சொன்னேன் ஹேயும் தொகுத் தஆகூவென் றெழுந்தமூச்சே (454)

(இ-ள்):— நடுவலிபானதின் விபரங்களை முன்னமே சொல்லி விட்டேன். மற்ற இருலாமும் வடகலையாகவும், இடகலையாகவும், சுழன்று வருகிறது. மூலத்தில் இருபுறமும் ஆதம், ஹவ்வா வுடைய ஒளிவுகள் வாசஞ் செய்கின்றன. மற்ற ஒரு அலிபும் ஹேயும் கூடி, ஹா ஹூ, என்று எழுந்த மூச்சாக இருக்கிறது. எ-று.

மூச்சும் பேச்செல்லாம் பிறந்தால்வரு முன்னே யறைந்தங்கே யிருக்கும்போது, சூக்ஷ முருவமா யெழுப்பும் வாறுஞ் சுறுதி யெழுத்தையு மறியச்சொல்வேன், ஆச்சி யுதிரத்தோல் தசை மூளையுமமிர்தக் கடலைந்து மன்னைப்பங்காம், பாச்சு விந்தோடு நரம்பெலும்பு சவ்வும் நகம்ரோம மாறும்பிதா (455)

(இ-ள்):— மூச்சும் பேச்சும் அந்த ஹேயால்தான் வருகிறது. அதன் சூட்சமத்தைப் பொருட்பாலில் கூறி விட்டேன். இனி அதன் ரகசியங்களைப் பற்றிய விஷயங்களைச் சொல்கிறேன். இரத்தம் தோல் சதை அமிர்தம் குணம் இது ஐந்து தாயுடைய பங்காக இருக்கிறது. விந்து, நரம்பு, எலும்பு, ஜவ்வு, நகம், ரோமம், இவை ஆறும் தகப்பனுடைய பங்காக இருக்கின்றன. எ-று.

ஆறும் பிதாவோடு மன்னையைந்து மாகப் பதினென்று மமையும்போது, கூறு மாகாயம் வாய்வுவன்னிக் கூருன தண்ணீர்

மண்கொழுகியொன்றாய், நூறுநாழிகை யாடிகிற்கு நுரையாய்க் குமிழியா யைந்துநாளாங், கூறு மீராறு நாள்வரைக்குங் குமரி கெல்லிக்காயிபோற் றிரண்டு நிற்கும். (456)

(இ-ள்):— தகப்பனில் ஆறும், தாயில் ஐந்தும் ஆகப் பதினொன்றும் கூடி சமையும்போது, ஐந்து பூதங்களும் அவைகளுடன் கொழுகிற்று. கொழுகி நூறு நாழிகையாக சுழலாடி, மிர்துவான நுரையாகி, அப்பால் ஐந்து நாளான பிறகு குமிழியாகி அப்பால் பனிரண்டு நாள் வரையிலும் இருந்து கெல்லிக்காய்ப் போல் திரண்டது. எ-று.

திரளும் அறுமூன்றிற் புன்னைக்காய்போற் றெளிவா யறுநான்கிற் றிரண்டவன்ன, முருநா ளுமையாறி லுதிரஞ்சேர்த்தே யொன்றாய் ஆமைபோ லுறைந்திருக்கும், அருநா ளாறாறு நாள்வரைக்கு மைந்துகோணமா யமர்ந்திருக்கும், பொருளா மாகாய மொரு கோணத்திற் பொறியுஞ் சிரமல்லோ ஆறேழினில். (457)

(இ-ள்):— இப்படி திரண்ட விந்தானது, கெர்ப்பத்தில் பதினெட்டு நாளானவுடன் புன்னைக்காய் போல இருக்கும். இருபத்து நான்கு நாளையில் அன்னம்போல் இருக்கும். முப்பதாவது நாளையில் ஆமைபோல இருக்கும். முப்பத்தாறு நாளானவுடன் ஐந்து கோணமாக இருக்கும். முப்பத்தொன்பதாவது நாளில் ஆகாயஞ் சேர்ந்து ஒருபுறத்தால் தலை உண்டாகும். எ-று.

ஆறெட்டு நாளில் நடுகோணத்தி லறுகோண வாய்வி லமைந்து நிற்கு, நேரெட்ட வொன்பத் தாறுநாளி னெருப்புத் திரிகோண நெஞ்சில் நிற்கும், ஓரெட்டாம் பிறைபோலே சலமுறையும் வயிற்றிலே யறுபதாநாள், பாரெட்டு திசை நாலுமூலை பரிவாயடி வயிற்பத் தாறிலே (458)

(இ-ள்):— நாற்பத்தெட்டு நாளான போது, கெர்ப்பமானது, ஆறுகோணத்தில் நடுவாக நிற்கிற வாய்வுடன் கலந்து நிற்கும். ஐம்பத்து நான்கு நாளில் திரிகோண அஸ்திகாங்கையானது இருதயத்தில் வந்து நிற்கும். அறுபதாவது நாளில், எட்டாம் பிறை போலக் குளிர்ந்த தன்மையாக வயிற்றில் வந்து நிற்கும். அடி வயிறு சமையும் நாலு திசையும் மூலைகளும் உற்பத்தி யாகிவரும். எ-று.

அறுகான் கெழுத்தொரு வெழுத்துமாகும் அல்லா கூவுடன் யாகூவல்லா, வரிவை புருடர்க்குந் தனியேபொரு ளார்க்குந்தெரியவே விளங்காப்பொரு, ளொருவர்க் கொருவர்தா னீயாப்பொருளு வந்தா லொருவித்தே யுருவாம்பொருள், கருவை யுருவமாய்க் காணும் பொருள் கலிமா வெழுத்தொன்றாய்க் காணலாமே. (459)

(இ-ள்.):— இருபத்துகாது எழுத்திலும் ஒரு எழுத்து இருக்கின்றது. அல்லாஹூ யாஹூ அல்லா என்பது. அது உலகத்தில் யார்க்குந் தெரியாதபொருள். உலகத்தில் ஒருவருக்கு ஒருவர்கைமாத்துகள் பண்ணிக்கொள்ளாத பொருள். அதை உகந்து வந்து ஒன்று சேர்ந்தவர்களை, தன்னுடன் கலக்கச் செய்கிற பொருள். தன்னுடைய அசலைத் தன்னுருவம் போலக் காண்கின்ற பொருள் கலிமாவில் ஒரு எழுத்தில் நின்று ஆடுகின்ற பொருளாக இருக்கின்றது. எ-று.

காணு மிருலாமும் அலிபினிற்குக் காணேகால்மேலுந் தலை கீழ்நின்று, பூணுமிருலாமும் மீம்நடுவிற் போடு முஹம்மது கூவல்லாவு, மூண்டிப் பார்க்கவே யைந்ததுவா முணர்ந்த அலிபைந்து லாமுமைந்து, நானும் ஹேயது மொன்றுமாகும் நுவலும் பனிரண்டு எழுத்துமாகும். (460)

(இ-ள்.):—மற்ற இரண்டு லாம்களும் அலிபுக்கு கீழும் மேலும் ஆக நின்று பொருந்தி, மற்ற இரண்டு லாம்களும் மீமுக்கு நடுவே ஹூ அல்லாவும், நல்ல ஊன்றிப் பார்த்தால் ஐந்தாகும். அலிபும் ஐந்தாகும். லாமும் ஐந்தாகும். நானும், ஹேயும் ஒன்றாகும். ஆகப் பன்னிரண்டு எழுத்தாகும். எ-று.

எழுத்து முஹம்மது நாலுமாகு மின்ன மிருநான்கு மிதுவே யாகும், அழுத்தி வலம்புரி யாஹூவல்லா வவன்பால் அலிபோடு நுக்கத்தும் ஹேயுஞ் சுழித்தே யிடம்புரி கூவல்லாவெனச் சுருப நிலையினலறிவேயாகு, முழுது மறிந்தாலே முழுக்கிறங்கு முடியா முழுக்கல்லோ வறியார்க்கெல்லாம். (461)

(இ-ள்.):— முஹம்மது என்றதற்கு அட்சரங்கள் நாலே ஆகிறது. இன்னும் அத்துடன் எட்டு அட்சரங்கள் உயிராக இருக்கின்றது: சுழிமுனை. வலம்புரியில் முழங்குகிற யாஹூ அல்லா என்பதும் நுக்கத்தும் ஹேயுமாக இருக்கும். சுழிமுனை இடம்புரிக்குள் முழங்கச்செய்ய வேண்டும். அப்போது தான் ஹக்குவெளியாகும். இதை அறிந்த நாதாக்கள் தான் முழுக்கு

இருப்பார்கள். அறியாத ஜனங்கள் எல்லாம் முழுக்குத் துடக்கை விட்டும் நிவர்த்தியாக மாட்டார்கள். எ-று.

பழுது ஸனுவொடு பாவந்தீரப் பாங்குமிநிறைலே பறந்துபோகு மெழுது முத்திரை யதனினும மெழுத்தை யறியார்க்கு மெது தானுண்டு, மழுது தொழுதாலு மழிந்துபோகு மகலா தொருநாளும் ஸினுமுழுக்கு, முழுது மெழுபத்திரெண்டு நாளின் முடியாவாண் பெண்ணு யுருவமாமே. (462)

(இ-ள்.):—உலகத்தில் ஒருவன் செய்கிற ஜினுவின் பாவங்கள் மேல் சொன்ன காரியத்தாலே பஞ்சாய் பறந்து போகும். இந்தத் தீர்ச்சையை அறியாதவர்களுக்கு உலகத்திலும், ஆகிரத்திலும் ஒரு பயனுங்கிடையாது. எந்தெந்தப் பாவமும் தொழுது அழுதால் மன்னிக்கப்படும். ஜினுவுடைய பாவங்கள் மாத்திரம் ஒருக்காலும் பொறுக்கப்படாது. ஆதலால் ஜினுவின் முழுக்கு இலகுவில் இறங்காது, இது நிற்க ஷெ கர்ப்பம் எழுபத்திரண்டு நாளையில் ஆண் என்றும், பெண் என்றும் உருவம் பிரிக்கப்படும். எ-று.

ஆகுமாதந்தான் மூன்றுசென்றுலங்க முருவெல்லாம் பொருந்தி நிற்கும், வாகு பெறுநாலா மாதந்தனில் வழியா யுறுப்புகளிரு கோணத்தி, லாகம் பொருந்திய நகமும்ரோம மைந்தாக் திங்களி லணியுமஃ, தேக வியாதியு மெழுத்துநிலை யிணையு மிருமூன்று மாதந்தானே. (463)

(இ-ள்.):—மூன்ருவது மாதத்தில் சரீரத்தின் உறுப்புகள் சரிவர சமைந்துவிடும். நாலாம் மாதத்தில் உறுப்புகளுக்கு ஊசாட்ட முற்பத்தியாகும். ஐந்தாம் மாதத்தில் நகம் உரோமங்கள் முளைக்கும். தேகத்தில் பல சுருசுருப்புகள் ஆருமாதத்தில் வந்து விடும். எ-று.

இருமூன்றெருமாத நவதுவார மெல்லாந் திறந்திடு மிருநான் கினி, லுருவஞ் சுருவந்தான் முறையொன்றில்லை மொன்பதும் பத்து முடலதுக்கு, மிருபத்து நாலு கலிமாநிலை யெல்லா மிணையும் பின்ரண்டெழுத்துச், சுருபத்தை விட்டு மாவுக்குள்ளே சுழிகொண் டெழுந்திடு மெழுத்தைக்கேளே. (464)

(இ-ள்.):—ஏழாம் மாதத்தில் ஒன்பது துவாரங்களும் திறக்கப் படும். எட்டாம் மாதத்தில் சரீரத்தின் அவயவங்களில் யாதொரு குறைவும் இல்லாதபடி சோதிக்கப்படும். ஒன்பது, பத்தாம் மாதங் களில், கலிமாவின் இருபத்திரெண்டெழுத்தும் சரீரம்போக மீதம்

இருக்கிற இரண்டெழுத்தும் கெர்ப்பத்தின் வாசல் திறக்கின்ற மாக்கொடியாக சமையும். எ-று.

எழுத்துக் கலிமாவில்லா இலாஹ இல்லல்லாவென்ற கடைசி ஹேயு, முழுது மாகவே முஹம்மதுர்ற சூலுல்லா வென்ற கடைசி ஹேயு, மெழுத்துமாவுக்கு விரண்டுமொன்று யிருந்துடைந்தான் புரியம் போதி, லெழுத்துப் பாலனே மாக்கொடியா லெறியப் பாலன் பாற் செல்லுந்தானே. (465)

(இ-ள்):— அந்த இரண்டு எழுத்துகளாவன அறிவுள்ளவர் களுக்குச் சொல்கிறேன். கலிமாவில் லா இலாஹ இல்லல்லாஹு என்கிறதின் கடைசியான ஹேயும், முஹம்மதுர் றசூலுல்லாஹி என்கிறதின் கடைசி ஹேயும் ஆக இரண்டாக இருக்கும். இவை இரண்டும் ஒன்றாகச் சேர்ந்து நடனம் புரிந்து மாக்கொடியைக் கொண்டு கர்ப்ப சிசுவை இழுக்கும்படியாகச் செல்லும். எ-று.

சென்ற வுடன் பாலன் க்ஷணம் பிறந்து சிறந்த வகைபேச்சு மூச்சுமாகும், பண்டு நிறைந்திடும் வலதடைத்துப் பாலன் வன்ன மாய்ப் பாழுமாகு, மென்று மழியாத னுலகுயிரு மிந்த விதமல்லோ வமைத்தவாறு, நன்றாய்ப் பதினெட்டுக் குதறத்தினி னவினம் பேச்சோடு மூச்சுமாமே. (466)

(இ-ள்):— இவ்விதம் செல்கிற மாக்கொடி அட்சரங்கள் வலது புறத்தால் நன்றாகச் சென்றால் உடனே சிசுயாதொரு சிந்தனை யின்றிப் பிறந்து மூச்சும் பேச்சும் உண்டாகும். அதுவலது புறம் போகத்தடைப்பட்டால் உடனே சிசுவானது செத்து வெளிவரும். இந்த விதந்தான் உலகத்தின் உயிர் ஜீவாதிகள் முழுதும் வெளி வருகிறது. பிள்ளை பிறந்த உடனே குதுறத்தின் இலக்கம் பதினெட்டும் பேச்சு மூச்சிலேயே நிறப்பமாகி விட்டன. எ-று

மூச்சுப்பேச்சுடன் பார்வைகேள்வி யுயிரு முகப்புடன் வனுப்பமில்லைக், காட்சிக் கலிமாவிலா இலாஹ இல்லல்லாவென்ற கடைசி ஹேயுஞ், சூட்சியாகவே முஹம்மதுர்ற சூலுல்லாவென வுரைத்த ஹேயு, மூச்சியாகவே யிரண்டு மொன்றாய் மூலக் குகையினி லுரைந்திருக்கும். (467)

(இ-ள்):— ஷை இரண்டு ஹேயும் சிசுவுக்கு மூச்சுப் பேச்சில்லாது போனால், அந்த இரண்டும் மூலக்குகைக்குள்ளே அடங்கிபோய் நிற்கும். எ-று

உறைந்து மூலந்தி மிரண்டுமொன்று யொடுங்கி நெருங்கியே யிணையும்போதி, லிருந்து நெருங்கியே சுழியாற்சுற்று மெரியுந் தலைற்சற்று மிணைந்திடாது, சிறந்த குகைதனி லெழுந்தப்புகை சிறந்தகமலத்தித் றுவும்போது, பொருந்து முயிரொளி யுசும்பிடாது பொங்கு மூச்சது தொலைந்திடாது. (468)

(இ-ள்):— அவைகள் இரண்டும்கூடி மூலக்குகையில் அடங்குமானால் மூலச்சுழிகள் சுழன்றுசுற்றி நெருப்புப்பற்றி எரியும். அது தாறாது. அந்த நெருப்பால் உண்டான புகையானது இருதய கமலத்தில் தாவிவருமானால் உயிரும் போகாது, மூச்சும் தொலையாது. (எ-று)

தொலைந்திடாமலே யெழுந்த புகை சொல்லு வேனிதின் பேரைக்கேளு, மிலங்கு மவனென்று சொல்லுவது மிகுந்தப் புகையைத்தா னெல்லவரும், கலங்கா வுதிப்பென்றால் மூலமதிற் கத்த பெரியவன் ஹேயுமாகுந், துலங்கு மறிவென்றால் முஹம்மதுர் றஸுலுல்லாவுட ஹேயுமாமே. (469)

(இ-ள்):— இந்தப் புகைதான் ஹக்குடைய மர்த்தபாவில் உள்ளது. இதைத்தான் பெரியவர்களான காதாக்கள் அல்லா, முஹம்மது, ஹயாத்து, ரூகு என்று சொல்கிறார்கள். எ-று.

ஆகி யிவைரண்டு மெழுந்தபுகை யதுதா னினை வென்றே யறியலாகும், பார்க்குநினைவது மப்பின்வீட்டிற் பட்டவுடனேதான் பார்வையாகுந், தாவும் புகைப்பித்திற் கேள்வியாகும் தாபமண் வீட்டி லெழுந்தபேச்சு, வாகும் புகைத்தாரை யடைத்ததென்றால் அந்த வீட்டினி லணுகிடாதே. (470)

(இ-ள்):— இந்தப் புகைகளைத்தான் நினைவென்று உணர வேண்டியது. இந்த நினைவான புகையானது, தண்ணீர் உடைய வீட்டில் வந்ததேயானால் உடனே கண் உலகத்தைப் பார்க்கும். அது பித்துடைய வீட்டில் வந்தால் உடனே காது கேட்கும், அது மண்ணீரலில் வந்தால் உடனே வாயானது பேசும். அந்தப் புகை வருகிறவழியில் எதாவது தடைப்பட்டால் அந்த வீடு பழுதாகி விடும். எ-று.

அணுகி டாவப்பு நினைவின்றுரை யற்றால் விழிகுருடா யிருக்கும், வனித மணுகாத பேச்சில்லாமல் வாயு மூமையாம் வழியில்லாத, லுனிதங்கேள்வியுமற்றுப்போகுமுற்ற பித்துடனிறமும்

போகும், கணிதம் பெருந்தாரை யடைத்ததென்றால் ஹயாத்து மூச்சுமே சுழன்று போகும். (471)

(இ-ள்):— நினைவுக்குள் நீர் வரத்தடைப்பட்டால் உடனே கண் குருடாகிவிடும். மண்ணீரலில் வரத்தடை பட்டால் வாய் ஊமையாகி விடும். பித்தில் வர தடைபட்டால் காதுசெவிடாகி விடும். இதுவல்லாமல், தாமரைக்காயில் வரத் தடைபட்டால் உடனே சுவாசம் நின்று மரணம் வந்து சம்பவிக்கும். எ-று

கழலும் வகைதனை விளங்கச் சொல்வேன் கலிமாவொழித்திடாப் புகையின்வேகங், வழியாக் கலிமாவை கூவென்றோதி வருகுமூச்சது மூடலைவிட்டு, மொழியுங் கலிமாவில் அகாரம்ரண்டு மூச்சை யிருத்திப்பா ருள்ளேசெல்லும், ஒளியின்தாரைதா னடக்கும்போதி லொன்று முறையாமல் வெளியே செல்லும். (472)

(இ-ள்):— இனி இந்தப் புகையை விட்டும் தப்பிக்கொள்ளும் வகையைச் சொல்லுகிறேன். அந்தப் புகையின் வேகத்தால் ஹூ வென்ற திக்றைப் பிரயோகித்து பின்னால் வருகிற சுவாசத்தை வெளியே செல்லவைக்கவேண்டும். உள்ளே அந்த இரண்டு அரங்களுடன் வாயுவை இருத்திப்பார்த்தால் அது உள்ளேதான் சுழலும். அப்போது இருவிழிகளுக்கும் உள்ளிருக்கின்ற ஹக்கு உதயமாகிறது தானே வெளியாகி உன்னை ஆதரிக்கும். எ-று.

சென்று லதுமீள வேகிடாது செத்தாரெனச் சொல்வார் உலகத்தோர்க, ணின்ற சுடரெல்லா மொன்றாய்க்கூடி நினைவிற் சேர்ந்து தான் வழிமறந்து, பண்டு போன்மூலத் தடைந்து தீயும் பத்திக்கருகியே நூர்ந்துபோகு, கன்றாய் வகையெல்லா மறிய வென்றான னவிலுவேனி நயமதாக. (473)

(இ-ள்):— அவ்விதம் உள்ளே சென்ற நினைவானது இலேசில் திரும்பாது. அப்போது பிணம்போல கிடக்கும். அதை வுலகத்தார்கள் கண்டால் செத்தான் என்று பேர்வைத்து விடுவார்கள். சிறிது நேரத்திற்குள் அங்கே, உலாவின ஒளிவுகளெல்லாம் ஒன்று சேர்ந்து கூடி நினைவைக்கிழே இழுக்கும் அப்பால் உன்னை நீ காண்பாய்.

நவுகாமம் அறியும் வகை முற்றிற்று.

## றூகு வகை.

ஆடுங் குதறத்துமலருடையவாவி யறுகோணமானகலை, சூடும் றூகைத்தின் குதுசியுட சுடரினுவிதா னெழுந்தகாலை, பாடுங் கவிக் குள்ளே சொன்னேனில்லை பாரப் பெரிதான கருப்பொருளைத், தேடக் கிடையாத வுலகத்துள்ளே தெளிவாய் பொருளினைச் சொல்லக்கேளே. (474)

(இ-ள்):— குதுறத்தென்கிற புஷ்பத்தில் இருந்துவாசனை செய்கின்ற ஆவியானது, ஆறு கோணங்களாக நிறைந்து அதுவே றூஹூல் குதுசி என்னும் பிரதான ஆத்மாவாக நிற்கின்றது. அதைச் சூழ மற்ற ஐந்து ஆத்மாக்களும் நிற்கின்றது. இந்த ரகசியத்தை முன்னோர்கள் தங்கள் கவிகளில் சொல்லாமல் மறைத்துப் போட்டுப்போய் விட்டார்கள். நான், நீங்கள் ஏழை ஜனங்களாக இருப்பதினுலே, விபரித்துச் சொல்கிறேன் கேளுங்கள். எ-று.

சொல்லக்கேளுங்கா ணுலகத்தாரே சூழ்ந்த வுடலுக்குளைந்து றூகு, வல்ல றூகொன்று நாமியாவாம் வகையாம் றூகொன்று நாத்திக்காவாம். பொல்லா றூகொன்று நாபியாவாம் போகும் வரும்றூகு நகீமாவாம், வெல்லா றூகுக்குந் தலைவனுக விருக்கும் றூகல்லோ குதுசியாகும். (475)

(இ-ள்):— யார்காணும் உலகத்தார்களே! இங்கே நான் சொல்கிற கருவின் பொருளின் கனத்தைத் தூக்கிப்பார்க்க உங்கள் மூளைகளுக்கு அவ்வளவு சக்தி உண்டா? உண்டுமானுல் உணர்ந்தறியுங்கள். இந்த சரீரத்துக்குள் ஐந்து றூஹூகள் இருக்கிறது, அவைகளில் ஒன்ருவது றூஹூ நாமியாவாக இருக்கும், இரண்டாவது றூஹூ நாத்திக்காவாக இருக்கும். மூன்ருவது றூஹூ நாபியாவாக இருக்கும், நாலாவது றூஹூ இதுதான் வெளியே போய் வந்து கொண்டு இருக்கும்; இது நகீமாவாக இருக்கும். இவைகளுக்கெல்லாம் தலைவனுக இருக்கிற றூஹூனது குதுசி என்று சொல்லப்படும். எ-று

றூகு குதுசிதானெளிவுமாக நோக்குநயனத்தினிடைகொலுவில், றூகு குதுசிதான் ராஜாவாகும் றூகு நாலுமே யேவலாளாம்

றூகு குதுசிதான் றூகில்நின்றால் றூகுநாலுமே யசடிநிற்கும், றூகு குதுசிதானவனைச் சேர்ந்தால் றூகுயாவுமே யழிந்துபோகும். (476)

(இ-ள்):—றூஹானிய்யல் குதுஸியானது இரண்டு விழிகளுக்கும் நடுவான கொலுவில் ஒளிவாக நிற்கும். சரீரத்தில் அது இராஜாவாக இருக்கிறது, மற்ற நாலு றூஹானிகள் நான்கும் அதற்கு ஏவலாளராக இருக்கின்றது. இன்னும் றூஹானிய்யல் குதுஸியானது அதன் தானத்தில் நின்றால் மற்ற நாலும் ஓடியாடி நிற்கும். அதுவானது றப்பைப் போய் தரிசித்தால் சரீரம் விழுந்துபோகும். எ-று.

அழியா றூகல்லோ குதுசியாகு மதுதான் சகலமு மாட்டி வைக்கும், வழியா மகுஷறில் குதுசிறூகு வல்லோன்றனென்ற கேள்விகேட்கும், அழிந்த றூகுதா னலுமொன்று யாவியுருவாகி யமளிபடுங், தெளிவா முடலுக்கு ளைந்து றூகுந் நிறத்தைப் பொருந்தியே யிருக்கும்போது. (477)

(இ-ள்):—மற்ற நான்கு றூஹானிகளும் அழிந்து நிலைகுலைந்து போகும். அந்த குதுஸியானது சதாவும் அழியாமல் நிற்கும். இன்னும் சரீரத்தில் எந்த ராஜகருவிகளையும் நடத்தாட்டிவைக்கிறதும் அதுதான், மகுஷரிலும், அந்த குதுசியே றப்பாக இருந்து கேள்வி கேட்கும். அப்போது அழிந்த மற்ற நாலு றூஹானிகளும் அதற்குக் கைகட்டி நின்று சேவிக்கும். உலகத்தில் அவைகள் சரீரத்தில் இருந்து அதிகாரஞ் செய்யும்போது. எ-று

இருக்கும்போதுதா னிராஜாவாக விலங்குங் குதுசியு நாலு றூகும், வருந்தி வணக்கத்தி லறிந்திருந்தால் வடிவு மகுஷரிற் றெரியு நன்றாய்ச், சறுத்துப் பலபாவ நன்மை கேட்கிற் சாகாப்பழகிய பழக்கத்தாலே, நிறுத்தி யெனக்குக்கிழ் கொலுவிருந்தாய் நீ தான் செய்தவ னெனக்கேட்பதே. (478)

(இ-ள்):—அந்த சரீரத்தை யுடையவன் மேற்படி குதுஸியை அறிந்து அதுடன் பழகி யிருப்பானேயாகில் மஹ்ஷரில் அதை இன்னாரென்று தெரிந்துக்கொள்வான். அப்போது குதுஸியானது நீ சரீரத்தில் என்னையன்றி வேறு வேலைபார்க்காதபடியாலே உன்னை நான் என்ன கேட்பது உனக்கு கேள்வி இல்லை என்று சொல்லும். எ-று.

*எனக்கு வலுமையோவுனை யல்லாம லெல்லாஞ்செய்தவனீயே யென்றுந், தனக்குள்ளாகிய சூலமென்னவே தம்பிரான்கேள்வி யொன்றுமில்லை, வணக்கமறியாத பாவிகளே வாழ்க்கு காடோறு மிருக்கும்போது, கனக்க வுடலிலே யிருந்த றூகு கண்ணினிதானத் தில் வருகும்போது.* (479)

*(இ-ள்):*—உன்னை கேட்க எனக்கு என்ன வலிமை இருக்கிற தென்று சொல்லிவிடும். அதை சரீரத்தில் வைத்தறியாத மூடர் களுக்கு காலம் வந்து முடிகினபோது உடலிலே ஓடிக்கொண்டிருந்த ஆத்மா கண்ணின் ரஸ்தாவில் வரும் அப்போது. எ-று.

*வந்தா லிருவிழிவானை நோக்கும் வகையா மிசுறுயீல் பார்வை யென்பா, ரந்தபார்வைதான் றூகுநாஸு மப்போ குதுசியை யறியும் பார்வை, யுந்த வுடலோடே படிந்திருந்தா லுவந்து தொழுதுபோ மென உரைக்கு, மந்த ராஜாவை யறியார்குல மாரோ வெனச் சொல்லி சிரசிலேறும்.* (480)

*(இ-ள்):*—இப்படி வருமானால் இரண்டு கண்களும் ஆகாயத் தைப்பார்க்கும், அந்தப்பார்வைதான் உலகத்தில் இஸ்றுயீலுடைய பார்வை என்பார்கள். உண்மையில் அதுதான் நாஸு றூஹுகளும் பிண்டத்தில் இருந்து தன் அரசனான குதுஸியை அண்டத்தில் வந்து சந்திக்கிறதாக இருக்கும். அவன் ஏற்கனவே அவைகளை அறிந்திருந்தால் அவனிடம் பிரயாணவிடை பெறாமல் வராது. அறியாதபடியாலே இவன் ஆரோ என்று உதறிவிட்டு வருகிற பார்வையாக இருக்கும். எ-று.

*ஏறுஞ் சிரசினி றூஸுறூகு மெழும்பி யுடல்விட்டுக் குதுசியா கும், பேறும் பலன்பெற்ற குதுசிதானும் பெரியோன் பாத்திலே சேர்ந்துபோகு, மேறிச் சிரசான நாஸுறூகு மிறங்கி மூலத்தினிலைந் திருக்கும், கூறு மிதுநாஸு றூகானியுங் குதாவின்றிருமுன்னே புருவாமினி.* (481)

*(இ-ன்):*—அவ்விதம் சிரசிலேறின நாஸு றூஹுகளும் தன் எஜமானாகிய குதுசியின் சமுகத்தில் சென்று தங்கள் உத்தியோக அதிகாரங்களை ஒப்புக்கொடுக்கும். உடனே குதுசி தன் றப்பிடம் போய் விராவிக்கொள்ளும். அதிகாரமிழந்த றூஹுகள் நாஸும் மூலத்தில் வந்து பதுங்கிக்கொள்ளும். இவைகளுக்குத்தான் றூஹானி என்று சொல்லப்படும். எ-று.

உருவமாய் நின்று சாட்சிசொல்லு முடையோன் பரத்தை முன்னறியாரெல்லாஞ், சுரூப முருவெல்லாஞ் சாட்சிசொல்லுஞ் சொல்லும் பிழையெல்லாஞ் செய்தானென்று, பெரிய முனிவோடு பாவ நன்மை பெலத்த துன்பமு மிவைகாலுக்கு, முருவிற் பொருந்திய வைந்து றூகுமுலகோ ரறியவு முரைக்கிறேனே. (482)

(இ-ள்.):—அந்த நாலு றூஹுகளும் சரீரம் செய்தபாவ நன்மைகளைக் குறித்துசாட்சி சொல்லும். தன்னையறியாத மடமாந்தர்களின் அவயங்களே இவன் இன்னது பாவம் இன்னது புண்ணியஞ் செய்தான் என்று வாக்கு மூலஞ்சொல்லும். அப்பால் தான் கியாமம் நடைபெறும். அந்த ஐந்து றூஹுகளையும் தெளிவாகக் கீழே சொல்கிறேன். எ-று.

அறியும் றூகுதான் குதுசியுட ஆளாம் பணிவிடை நாலு றூகு, மறியு முடலுக்குளிடதுமாங்கா யத்தக்கருநீரைச் சிரகிலேற, நிறையுங் குதுசிதான் றூகுதானு நீண்ட காமாண்டு முள்ளே வாங்க, நிறையு மிருவிழி நித்திரைதா னிலையி னடிவாங்கக் கேள்வி போகும். (483)

(இ-ள்.):—றூஹுல் குதுசியின் பணி விடைக்காரர்களாக மற்ற நாலு றூஹுகளும் இருக்கின்றன. றூஹுல் குதுசியானது இடது பக்கத்து இருதயத் தாமரைக்காயின் வடிவமாக நிற்கின்றது. அந்த மாங்காயானது இதழ் மூடும்போது நித்திரை வந்து இருவிழிகளும் மூடிமயங்கும். அப்போது பித்துடைய வீடும் அடைப்பட்டு கேள்வியும் மறந்து போய் நினைவும் அசந்துவிடும்.

கேள்வி பார்வையு முறக்கமானுற் கிடத்திக் கீழேதான் சடத்தை வைக்குஞ், சூழு முலகெலா மலைந்துபார்த்துச் சொல்லும் நால்றூகு நகிமாவதும், நாளுங் கொடிதான பலவிதமு நமக்கு நமக்கென்றே நாட்டங்கொள்ளுஞ், சூழுங் கொடும்பிழை விளக்கும் றூகு சொன்னே னுபியா றூகுமாகும். (484)

(இ-ள்.):—அவ்விதம் கேள்வியும் பார்வையும் நித்திரையில் தரிபட்டவுடன் குதுஸியானது மெதுவாக சரீரத்தைக் கீழே வைத்துவிடும். அப்போது அந்த நான்கு றூஹுகளும் வெளிப் பட்டு உலாவிக்கொண்டு திரிந்து கண்ணுக்கழகான சரீரமெல்லாம் பார்த்து இது நம்மது அது நம்மது என்று சொல்லும், இந்த

காலில் கொடிய பாவச்செயல்களை யெல்லாம்செய்கின்ற றூஹானது காமிய்யாவாக இருக்கும். எ-று.

றூகு காத்திக்கா பசியுத்தாகஞ் சுகயும் பலவெல்லாம் சேர்த்து வரும், வாகி னறிவோடு பலபுகழு மறிய காமியா றூகுமாகு, மேகன் றூகைந்து மிருக்குமிட மிறையோன் குதுசிதான் சிரசினிற்கும்; ஏகம் பொருந்திய காமியாவு மிடதுமார்பினிற் றறிக்குந்தானே. ( )

(இ-ள்.):—காத்திக்கா என்கிற றூஹானது சரீரத்தில் பசி, தாகம், சுகம், இன்பமுதலான பலகுணங்களையுங் கொடுக்கின்றது. காமிய்யா என்கிற றூஹானது புகழ்ச்சி, பெருமை, கல்வி முதலான வைகளைக் கொடுக்கின்றது. இந்த றூஹுகள் குதுஸியைத்தான் சூழ்ந்து கொண்டிருக்கும். இவைகளில் காமியா என்கிற றூஹு மாத்திரம் இடது மார்பில் இருந்து அதிகாரஞ் செய்கின்றது. எ-று.

தரிக்கும் பலவெல்லா காமிற்கானத் திரிகோணத்தீயினடு கெஞ்சிலே, கருகி யுருகிற்கும் நகீமாவது கனத்த ஈரலி னுபியாவா, மறியும் வகையெல்லாந் தனக்கேயென்று வாகை வழியிலே யாடி நிற்கும், உரிசை பொருந்திய காத்திக்காவு முரைத்தே யிருப்பது பல்லுக்குத்தி. (486)

(இ-ள்.):—நகீமா என்றது மூன்றுகோணமான நெருப்பின் திசையில் நின்றும் வெந்துகருகி உருகிப்போய் நிற்கின்றது. காமியாவானது ஈரலோடும் சம்பந்தப்பட்டிருக்கிறது. இது சரீரம் எதை அறிய நாட்டங்கொள்கிறதோ அதைத் தூண்டிக் கொடுக்கின்றது. காத்திக்கா என்றது பல்லுக்குத்தி என்கிற தானத்தில் நின்றும் ஆசை வஸ்துக்களை அநுபவிக்கின்றது. எ-று.

பல்லுக் குத்திதான் பரப்புவியாம் பாங்கா யடிவயிறதிலிருந்து, நல்ல ரசனையு நால்வகையு நாடி யுண்பது காத்திக்காவாம், வல்ல புகழான வைந்து றூகில் வடிவுகுதுசியை யறியார்குபிர், அல்லா வருளான குதுசியாகு மத்திக் குதுசியை யறியவென்றால். (487)

(இ-ள்.):— பல்லுக் குத்தி என்பது தான் பூமியுடைய மண்டலமாக இருக்கிறது. மேற்படி காத்திக்கா என்ற றூஹானது அதில் உட்கார்ந்து கொண்டு நல்ல ருஷிகரமாக உண்டி வஸ்துக்களை யுண்டு அவைகளின் ரசங்களைக் கிருஹிக்கின்றது. இந்த றூஹுகளில் பிரதான றூஹான குதுஸியைப் பகுத்தறியாத சண்டாள ஜனங்கள்

எல்லாரும் கடைசி முடிவில் நிட்டமாகக் காபிரகத்தான் இருப்பார்கள். அதுதான் றப்பு என்பது அதை யறியவேண்டு மானால் சொல்கிறேன் ஒரு உபாயம். எ-று.

அந்தக் குதுசியைத் தானறிந்தே அதைத்தான் நிருமுன்னே நிறுத்த வென்று, லந்தப் பதினைவு முஷாஹிதாவி லைந்தாம் வணக்கத்தி லாகுமுக, முந்தஜெம்கூத்து லாகூத்திலு முழக்கமாகிய ஆகூத் திலுஞ், சிந்தைத் தெளிவை நீ தெளிவதாக்கித் தெளிவு மிலங்கியே யிலங்கும் போது. (488)

(இ-ள்):— ஜனங்களே! நீங்கள் அந்த றாஹூல் குதுஸியை யறிந்து உங்களில் தரிசிக்க வேண்டுமானால் பதினைவு முஷாஹிதாவில் ஐந்தாவது முஷாஹிதாவை நீங்கள் பற்றிப் பிடித்து உங்கள் முகங்களை ஐம்கூத்திலும், லாஹூத்திலும், வலம்புரி முழங்கு கின்ற ஹாஹூத்திலும் ஏற்றி வைத்துக் கொண்டு, இருதயத்தை நல்ல தெளிவாக்கி அந்தத் தெளிவுக்குள்ளே உணர்ச்சி என்கிற நினைவுடன் உற்றுப்பார்ப்பீர்களே யானல் அங்கே இலங்கி நிற்கும், எவ்விதமே யானல். எ-று.

இலங்கும் கருங்கட லிக்கணத்தி லிருந்தவளை வெள்ளை விசை கொண்டாடு, முலகு நிலையிமான் வட்டத்துள்ளே யொளிவு முச்சுடர் வளைநடுவி, லிலங்கு நிலையுட்டாள் வட்டத்துக்கு ளிலங்கும் பளிங்கி யில் அருபரூபம், அலையா நிலையுருத் தோன்றுமாகி லதுதான் குதுசியென் றறிந்துகொள்ளே. (489)

(இ-ள்):— அவ்விதம் இலங்குகின்ற வஸ்தானது கருங் கடலாகிய இரண்டு கண்களின் கருப்பு வட்டத்தின் சூழாலே வெள்ளைக் கடல் வளைந்து இருக்கும். அதற்கப்பால் ஈமான் வட்டம் என்கிற பச்சை நிறத்துக்கப்பால், முச்சுடர் வகை என்கிற செவப்பு ரெங்கு குவளைக்கு நடுவில், ஒரு கண்ணாடியில் விழுகின்ற சூரிய ஜோதிபோல பளிரென்று ஒரு ஒளிவு யாதொரு உருவமுமில்லாதபடி, சுமார் ஒரு கலைகஸாப் பிரமாணம் இரண்டு நேத்திரத்திற்கும் நடுவே தெரியும். அப்படிக் கண்டாயே அதுதான் சத்தியமாக றாஹூல் குதுஸி என்று நல்ல உறுதியாக அறிந்து கொள்வாயாக. எ-று.

அறியுங் குதுசியின் விபரந்தனி லணுப்போ லுரைக்கிறேனறி வானர்க்குக், குறியுமிருமுக கயனத்திடை கூறும் பொருளொன்று யிருத்தகலும், அறுகோ ணவாசி கண்ணேவிதா யதுதா னுருச்செய்த பரம்பொருளா, முருவி னுருவில்லா தொளிவுகாத* னுண்மை குதுசியென் றறிந்துகொள்ளே. (490)

(இ-ள்):—இன்னும் அந்த குதுஸியின் அடையாளங்களில் ஒரு அணுப்போல் உடைத்து விடுகிறேன்; கூர்மையுள்ள புத்திசாலிகளா யிருத்தால் தெரிந்து கொள்ளட்டும். அதாவது;— சரீரத்தில் பிரதான கருவியாகிய முகத்தின் இருவிழிகள் நடுவிலும், அந்த குதுஸின் பிறகாசம் நல்ல வெட்ட வெளிச்சமாகத் தெரியும். அறுகோணம் என்பது கண்ணைத்தான் சொல்கிறது, அதுதான் அறுஷு, அதில் நின்றுந்தான் சரீரம் சமைக்கப்பட்டது. அந்தக் கண்களுக்கு நடுவில் ஒரு காதமானது நுக்கத்துடைய சூரத்தில் ஒளிவாகத் தெரியுமாகில் உடனே அதுதான் குதுஸி என்றறிந்து இஸ்லாமிலாகி விடுங்கள். அன்றைக்கித்தான் இஸ்லாம். எ-று.

கண்டகருவுக்குணினைவு மென்றுய்க் கலந்த தணலாகுந் தெளி வின்சுடர், நின்ற வளைவட்டம் வள்நடுவுள் நுக்கத்து நான்வளை யிருவாலுமாய்ச், சென்று மயல்றாகு ஜுபிலிதன்னைச் சேர்ந்தே யனுதினஞ் சிறந்திருக்கு மென்றும் பழுநில்லா நிறையோன் சுடரிதுதான் குதுசியென் றறிந்துகொள்ளே. (491)

(இ-ள்):— அப்படி நீ கண்ட அதுதான் சரீரத்தின் கருப் பொருளாக இருக்கும். அது நினைவுக்குள் கலந்து உஷ்ண வாயுவுடன் தெளிந்து பிரகாசஞ் செய்கின்றது, ஒரு நுக்கத்துப் போல் வட்டவளையமான ஒரு ஒளிவு அது வலம்புரி இடம்புரியாக இரண்டு கண்களின் மத்தியத்திலும், அலிபுவைச் சேர்ந்து இலங்குகின்றது. இதைப்பற்றி குணங்குடி மஸ்தானும் "நேத்திரம் ரண்டிலும் நேராயிலங்குது நீ டொளிபோன்றது தேடரிதாகிய காத்திரம் உள்ளது யாவும் பொதிந்தது கையிலும் காலிலும் எட்டப் படாததோர் சூஸ்திரப்பாவை" என்று சொல்லி யிருக்கிறூர்கள். பார்த்து சக்கற உணர்ந்து கொள்ள வேண்டியது. எ-று.

எல்லாங் குதுசிதா னெழுந்த கோல மிலங்கும் பளிங்கியிற்றெ ரியும்ரூப, மெல்லோர்க்குந் தோன்றும் வணக்கந்தனி லிறையோன் குதுசியு மெவ்வகையு, மெல்லாங் கருவிலே யமைத்தவாறு

பெந்த வெழுத்துட வதுப்புமொன்றூற், சொல்லு மெழுத்தொரு மூன்றுமாகச் சூலென் றுரைப்பது சுழிமூலமே. (492)

(இ-ள்):— உலகோடிகளில் உருவெடுத்து வந்தவைகளெல்லாம் அந்த குதுஸியின் கோலங்களைப் போலதான், அந்த சூறத்து இருதய கசடறுத்து மனக்கண்ணுடி என்கிற பளிங்கியில் பார்த்தால் தெரியவரும். அது மூலத்தில் இருந்து சுழித்து எண்பத்து நான்கு நூறாயிரங்கோடி நாம்பு ஸ்தலங்களுக்கும் ஆதியில் ஏற்பட்ட விதி வசப்பிரகாரம் ஓர் எழுத்தின் வல்லாமையைக் கொண்டு சூல் என்கிற பெயருடன் மூலத்தின் சுழிமுனைக்கு ஸ்தம்பமாக இருந்து வருகிறது. எ-று.

• சூலென் றெழுத்தது மூன்றினலே சூலுண்டாகிய மதலையாச்சு, சூலைச் சுமந்தது முஹம்மதியா சூலாலவர்காம மிறசூலாச்சு, பாலனுரு வாச்சு சூலினலே பாரவகை யெல்லா நிறைந்து போச்சு, மேலுங் குதறத் திருபத்தாறு மேன்மை பொருந்திய வயனங்கேளே. (493)

(இ-ள்):— சூல் என்கிறது முச்சுடரின் காலத்தில் அதற்கு உண்டாயிற்று. அதனலே தான், கெர்ப்பத்தில் மதலையானது சூலாச்சுது. சூலைபரி வாரமாகச் சுமந்தது, முஹம்மதியா என்று சொல்கிற பேரொளிவாக இருக்கின்றது. அதனல் தான் முஹம்மதுக்கு றசூல் என்கிற காரணப் பெயர் உண்டாயிற்று. இதில் குதுறத்தின் இருபத்தாறு வகைகளும் வந்து நிரம்பிற்று. எ-று.

வயணங் குதறத்தி லிருப்பத்தாறும் வகிர்ந்து பொருந்திய விதத்தைக் கேளுஞ், செயமா முயிர்நிலே யட்டகோணஞ் சேர்ந்தே யுயிர் நிலே பொருந்தி நிற்குஞ், சுகமா யனுசிறு மைந்தேயாகுஞ் சொல்லு முதிப்போடு நினைவு புத்தி, மயமாமறிவோடும் அக்கினு மருள் மற்றும் கிம்மத்துப் பசுமுமாமே. (494)

(இ-ள்):— மேற்படி குதுறத்தின் வயணங்கள் இருபத்தாறும் பிரித்துச் சொல்கிறேன். எப்படியாஞல், உயிர் நிலைகள் தோறும் எட்டி நிற்கின்ற அனுசிறுகள் ஐந்தும், இன்னும் உதிப்பு, நினைவு, புத்தி, அறிவு, ஞானம், அருள், ஹிம்மத்து, பஹ்மும். (இன்னும்)

ஆசு முணர்வோடு மிரக்கங்கல்வி யறியும் வெறுப்போடு முாஹானியும், வாகி னிருபத்தாற் குதறத்தாகும் வளமை குஞமையுஞ்

சூடு நீரு, மேக வளவோடு கொடி வளவு மிச்சை சோபமுஞ் சபூறு குணமாகும், வகை பத்தும் அஹதிய்யத்து மறியக் கிஞயத்து மருளக்கேளே. (495)

*(இ-ள்)*:— உணர்வு, இரக்கம், கல்வி, வெறுப்பு, றூஹானி ஆகிய இவைகளாக இருக்கும். வழக்கம், குளிர்ச்சி, சூடு, வடிவு போகம் அளவு, கோபம், பொருமை, இந்தப் பத்தும் அஹதியத்தாக இருக்கும். கிஞயத்தைச் சொல்கிறேன். எ-று.

அறியுங் கிஞயத்து வைந்து சொன்னே னதிலே பிரிவெல்லா மறியச் சொன்னேன், பொருளுங் கிதாயத்துச் சுயமகிழ்ச்சி புளிப்பு மினிப்போடு கசப்புமாகும், புரளுந்துவர்க்கைப்பு மிலேப்பு பேச்சும் பொங்குங் கிதாயத்து மொருபத் தொன்றும், திரளு முலகெல்லா மனதிலொன்றித் திருக்த னவனென்று வணங்க வென்றூர். (496)

*(இ-ள்)*:— கிஞஅத்து ஐந்து வகையாக இருக்கின்றது. அவைகள் இனிப்பு, புளிப்பு, கசப்பு, உப்பு, துவர்ப்பு, ஆக இருக்கும். ஹிதாயத்து பத்து காரியங்களாக இருக்கிறது. உலக நடவடிக்கைகள் யாவும், இருதய வில்வில் வந்து நிற்கும். எல்லாம் றப்புடைய வரத்தால் என்று நிர்ணயித்து வியாபகமாக நினைத்து வணக்கஞ் செய்ய வேண்டும். எ-று.

என்றுங் காமப்பால் தவங்களெல்லா மெடுத்தேயுரைத்திட்டே னுலகத்தோர்க்கு, மன்றே பெரியவ னுதிஞய னறிவிலறிவாக அருபரூப, மென்று மழியாத னுலகுயிரை யந்தவிதமாக யமைத்து வைத்து, நன்று நெறிநன்மை தீமைரண்டும் நடப்பா லறியவும் காட்டினனே. (497)

*(இ-ள்)*:— இவ்விதமாக நடக்கின்ற காமபாவின் குறைகுணங்களின் விபரங்களை எல்லாம் சொல்லிவிட்டேன். றப்பு அருவத்தில் உருவமாக இருந்து உலக சிருஷ்டிகளை இவ்விதமாக நடத்துகிறான். இதில் நப்ஸுகளின் நடப்பால் நன்மை தீமைகளையும் அறிகிறான், என்றுணர்வீர்களாக. எ-று.

காட்டி னுலமாக்க ளெல்லோருக்குந்தா னயமா யுரைத்த முப்பாலிதாகு, மேட்டி லெழுதினேன் முப்பாலேயு மிதமா யறிந்தவர் குருவுமாகும், பாட்டி லுரைத்ததின் பயனறியார் பாரிற் குருவென்று பகரொணுது, காட்டி லறியாத் மூடர்க்கெல்லா நல்ல முஷாஹதாவினி மேற்சொல்வேன். (498)

(இ-ள்):— இந்த உலகத்தின் கண்ணே, அறிவில்லாத உலமாக்களுக்கு கயத்துடன் இரங்கி என் முப்பாலையும் எடு வடாக எழுதி விட்டேன். இந்த முப்பாலையும் அறிந்தவர்கள்தான் குருமார் என்று வெளிவர வேண்டும். என்னுடைய முப்பாலின் தாற்பரி யங்களைக் கண்டு கொள்ளாமல் குருவென்று வருபவர்கள் பாவியாகிப் போவார்கள். இனி முஷாஹிதாவின் விபரஞ் சொல்கிறேன். எ-று.

இனிமே லுரைப்பது குருவின்முறை யெல்லா நபிமாரு நடந்து முறை, துனியாவி லுள்ள குருவின் மாருஞ் சூழ்ந்த வொலிக்குத் தூபெல்லோருந்தா, நிதமே இதுதானே நடந்தமுறை நேராமுறை யெல்லாம் வீணுமென்று, மதீனு முஹம்மது நபியுஞ் சொன்னார் மருகாலிப்புலி தாமுஞ் சொன்னார். (499)

(இ-ள்):— இனிமேல் நான் சொல்லி வருவது குருமார்களுக்கு வேண்டிய கைவல்லியமான முறையாக இருக்கும். இதுவானது, நபிமார்கள், றஸூல்மார்கள், ஒலிமார்கள், குதுபுமார்களும் நடந்து பயன் கண்ட முறையாக இருக்கும். இது அல்லாத மற்ற முறை களெல்லாம் வீணன வழிகேட்டு முறையாகுமென்று மதீனு நகரத்தில் அடங்கி விளங்கும் நமது உலக ரட்சகரான முஹம்மது நபியவர் களும், ஞானத்தின் அஸ்திவாரமாகிய ஹலாத்து அலியவர்களும் கடைபிடித்துச் சொல்லி இருக்கிறார்கள். எ-று.

அலியார்க் குரைத்தன ராலநபி யால நபிக்கெல்லா சொன்ன தெல்லாம், அலியா ரொளியான குத்தூபுமாகு மபூபக்கரும றுது மானுக்கும், அலியா ருலகுள்ள குருமார்க்கெல்லாம் அல்லாவருள் பெற்றகுதூபுமாகும், அலியின் ரகசியம் அறிந்தாரில்லை யல்லா வொருவனே யறிந்த நாயன் (500)

(இ-ள்):— அலியவர்களுக்கு நமது நபிகள் பிரான் அவர்கள் உபதேசஞ் செய்தார்கள். நபியவர்களுக்கு மிஃறாஜியுடைய இரவில் மப்பு உதிப்பாக்கி வைத்தான். ஆனதால் அலியவர்களாகிறது அபூபக்கர், உமறு, உதுமான் இந்த அமீறுகளுக்கும் மற்ற குதுபு ஒலிகளுக்கும் சற்குருவாக இருக்கும். அலியுடைய ரகசியம் உலகத்தில் யாரும் கண்டதே இல்லை, அல்லா ஒருவன் தான் அறிந்திருக்கிறான். எ-று.

காயன் புலியான அலியார் சொன்னார் நபியாமுஹம்மது சொன்னாரென்று, பாவியாகாம லுலகோர்க்கெல்லாம் பதினு லுபதேசஞ் சரியாய்ச்சொன்னு, ராகு முபதேசக் தனைவிலகி யனே கவிதஞ் சொல்லி யழிப்பதெல்லா, மரவியொடுன்கையில் இபுலீசுதான் அறியாச்சுருக்கிட்டு மாட்டுவானே. (501)

(இ-ள்):— அலியவர்கள் ஞானத்தைப்பற்றிசொல்லும்போது எனக்கிதை நமது நபி நாயகம் சொன்னார்கள் என்று உறுதி சொன்னார்கள். அதனால் உலகத்தின் ஞானிகளெல்லாம் பதினான்கு உபதேசங்களையும் சரிவரத் தெரிந்தார்கள். இந்தப் பதினாலு முஷாஹிதாவின் வழியைச் சருகி நடந்த மூடர்களை, அவர்கள் மரண நேரத்தில் இபுலீசானவன் நரகத்து அக்கினி சங்கிலியால் சுருக்குப் போட்டு இழுப்பான். எ-று.

மாட்டைப் பிடுங்கிய கடுங்காகம்போல் மலக்கங் காப்போரு மிரப்போர்களுங், கூட்டி முடிப்பார்கள் விசனமெல்லாம் குப்பா ரென்றறியாமற் கொள்வோரீமான், வாட்டப் படுமந்த நரகந்தனில் வாதைப் படுவார்கள் மீளாரென்றுந், தீட்டு மிருமுனை வாளெடுக்குஞ் சிங்கப்புலிமாமனற்றருளிச்செய்தார். (502)

(இ-ள்):— அலியவர்களுக்கு நபிகள் பெருமானார் அவர்கள் ஞான உபதேசஞ்செய்யும்போது அலியே! இந்த முஷாஹிதாக்களை யறியாத ஜனங்கள் தடையன்றி காபிராக இருக்கும். அவர்கள் அப்படியே சரீரத்தை விட்டு விடுவார்களே யாகில் அவர்கள் நரகத்தின் வேதனைகளை விட்டு ஒருக்காலும் மீட்சி பெற மாட்டார்கள். அவர்களுக்கு மன்னிப்பும் கிடையாது என்று திருவாய் மலர்ந்து சொல்லி இருக்கின்றார்கள். அ-று.

செய்யுமுபதேச முலகத்தோர்க்குச் ஸெய்யி திறசூலுமலிக்குச் சொல்ல, வைய மனுவோர்க்கு மலியார் சொன்னார் வையமனுவோரே குருமார்தம்மைப், பையப் பழகியே மனமறிந்து பஞ்ச வாணுலைத் தீருமென்று, மெய்யுஞ் செயல்கண்டார் பாதந்தொடு மெல்லாஞ் சரியென்றாக் குருவாகுமே. (503)

(இ-ள்):— இவ்விதம் நம்மாண்டவர்கள் சொல்ல அதைக் கேட்டு அலியவர்கள் உலக வாசிகளுக்கு உபதேசஞ்செய்யும்போதே பல பல சமிக்கினைகள் செய்திருக்கிறார்கள். எப்படி என்றால் பாம

அறிவில்லாத ஏழை ஜனங்களே! நீங்கள் வேஷம்போட்டு வருகிற வர்களை யெல்லாம் குருவென்று கையை நீட்டி விடாதீர்கள். பல நாளும் அவர்கள் பால் போய் பழகியவர்களின் செயல்களை மனதில் அறிந்து ஆராய்ந்து பார்த்து நான் சொல்லி இருக்கின்ற நற்சாதனங் கள் அவர்களிடம் உண்டாயிருந்தால் மாத்திரம் கையை கொடுங்கள் என்று வற்புறுத்தி யிருக்கிறார்கள். எ-று.

குருவை யறியாதார் குருடராகும் குருவேகதியென்றுற் கோடி பாவங், குருவே யிறையென்றுற் குபிருமாகுங் குருவே நானென்றுன ரகாளுவா, னுருவை யுடலுமே யூணுறக்க முடையு மலஞ்சல மொதுக்கமாசை, யரிவைசுகமின்ப துன்பம்விடா ரசதி மறதியு மழகுகோலம். (504)

(இ-ள்):—இன்னும் குருவைப்பழகி அறியாதவர்கள் விழி கண் குருடராவார்கள். குருவே கதி என்று அறியாமல் நம்புவார்களானல் கோடாகோடி பாவத்தைச் சுமந்த கழுதையாவார்கள். குருவினல் தனக்குப் பயன்கிடைக்காத பட்சத்தில் அவரை அல்லா என்றும், ஆதி யென்று வீணுகப் புலம்பினல் உடனே காபிராகிப்போவார்கள், குருவுடைய நிலைமையில் என்றுந்தான் அறிந்தாவது கடந்தாவது இல்லாமல் பொய் வேஷந் தரித்துக்கொண்டு உலகத்தாரை மருட்டி நான்தான் குரு என்று சொல்வானுகில், அவன்தான் நரகத்திற்கு முதல் முதல் தள்ளப்படுவான். எ-று.

கோலம் புனைந்துதான் சீராவுள்ள குட்டிச் சுவரைத்தான் குருமாரென்று, லாலம் படைத்தவன் றனக்கொவ்வாதே யண்ணல் முஹம்மது நபிக்கொவ்வாதே, நாலுமறையுடன் ஷறகுநாலு நாலு இமாமுட்னுலு பீருஞ், சீலச் சறகுள்ளோர் தமக்கொவ்வாதே செய்யுஞ் செயனல்ல குருவுமானல். (505)

(இ-ள்):—நல்ல சரீரத்தை வளர்த்து இரவும் பகலும் நித்திரை யில் குரட்டைபாடி, நெய்பால் கறியுடன் வேளைக்கு வேளைத்தின்று வயிறு தொந்திபட்டு, அடிக்கடி பேண்டு மோண்டு, வீடுகளெல்லாம் நாற்றமாக்கி இரவெல்லாம் சௌந்திரிகரமான ஸ்திரிகளுடன் உருண்டு புரண்டு சம்போக இன்பங்களையும் அனுபவித்து அசதி மறதியுடன் மேனியை மினிக்கிக்கொண்டு பகல் வேஷம் போட்டு அறியாத சொற்பமதியுள்ள ஏமாளி ஜனங்களை மிரட்டித் திரிகின்ற திருட்டுத்

குட்டிச் சுவர்களை சற்குரு வென்று கையைக் கொடுத்து விட்டீர்களானால் உங்களை அல்லாவும் லஃனத்துச் செய்வான். அவனுடைய றசூல்மார்களும் திட்டுவார்கள். நாலு வேதங்கள், நாலு மதஹபுகள் நாலு இமாம்கள், நாலு பீர்மார்களும் பதுஆச் செய்வார்கள். எ-று.

நல்ல செயலுள்ள குருமார்தம்மை நாட்டி லுரைத்திடும் வகையே தென்றாற், சொல்லும் ஷறஹதிற் குருவிமாமாஞ் சூழ்ந்த ஜமாத்துப தேசம் பெற்றோர், சொல்லுந் தரீகத்திற் பீரல்லென்று சொன்னாற் குபிரல்லாற் சுகமேயில்லை, நில்லும் ஹகீகத்திற் பீரு நாமு நிலத்தி லுயிரெல்லாஞ் சரியாகுமே. (506)

(இ-ள்):—இப்படி யன்றி நல்ல செயல் உள்ள குருமார்கள் உலகத்தில் எப்படி நடப்பாரேயானால் நபியுடைய ஷரீஅத்திற்கிணங்க நடப்பதும், இஸ்லாமான ஜமாஅத்துகளுக்கு இமாமாக இருப்பதும், உலகத்தில் உள்ள உயிர் ஜந்துக்களைக் கிருபையுடன் அனைத்து ஆதரிப்பதும் அவருடைய சுயகுணமாக இருக்கும். எ-று.

சரியா மஹரிபத் தேறிபாருஞ் சாற்றுங் குருவேரு நாமும் வேறோ, வரிய பெரியோனு மலக்குகளு மண்ணல் முஹம்மதுநபிமார்களு, முரிய படைப்புகள் குலமுநாமு மொன்றே குலமல்லாலு பாதியுண்டோ, தரத்திற் பெரியவர் சிறியவருந் தன்னை யறிந்தவர் தலைவராமே. (507)

(இ-ள்.):—யாரப்பா ஞானம் அறியவந்த மகனே! மஅரிபத்தின் துறைமுகத்தில் நின்று உலகத்தை ஆராய்ந்து பாரு. நப்பூ என்பதும், நபிகள் என்பதும், உலகத்திற் பலபல சமையத்தார்கள் என்றிருப்பதும், நீயும் வேறுபடாமல் எல்லாம் ஒன்றாகவே வந்து கலந்துகொள்ளும். ஆனால் ஒன்றிருக்கிறது. எவன் ஒருத்தன் உலகத்தில் தன் இருதயத்தை உணர்ந்து தன்னைப்பளிங்கியில் முகம் பார்க்குந் தன்மையாகக் கண்டுகொண்டானோ! அவன் எல்லாருக்கும் தலைமைத்தன முடையவனாக இருப்பது மாத்திரம் உண்மை. எ-று.

தலத்தில் வேந்தனா யிருந்ததாலுஞ் சாதி யுயர்த்தியாயிருந்ததாலும், பெலத்தில் வேங்கைபோ லிருந்ததாலும் பெரிய வயதாக விருந்ததாலும், குலத்தி லனந்தம் பேர்பேச்சையாலுங் குறையாத் திரவியங் குவியலாலு, நிலத்திற் சிங்கார வழகினாலு நிறுத்துமுத்தி யோகப் பெலத்தினாலும். (508)

(இ-ள்):— இதன்றி இந்தப் பொய்யான பூலோகத்தில் கிரீடம் தரித்து ஆள்கின்ற சக்ராதிபதியாக இருந்தாலும், ஜாதியில் ஸாதாத்து, அல்லது பிர்மகுலமாய் இருந்தாலும், வேங்கைக் கொப்பான பலாட்டிய வீரனுக இருந்தாலும், ஊர்களுக் கெல்லாம் நாட்டாண்மையுள்ள பெரிய மனுஷனுக இருந்தாலும், மலைகளைப் போல் குவிந்துள்ள திரவிய வந்தனுக இருந்தாலும், நாடெல்லாம் அஞ்சக்கூடிய ராஜ அதிகாரியாக இருந்தாலும், அழகில் யூசுபு நபியை ஒத்திருந்த போதிலும், அதனுல் அவன் யாதொரு பிரயோஜனமும் தன் வாணுளுக்குத் தேடிக் கொள்ள ஏலாதே ஏலாது. மரண நேரம் வந்து விடுமேயானுல் ஒரு உப்புக்கல்லுக்கும் மதிக்கப்படாத கம்மி நாட்டி போல் பறக்கப்பறக்க முழிப்பான். எ-று.

ஓர்மை குறையாம லச்சந்தீர்ந்தே யுலகிலுயிரெல்லா மொன்றே யென்றும், ஆர்க்குங் கிருபையாய் நடப்பதுவு மநேகங் கொடுமையும் பொறுப்பதும், பாரில் வழிகெட்ட மனுடர்க் கெல்லாம் பரிவா மறிவதைப் பயிற்றி வைத்தே, ஆர்க்கு மூடனுய் வெளியிற்றோன்ற வறிவுக் கடலெல்லா மடக்குவானே. (509)

(இ-ள்):— எந்தக் குலத்தில் பிறந்த ஈனஜாதியானுலும், அவன் கூர்மையான புத்தியுடன் காரியமான ஞானத்தை யுணர்ந்து கொள் வானுனல் உலகத்தி லுண்டான சிருஷ்டிப் பொருட்க ளெல்லாம் அவனை தலை சாய்த்து வணங்குவதுடன் எல்லாம் அவனுகவும் அவன் எல்லா ஜீவத்திலும் சங்கிலித்துடர் போலப் பொருந்தி இருக்கவும் காண்பான். அப்போது தான் இந்த மாயா விநோதை வலையில் சிக்காமல் தப்பித்துக் கொண்ட ஒரு பெரிய காரியத்தை உள்ளுக்குள்ளே நினைத்து பரவச சாகரத்தில் கிடந்து மிதப்பான். எ-று.

நாலு வேதமுஞ் சுமந்ததாலு நளினங் குறையாத மொழி யினுலும், கால மொருநூறு தலை முறையாய்க் காமில்த் தனமாக வந்ததாலு, மால நிறைந்திடுங் குருமாரெல்லா மனேக விதமெல்லாங் கொடுத்ததாலுங், கோலம் புனைந்திடுங் குருவுமாகுங் குருவென்று உரைத்திடக்காபிராமே. (510)

(இ-ள்):— இன்னும் கல்விமான்களைப் பற்றிச் சொல்கிறேன் நாலு வேதங்களையும் ஐயந்திரிபறக் கற்றதாலும், அவைகளின் உள்ளுறைந்த அர்த்தங்கள் ஆழமாகத் தோண்டித்துருவி யறிய சோம்பேறித்தனங் கொண்டு துனிப்பில்லை மேய்ந்த மாடுகளைப்

போல் பட்டணக் கரைகளிற் சென்று பிரசங்கங்கள் செய்து ஜனங்கள் சொல்லும் புகழ்ச்சிகளைப் பெற்றுக் கொண்ட போதிலும் ஒரு ஜாண் அளவுள்ள பாழும் வயிற்றை வளர்த்துக் கொள்ளும் பொருட்டு ஜனங்களிடத்தில் தேனை வளர்ப்பது போல இனிய மதுரமான வார்த்தைகளைப் பேசித் திரிந்தாலும், இன்னும் நூறு தலை முறைகளாக காமில்த்தனமான ஷெய்கு மார்களின் வம்மிஷத்தில் உள்ளவனாக இருந்த போதைக்கும், இன்னும் ஆயிரம் குருமார்களிடத்தில் தனித்தனியே உபதேசம் பெற்ற அடையாளங்கள் உள்ளவனாக இருந்த போதிலும், அவன் போட்டிருக்கும் வேஷந்தான் குருவென்கிற ஒரு பொய்ப் பெயரைக் கொடுக்குமேயன்றி அவனைக் குருவென்று உறுதி கொண்டால் அத்தக் கூட்டத்தார்கள் காபிராக இருப்பார்கள். எ-று.

குருவை யறியவு மறிவேதென்றூர் கோல மெவர் பேசலு மவரிருப்பார், உருகுங் கிருபையு மீவிரக்க மொன்றுந் தெரியாதே யெனக்கே யென்பா, ரறிவை புருஷர்க்குஞ் சரிசிதானம் அல்லும் பகலுமே சரிசிதான, மொருமூச்சாகிலு மொழுகிடாம லுருவா முடலுயி ரோர்மையுள்ளார். (511)

(இ-ள்):— அன்றி காமிலான குருமார்கள் எவ்விதம் இருப்பார்கள் என்றால், ஜீவராசிகளின் பேரில் சமரசமான கிருபையுள்ளவர்களாகவும், மனிதர்கள் பேரில் ஈவு, இரக்கம், பொறுமை, தலை வணக்கம் உள்ளவர்களாகவும், மனிதர் கூடிய ஜமாஅத்துக்குத் தாங்கள் வர அதனால் ஜனங்கள் மரியாதைகள் செய்ய விருப்பமில்லாத ஒதுங்கிய குணமுள்ளவர்களாகவும், எனக்கு ஒன்றுந் தெரியாது நான் அறிவில்லாதவன் என்று சொல்கிறவர்களாகவும், நிர்விசாரி, நிர்க்காமி, அதாவது மனதில் எண்ணமற்ற ஆனந்தியாகவும், ஸ்திரீகள் பேரில் மோக மில்லாதவர்களாகவும், ஏழைகளும் சீமான்களும் சரிசிதானமாகக் கண்டவர்களாகவும், ஒரு மூச்சையாகிலும் றப்புடைய நினைவன்றி வீணாக்காதவர்களாகவும், எந்த விஷயத் உண்மையே சொல்லப்பட்டவர்களாகவும், கபடில்லாத பேதமை யுள்ளவர்களாகவும், இருப்பார்கள். எ-று.

அடக்க முடைய ரறிவுடையோ ரவரே குருவென்று மறியலாகு மெடுக்கும் ஷறகுள்ள பாதை நாலு மெட்டுமக்கா முடனிவ்வகையுக், தொடுக்குக் தவநிலை பலஞானமுந் தொகையிலடங்காத தொலையாப் பொரு, ளடக்குமுறை யெல்லாங் குருவின்மார்க்கு காயன் முஹம்மது கபி சொன்னரே. (512)

(இ-ள்):— இவ்விதம் அடக்க முடையவர்களிடத்தில் தான் ஞானமென்கிற திரவியம் பெருகி இருக்கும். ஆனபடியாலே இவர்களைத்தான் குருவென்று நம்ப வேண்டும். ஷரீஅத்திலுள்ள நான்கு மதஹபுகளையும், எட்டு மகாம்களின் இரகசியங்களையும், பல பல நிஷ்டை கற்பாஸானங்களின் விதிவிலக்குகளையும், மனிதர்கள் ஞானத்தைப் பற்றிக் கேட்கும் எவ்வித வினாக்களுக்கும், உடனே விடை சொல்லும் உணர்ச்சியும் பகுத்து விளங்கி இருப்பவர்கள் தான் குருமார்களுக்கு லாயக்குள்ளவர்களாவார்கள். எ-று.

நபியா முஹம்மது முலகோர்க்கெல்லா நவின்ற வுபதேசந் தன்னைக்கேளும், புவியின் மனுவெல்லாந் தனைவணங்கப் புருக்கான் றனை வல்லோ னிறக்கி வைத்தான், பவமதாகாமற் படைப்பனைத்தும் பாதை யறிந்துதான் பணியச்சொல்லிக், கவியின் மறைகாஸிற் சொன்னபடி ஹபீபு முஹம்மது நபியுஞ்சொன்னார். (513)

(இ-ள்):— நபிநாயகம் அவர்கள் சொல்லி யிருக்கிறதாவது பூலோகத்தில் உள்ள மானுடர்கள் தன்னை வணங்கும்படியாக றப்பு குர்ஆன் என்கிற வேதத்தை இறக்கினான். அந்த வேதத்தில் உண்மையான அர்த்தங்கண்டு வணங்கும்படியாக அநேகத் தானங்களில் திருவுளமானான். அந்த ரகசியங்களைக் கலிமாவில் வந்து அறியும்படியாக சயிக்கினை பண்ணினான் என்று சொன்னார்கள் எ-று.

சொல்லுங் கலிமாத்தான் லாயிலாஹ இல்லல்லாப் பொருள் மஹரிபத்திற், சொல்லுங் கூவென்ற மூச்சுறாகு சோதி யாரென்றால் அல்லா அது, இல்லென்றுரைப்பது மொன்றே பொருளெங்கும் நிறைந்தது மதுதானென்றும், இலாகியினி யில்லை இஃதொழிய வெங்கும் வேரில்லை லாவென்ற சொல். (514)

(இ-ள்):— கலிமாவில் லாஇலாஹ இல்லல்லாவின் பொருளாவது மஅரிபாவில் ஹூ என்கிற சுவாசத்துடன் றாஹாகிறது "கருத்தாவது" அல்லாவாக இருக்கும். இல் என்கிற கலிமாவாகிறது ஒரு பொருளாக இருக்கும் அது எங்கையும் நிரம்பிய சமதாக இருக்கிறது. இல்லாஹி என்பதின் பொருளாவது அது ஒழிய வேறில்லை என்பதாம். லாவென்பதின் பொருளாவது, நானில்லை மற்றவைகளும் இல்லை, உண்டும் என்ற வஸ்து அதுதான். எ-று.

சொல்லுங் கலிமாத்தான் லாஇலாஹ இல்லல்லாகென்றால் ஷரீஅத்தாகும், இல்லல்லா கூவுதான் தரீகத்தாகும் இன்னல்லா கூ ஹக்கீகத்தாகும், சொல்லுங் கூவென்றால் மஹரிபத்தாஞ் சுழியா முஹப்பத்து யாகூவாகும், எல்லா கிறுத்திய கூவுமீமும் இருந்தி நினைவிலே மிகுதிதாத்து. (515)

(இ-ள்):— லாஇலாஹ இல்லல்லாஹு என்ற கலிமாவாகின்றது ஷரீஅத்தாக இருக்கும். இல்லல்லாஹு வென்றது தரீகத்தாக இருக்கும். இன்னல்லாஹு என்பது ஹக்கீகத்தாக இருக்கும். ஹு என்பது மஅரிபத்தாக இருக்கும். யாஹு வென்பதுதான் முஹப்பத்தாக இருக்கும். இவைகள் ஒவ்வொன்றையும் நினைவில் நிறுத்திப் பழகி வந்து யாஹு உடன் மீமையும் நினைவிற் கலக்கச் செய்வது இஹ்த்திதாத்தாக இருக்கும். ஏ-று.

எத்தி வாய்மொழி செவியிற் கேட்க வெதுவுஞ் ஷரீஅத்தைச் சேருமிது, பார்த்துப் பலகலைப் பொருளை யெல்லாம் பகுந்தாற் றரீகத்தின் பாங்குமாகு, கோர்த்தி வணக்கத்தின் றெரிசனை தானிறுத்தும் ஹகீகத்தி னிலையுமாகும், பார்த்தும் பலமொழி யுடலுயிரும் பகுந்தால் மஹரிபத்தாகுந் தானே. (516)

(இ-ள்):— எந்த தவ்ஹிதாகிலுஞ்சரி ஒருவர் சொல்ல செவியிற் கேட்டுக் கொள்வது ஷரீஅத்தில் சேருகிறது. கேட்டதை அர்த்தந் தெரிந்து ஆராய்வது தரீகத்தைச் சேருகிறது. அதை உறுதிப் படுத்தி அமல் செய்கிறது, ஹகீகத்தில் சேருகிறது. அதை சந்தேகமற உணர்ந்து ஒன்றுபடுத்துவது மஅரிபத்தில் சேருகிறது. (இன்னும்)

தானே யுருவமு முடலுமொன்றாய்த் தருக்கி கிணங்கிடில் முஹப்பத்தாகும், சுணமணுகாதான் றனெனவே யெல்லா நிப்பரமு நிறையுமாகிற், றுறை யிருப்பது சமதெனவே தரிக்கு நினைவிலே மிகுதிதாத்து, மீனமணுகாத நினைவே அல்லா வெத்தவித மென்று மியம்பக்கேளே. (517)

(இ-ள்):— அப்பால் தான் என்பதை பனுவாக இல்லாமல் ஒழித்து நிலைபட்டிருக்கிற வஸ்து எதுவோ! அதுடன் கலந்து விரவிக் கொள்வது முஹப்பத்தில் போய்ச் சேருகின்றது. அப்படிக் கலந்து கொண்ட பிறகு தான், எல்லா உலகங்களிலும் உள்ள ஜீவஜந்துக்கள் முதலிய சராசரங்களிலும் இருந்து பிரகாசிப்பது லமதில் போய்ச்

சேருகிறது; அப்படி ஸமதான நினைவுதான் றப்பில் தரிபடுகிறது, அதுதான் இஹ்த்திதாத்தில் சேருகிறது. எ-று.

இயம்பக்கேளுங்காண் குர்ஆனிலே யேக னிறக்கிய ஆயத்தொன்றில், நயமாம் லிக்கஅ றப்புயென்று நாயனிலையிலோர் நினைவேயென்று, மியம்புந் தவமெல்லா நினைவேயாகும் இபாதத்து றப்பி அஹதா யென்றார், செயமாயறைந்திடு மறுசுதனிற் சிறந்த சின்தீலாய் வகுத்த வல்லோன். (518)

(இ-ள்):— அப்போது றப்பு என்பது எவ்விதம் இருக்கு மானால் சொல்கிறேன் கேள். குர்ஆனில் ஒரு ஆயத்தில் ஹக்கஆலா திருவுளம் பற்றியதாவது "லிக்கா அறப்பி" அல்லாவானவன் துபீபுறவாகிய நிலையில் ஒரு நினைவாக இருக்கிறுன், என்று சொல்லப்படுவதுபோல எல்லா ரஹஸியங்களும் அந்த நினைவில் தான் வெளியாகும். அதுதான் அஹதுடைய இபாதத்தாக இருக்கும். எ-று.

வல்லோன் குதறத்தா லறுசுதனில் வள்ளல் முஹம்மதை கிந்தீலாக்கிச், சொல்லத் தொலையாத தருக்கிக்குடன் சுருபம் பதினறு முகவிளக்காய், நல்ல பதினறு முகமிலங்க நாட்டும் பதினறுமிபாதத்தாக, வெல்லும் பதினறு இல்முமாகும் விளக்கம் பதினறு வழியாகுமே. (519)

(இ-ள்):— றப்புடைய குதறத்தாலே அறுஷில் நூறல் முஹம்மதியாவை பதினன்கு முகமுள்ள விளக்காய் கொழுகி யிருந்தான். அந்தப் பதினன்கு முகங்களும் பதினன்கு இபாதத்தாகி, அப்பால் அது பதினன்கு இல்மாகிஅப்பால் அது பதினன்கு கான்வாதாக்களாகி, அப்பால் அது பதினறு முஷாஹிதாவாகி, அப்பா லதில் இருபத்தெட்டுவித நிஷ்டை கற்பாசனங்களாகி, அதிலே ஆறு வித முஷாஹிதாக்கள் அந்தரமாகி, அதில் ஒன்று எல்லாவற்றிற்கும் நாயகத்தன்மையிலாகிவிட்டது. எ-று.

றாஹா வகை முற்றிற்று.

---

# பதினன்கு முஷாஹிதாவின் விபரம்.

பதினலு விதக்கான்வாதானும் பதினலுவித முஷாஹதாவும், மதினலுடன்கூடப் பதினலுண்டும் பாங்கு பெருமியா நிங்கிருபத் தெட்டு, மதிலே பதினலு முஷாஹதாவில் ஆறு முஷாஹதா அந்திரமாம் விதமா முஷாஹதா யாதுக்கெல்லாம் வெற்றிக்காண்வாதா செய்யுதுசைன். (520)

(இ-ள்):— பதினன்கு வகைப்பட்ட கான்வாதாக்களும், பதினன்கு விதமான முஷாஹிதா என்னும் நிஷ்டைகளிலும், ஒன்று பட்டதாக அதன்கூட பதினலுவித இருப்புசமாதியங்கள் உண்டு. இவைகளில் இருபத்தெட்டு யாதுகள் உண்டு. ஷெ பதினலு நிஷ்டைகளிலும் ஆறு நிஷ்டை ரஹசிய பொருளாக இருக்கிறது அதுவே மேற்கூறிய எல்லா நிஷ்டைகளுக்கும் தலையாக இருக்கிறது. எ-று.

செய்யிது ஸாதாத்து பாக்கியாகும் செய்யிது சுல்த்தானுல் ஆரிபாகும், செய்யிது அல்பியா றூபியாகும் ஸெறூரியா சுல்தானுல் பாக்கியாகும், செய்யிது சுல்பியா ரூபியாகும் செய்யிது காத்றி புல்க் கிபுரியாகும், செய்யிது முருக்கிபுல் றபாயியாகும் செய்யிது அல்பியா காதிரியாகும், செய்யிது ஈஸ்தா சிற்றியாகும் தபக்காத்தியா சிற்றியாகுமாமே. (521)

(இ-ள்):— பாக்கியா, ஆரிபிய்யா, அல்பியா, றூபிய்யா, ஸஹுரிய்யா, சுல்தானுல் பாக்கிய்யா, ஸுல்பியா, காத்திபுல் கிபுரியா, முருக்கிபுல் றபாகியா, அல்பியா, காதிரீயா, ஸஸ்தியா, சிர்றியா தபக்காத்தியா இந்தப் பதினன்கு கான்வாதாக்களாக இருக்கும். எ-று

சிற்றியாவுடன் காதிரியாய்ச் சிறப்பாங்கான் வாதா பதின் மூன்றுக்கு, மூயர்த்தி ரூஹுனி யாசமாகு மொருபத்து மூன்றுக குயர்த்தியாகும் உயர்த்திக்கான்வாதா பதினலுக்குள் விளங்கு முஷாஹதாய் பதினலேயும், சத்தியமாகச் சொல்லுகிறேன் சலக் வித்தையுமறிந்துபாரே. (522)

(இ-ள்):— இவைகள் எல்லாவற்றிற்கு சிர்றியாவும், காதிரிய்யாவும் தலைமைத் தனமுடையது. ஆகிலும் பதினலு

கான்வாதாக்களும் மேன்மை பெற்றவைகள் தான். இவைகளுக்குள்ளே தான் பதினாலு முஷாஹிதாக்கள் அடங்கி இருக்கின்றன. இதைச்சத்தியமாக நீ இபாதத்துச் செய்து உன்னை கண்டு கொள்வாயாக. எ-று.

பாரி விசுமியா வரசிலென்று பறக்கும் சிஸ்த்தியாக் கற்ப முண்டால், ரூத்தி புல்க்கனி சன்னதமா மஸ்துக் குபுரியா வெட்டுக் குத்துத், தரித்த மந்தாரி சுச்சடக்கந்தாபதண்டமு முளவணக்க, முறைத்த முஷாஹதா ஆறுமிதே யோர்மை நிலைக்கெட்ட அக்கிரமே. (523)

(இ-ள்):— இவைகள் பதினாலுமன்றி வேறு பதினன்கும் இருக்கின்றன. அவைகளில் இஸ்மியா, வாசி பிடிக்கிறது, சிஷ்த்தியா காய கற்பமுண்கின்றது, ரூத்திமிய்யா கூத்தாடுகிறது, சன்னதியா சங்கீதம் கேட்கின்றது, மஸ்தகிபுரியா வெட்டுக்குத்து செய்கிறது, மதாரிய்யா சுவாசத்தை அடக்கி அண்ட பிண்டமும் முட்டவிடுகிறது, இந்த ஆறுமுஷாஹிதாவும் தான் அக்கிரமான நிஷ்டைகள். எ-று.

மேலாம் நாசூத்து மலக்கூத்துடன் விளங்குஞ் ஜெபறூத்துலா கூத்துமாங், கோலஞ் ஜம்கூத்துப் பாகூத்துடன் குதறத்துலா கூத்து தம்கூத்துமா, மேலாம் வணக்கமா யொன்றுக்கொன்று விதமாய்ப் பதினாலு மறியாதவர், கோலம் புனைந்துதான் குருமா ரென்று குபிரில் வருத்துவார் பரமறியார். (524)

(இ-ள்):— நாசூத்து, மலகூத்து, ஜெபறூத்து, லாகூத்து ஜெம்கூத்து, பாகூத்து, குதுறத்து தம் ஹூத்து, ஆகிய இந்த மேலான வணக்கங்களை ஒன்றொன்றாகப் படி படி ஏறி நிற்பது தான் பதினன்கு முஷாஹிதாவின் வணக்கம் என்பது. இந்த வணக்கங்களிற் பழகி காட்சி சொரூபம் காணாத மோட்டுப் பயல்கள் நான் குருவென்பானாகில் திட்டமாக அவன்கள் ஷெய்தானாகவும், காபிராகவும் இருப்பான். எ-று.

பரத்தை யறியவே பலவிதமாய்ப் பாரிற் குருமார்கள் பகர் வதெல்லாம், நிறத்த கதிர்மதி நினைத்தபடி நிழலும் பரவெளி நக்ஷத்திரக். கிரத்த கண்ணாடி திருவுளத்தைத் திசைவீ சொரு பேரையிருவிழியே, நிறைத்த வன்னத்தை நிலைநிறுத்த நிசமா யிருவருங்காபிராவர். (525)

(இ-ள்):—இப்பேர்ப்பட்ட வழியை நேர்பாதையாக அறிவிக்கத் தெரியாதபடி உலகத்தில் பலவிதப்பட்ட குருமார்கள் தம்

முரீதுகளுக்கு சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், கண்ணுடி முதலியதுகளால் றப்பைக்காட்டுவார்கள், அவ்விதம் குருமார்களும் முரீதும் காபிர்களாக இருக்கும். எ-று.

ஆன குருமுறை யுலகுதனி னருளும் பதினறு விதங் களெல்லாம், பூணிப்பாகவே புகழ்வதற்குப்பெ பாருளாங் கலிமாவைப் பிரித்துச்சொல்வேன், இன்னம் அல்லாஹுஎ முஹம்மதுதம் எந்த வழிக்குமே யிதுகிலையாஞ், சொன்ன கலிமாத்தான் லாஇலாஹ இல்லல்லாஹுதான் சொல்வதாமே. (526)

(இ-ள்):— குருமுறையாகிறது இந்தப்பதினுல் முஷாஹி தாக்களைச் சேர்ந்து தான் இருக்கவேண்டும். இன்னும் கலிமாவில் அல்லாஹுஎ என்பது முஹம்மதாகும், எந்தகுரு நிலைக்கும் இதுவே நிலையாக இருக்கும். எ-று.

சொல்லும் பதினறு பீர்மார்களுஞ் சொல்லு முபதேச மிருபத் தெட்டு, மெல்லாருஞ் சொல்வாரெவர்க்கு முண்டு மிதுவே ஷரீஅத்தி னுபதேசந்தா, னெல்லாக் கலிமாவு மிறைநாமமு மெங்கள் முஹம்மது வரமாமென்றும், இல்லல்லாஹுவென் றேயிருந்த இது தான் ஷரீஹத்துப தேசமஞ்சே. (527)

(இ-ள்):—பதினன்கு பீர்மார்களுஞ் சொல்லிக்கொடுக்கின்ற விஷயங்கள் இருபத்தெட்டாக இருக்கும். காமிலான குருமார்கள் யாவரும் இந்த முறைகளைத்தான் சொல்லுவார்கள். இது ஐந்துந் தான் ஷரீஅத்துக்கு உகந்தது. எ-று.

அஞ்சு உபதேசஞ் ஷரீஅத்தாகு மறியும் இல்லல்லாஹு வென்னவுங், கொஞ்சம் அல்லாஹு ஹக்கல்லாஹு கூறுந்தாகத்தின் குருமந்திர, மிஞ்சு மகுறாபும் யாக்கரீமும் அர்ற கிமுடன் யாறஹீமும், துஞ்சா வகை ஹக்கு மவுஜூதென்றுக் தோத்திர மஞ்சும் ஹக்கிகத்தாகும். (528)

(இ-ள்):—இன்னும் ஷரீஅத்தில் ஐந்து விதமான உபதேச முண்டு. அவைகள் இல்லல்லாஹு எனவும், ஹக்கல்லாஹ் எனவும், மஉறாபுல்கரீம், அர்றஹீம், பாறஹீம், யாமவ்ஜூது, என்பவைகளாம். இதில் காண்கும் தோத்திரங்கள், ஹகிகத்தாக இருக்கும். எ-று.

அஞ்சு தோத்திரம் குன்கூவென்று மதிலே குன்னென்றுகூ வல்லாவென்று, மிஞ்சிடாமலே கூவென்பதும் இணைத்த கூவுடன்

ஹக்கென்பதும், அஞ்சு மிதுதானே மஹரிபத்து ஆகியெனச் சொல்லும் கூஅதுவும், அஞ்சியாகூவும் யாகூவல்லா அறியமுகப் பத்துயாகூவுமீமும். (529)

(இ-ள்):— தோத்திரங்களாவன குன்ஹூ வென்றும், குன் என்றும், ஹூ அல்லா வென்றும், ஹூ வென்றும், ஹக்கென்றும் இந்த ஐந்து மஹரிபத்தாக இருக்கும். இனி ஹூவும், யாஹூவும், யா அல்லாவும், யாஹூமீம் என்பதும் முஹப்பத்தாக இருக்கும். எ-று.

யாகூவு மீமு மாகு மென்று மிது தான் முஹப்பத்து நிலையு மாகும், வாய் விடாமலே ஹேயும் மீமும் வருந்தி கும்மென்றே யிருத்துவதுங், ஆயும் காபோடு மீமும் கூட்டியதுவே கும் மென்றே யிருத்துவதும், தாயுமாகவே யோரெழுத்தைத் தரிக்கு மீமல்லோ முகுதிதாத்து. (530)

(இ-ள்):— யாஹூமீம் என்பது தான் முஹப்பத்துடைய நிலையாக இருக்கும். அதை வாயால் சொல்லாமல் கும்! என்று இருதயத்தில் இருத்திக் கொள்வதும் காபும் மீமும் கூட்டி நினைத்து அதையும் கும்! என்று இருத்துவதும், எந்நாளும் பழக்கத்தில் நின்று செய்கிறது, மீமைக் கண்டு கொள்வதும், ஞானமாகும். எ-று.

யாது வகையாகு மிருபத்தெட்டும் யாது ஹக்குமே லேது மில்லை, யாது வாய்மூடு மீமல்லவோ இது தான் வாய் பேசா தெழுத் தென்பதே, யோதியோதியே பெரியோர் சொல்லு மூமையெழுத் தென்றமீமது தான், சோதி மீமது கூவது தான் சொல்லு முஹம்மது அல்லாவிதே. (531)

(இ-ள்):— ஆனால் நினைவில் வைப்பது இருபத்தெட்டு வகை யுண்டும். அவைகளில் ஹக்கை நினைப்பதுக்கு மேல் எதுவுங் கிடையாது. இன்னும் மீமை யாது படுத்துவதும் மேலானது இது தான் ஊமை எழுத்தென்பது. இன்னும் ஹூ வென்பதும் மீம் தான் அதுவே நப்புமாகும். எ-று.

இது தான் பதினாலு வுபதேசமா யெடுத்துப் பதினாலு குருவுஞ் சொல்வார், அதிலே தவமுறை யைத்துவிதம் அறையுத் தஜல்லியும் விரித்துச் சொல்வே, னிதமே முடஆமாய்த் தலை சுழற்றி நீளக் குரலோசை தஜல்லியாமே. (532)

(இ-ள்):— இதைத் தான் பதினாலு பீர்மார்களும் உபதேசிப்பார்கள். அதிலே ஐந்து விதமான தவங்கள் உண்டு. அவைகள் தஜல்லி, கல்பி, றூஹு, சிர்றி, கபீ இவைகளாக இருக்கும். இவைகளில் தஜல்லி என்பது தலையை அசையாமல் சுவாசத்தை நினைவில் பூட்டுகிறது. எ-று.

ஆன வணக்கத்தா னவரவர்க்கு மல்லும் பகலுந்தான் கல்பியாகுந், தானே வணங்கிடு மூச்சை யெல்லாந் தவறு நிலைப்பட்ட மூகியாகும், ஊணி நினைவெல்லா மொருபொருளை யொருமித்திருப்பது சிர்றியாகும், தானே தானல்லாமல் வேறொன்றில்லை தன்னை யறிவது கபியுமாமே. (533)

(இ-ள்):— கல்பியாகிறது, இரவும் பகலும் இருதய ஞாபகத்தில் இருக்கிறது. விடுகிற மூச்சுகளில் ஒன்றையாவது வீணாக்காமல் றப்பை நினைப்பது றூஹியாகும். சிர்றியாகிறது, வருகிற நினைவுகளை ஒருமையில் வைத்துச் சாதிப்பது, றப்பென்பதும் உலக மென்பதும் நாம் தானே யன்றி வேறு இல்லை என்று நீக்க மற்ற வைராக்கியம் பிடித்து முன்னேறுவதே கபீ என்பதாக இருக்கும். எ-று.

கவியுந் தலத்திலே யெட்டுவகை காணு நாசூத்து மலகூத்துடன் குவியுஞ் ஜெபறூத்து லாகூத்துடன் கோலம் ஜெம்கூத்து பாகூத்துடன், தவியா காகூத்து தம்கூத்துமாந் தலமு மிருநான்கு மக்காமிதுவாம், புவியி னிறைந்திடுங் குருமார்களே புகலுமிரு நான்குதலமுங்கேளும். (534)

(இ-ள்):—இன்னும் தலங்களில் எட்டு வகைகள் இருக்கின்றன. அவைகளாவன, நாசூத்து, மலக்கூத்து, ஜெபறூத்து, லாஹூத்து ஜெம்ஹூத்து, பாஹூத்து, ஹா ஹூத்து, தம்ஹூத்து, இந்த எட்டு மகாம்களாக இருக்கும். ஓ! குருமார்களே! இனி இவைகளின் ஸ்தலங்களை விபரிக்கிறேன். அறிந்துக் கொள்ளுங்கள். எ-று.

தவமாநாசூத்துப் பரவெளியாந் தனது இடப்புறமார்புமாகு, நிலையாம் ஷரீஹத்து மண்ணின்கோல நீதி ஆதந்தான் புரூவின் ரூபந், தலையை வலமாகச் சுழற்றித்திக்கீர் தரிக்கு நெஞ்சிலே பார்வையாக, நிலையா யிருவிழி யிடதுமார்பி னிறுத்தும் பிசுமிலோர் நினைவின் மேலே. (535)

(இ-ள்):— நாசூத்து என்பது திறந்தவெளி அது இடது புறத்து மார்பாக இருக்கும். அது ஷரீஅத்து, பூதம், மண், உருவம், ஆதம், அறுவாஹ, புரூ, பிஸ்மில் என்கிற திக்றை இடது புறத்து மார்பில் பார்வையை வைத்து, நினைவை நிறுத்துகிறதாக இருக்கும். எ-று.

மேலா மலகூத்து குயில்மாடமும் விளம்பு மிருகோணந்தரித் திருக்குங், கோலமிருநாசி நடுநிலையிற் கொழுத்திப் பார்வையிற் குருவைகாட்டிச், செல்லுமலக்குட பார்வையாகுஞ் சேருந் தவத்தோடே சரத்தையேற்றி, யெல்லாத் தவநிலை மலக்கூத்தென்றே யிருக்குஞ் ஜெபறூத்தை விளம்பக்கேளே. (536)

(இ-ள்):— இனி மலக்கூத்தானது, அறுவாஹ, குயில், ஸ்தானம் மூக்கு, பார்வை மலக்கு, சுவாசத்தை நினைவில் பொருத்திப் பார்க்கின்றதாக இருக்கும். மார்க்கம் தரீகத்து. எ-று.

கேள்வி ஜெபறூத்துக் கண்ணாடியாங் கீழு முக்கோண நெருப்பின் வீடு, மீளும் ஹகீகத்து மிருபார்வையும் விளக்கும் புருவத்தி னிடையை நோக்கிச், சூழு மாகாயம் அன்னரூபஞ் சுரூபம் அலிபென்ற நிலையுமாக, நாளுஞ் ஜெபறூத்து நிலையுமாகு நவிலு மலக்கூத்தை நன்றாய்ப்பாரே. (537)

(இ-ள்):— ஜெபறூத்தென்பது ஸ்தானம் கண், அது முக்கோணமாகிய ஞானக்கண்ணும் சேர்ந்தது. அது நெருப்புடைய வீடாக இருக்கிறது. மார்க்கம் ஹக்கீகத்து. அறுவாஹில் அது அன்னத்தின் ரூபமாய் யிருந்தது. அலிபு என்கிற நிலையை யுடையதாக இருக்கின்றது. எ-று.

பார்வை யிருவிழி சுழற்றிக்கீழே பள்ளி மக்காமிலே பகருங் காற்றுக், கூறு மலகூத்து மஹரிபத்தாங் கோல நுபுவத்தின் குறி தெரியுந், தேறு மலக்கூத்துக்காட்சியெல்லாஞ் சிறந்தவழி யெல்லாம் பொருவுமதில், நாறு விதங்காணு மலக்கூத்திலே நுவலுஞ் ஜெம் கூத்தை நோக்கிப்பாரே. (538)

(இ-ள்):— லாஹூத்தானது இரண்டு விழிகளுக்கும் நடுவே உள்ள பள்ளியாக இருக்கும். சொரூபம் காற்று, மார்க்கமானது, மஃரிபத்தாக இருக்கும். அதுதான் றஸூலுல்லா அவர்களின் நுபுவ்வத்து, அந்த மகாமில்தான் இன்ஸானுடைய சிர்றுகள்யாவும் வெளியாகும். அதைமதிப்பிட யாராலும்கூடாத காரியமாக இருக்கிறது. எ-று.

பாரும் ஜெம்கூத்து முஹப்பத்துமாம் பதித்த வுயிர் ரூத்தா புதையங்காணு, மேலும் விழித்தாரை நிலையிற்சேர்க்க விலங்கும் பொருள் றப்பில் ஆலமீனும், ஆருக் நவமெல்லா நபியிறசூலதுதான் றூருட பாங்குமர்கும், பாரும் விழிமூடி நினைவினுலே பாரப்பா கூத்தைப் பகரக்கேளே. (539)

(இ-ள்):— ஜெம்ஹூறூத்துடைய மகாமாகிறது முஹப்பத்தாக இருக்கும். அதில் ரூதுபுதையமானது தோன்றும். கண்களைச் சுருட்டி இருபுருவத்திற்கும் நடுமத்தியில் உயர்த்தும்போது றப்புடைய பிரகாசமானது பளிரென்று வீசும், முஹம்மதியாவின் கோலமானது அதுவே ஆக இருக்கிறது. அதில்தான் றூஹூல் குதுசியும் இருக்கின்றது. ஆனபடியால் மகனே! நீ அதளவில் கருசுருப்பு வைத்து உன் இரண்டு பார்வைகளையும் உயர்த்தினவஞ்க ஞாபகம் வை. எ-று.

பாரும் பாகூத்து முஹப்பத்தென்று பதினலு வித றுபுவ்வத் தாகுங், கூறும் றூஹானி யுதிர்வதுபோற் சொமுகி விளக்கிலே நிறுத்திப்பார்க்க, ஆரும் விளம்பாரே முஹம்மதுட வழகு விறைய வன்வணக்கமாகு, நேராய் விழிமூடி நினைவிற்பாரு நீதியாகூத்தை நிசமாய்ச்சொல்வேன். (540)

(இ-ள்) பாஹூத்தும் முஹப்பத்தில் உள்ளதென்றாலும் அது பதினன்கு விதமான றுபுவத்தை யுடையதாயிருக்கின்றது. றூஹானிகளென்றும் தத்துவாதிகள் அதிலேதான் கொமுகியாடு கின்றன. அதை யுணர்ந்து உன் இருதயத்தில் நினைவைக்கொமுகிப் பார். அப்போது நூறுல் முஹம்மதியாவானது முகவரை கிருத ஒரு வாலிப கன்னிகையின் உருவத்தில் வெளியாகும். அதுதான் இறைய வனுடைய ஞான வணக்கமாக இருக்கிறது. இந்த சங்கதியை உலகத்தில் யாராலும் சொல்ல சக்தி கிடையாது- இந்த மகாமில் இரு கண்களையும்மூடி, சமவெளியாயாக்கிக் கொண்டு நினைவில்கூடி கலக்கவேண்டும். எ-று.

நிசமாயாகூத்தை மூருநிதாத்து நிற்கும் குதுசியா முருவம் ரண்டும், வசமாங் குதறத்தின் வாசிலாத்து வரையும் றுபுவ்வத்து சிபத்துமாகும், பிசகா வுயிர்நிலை ஆவும்கூவும் பேசு மொழியிலே பறுலு சுன்னத்து, கசகா நினைவான பார்வைகாணுங் கருத்தி லறிவது காட்சியாமே. (541)

(இ-ள்):—பாஹூத்தானது றூஹூல் குதுஸியுடைய இஹ்த்தி தாத்து இரண்டுமாக இருக்கிறது. இன்னும் அது குதறத்துடைய வாசிலாத்தாகவும், நுபுவத்தாகவும், தாத்தாகவும், சிபாத்தாகவும் இருக்கின்றது. இருதய ஸ்தம்பத்தில் ஹா ஹூவென்று திக்று செய்து வாயாலே மொழிந்து பறுலு சுன்னத்தாக தொழுது வர வேண்டியது. எ-று.

காட்சிதம் கூத்து முகுஜீதாத்து ஹக்குத் தானல்லா லொரு வருண்டோ, பேச்சு மூச்சுமவன் பேருமவன் பெலமுங்கோபமும வனே யாகுஞ், சூட்ச மவனிவனென்று சொல்லுஞ் சொல்லுஞ் செயலாக வழங்கி கிற்குந், தாழ்ச்சி ரட்சியும் பாவத்தனை தாந்திலுயி ரெல்லாம் பரத்தினாலே. (542)

(இ-ள்):—தம்ஹூத்தானது மகாம் றப்பாக இருக்கிறது. பேச்சும், மூச்சும் அதாக இருக்கின்றது. அதுவே உஜூதாக இருந்து, பேர், பலம், கோபம், கொண்ட எல்லாம் றப்புடைய சூரத் தில் வெளியாகி எல்லாச் செயலும் அவன் செயலாகக் கொள்வது.

பரமாயிரு நான்கு மக்காமுடைய பாங்கை யுரைக்கிறேன் பாங் கருக்கே, உரமா நாசூத்துப் பரவெளியா முடலிலுனதுடமார்பிற் சொன்னேன், தரமா மலக்கூத்துக் குயின்மாடமுந் தகைக்குளிரு நாசி சுழிமுனையாங், கரமாஞ் ஜெபறூத்துக் கண்ணுடியாங் காணும் புருவத்தி னிடையாகுமே. (543)

(இ-ள்.):—இந்த எட்டு மகாம்களையும் சுருக்கிச் சொல்கிறேன், ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். ஒன்றுவது நாசூத்து அது வானது சரீரத்தில் இடது பக்கத்து மார்பாக இருக்கிறது. இரண்டா வது மலக்கூத்து அது இரண்டு நாசிகளாக இருக்கிறது, அதுவே சுழிமுனை என்று சொல்கிறதாக இருக்கும். மூன்றுவது ஜபறூத்து அது கண்ணுடியாக இரண்டு புருவ மத்தியாக இருக்கிறது. எ-று.

ஆகூலாகூவில் உலமாகபி யதுதா னுடலுக்கு ளிருபுரிசை, யேகனறுஷிலே கிந்தீலாக வீரேழுலகமு மிலங்கிநின்ற, தாகுஞ் ஜெபறூத்தி னுடலுக்குள்ளே ஜனங்கலிமாவுள் ளிருத்திப்பார்க்க, வாகுசுவர்க்கசிங் காதனத்தில் வள்ளல் முஹம்மது கொலு விருந்தார். (544)

(இ-ள்.):—நான்காவது லாஹூத்து அது சரீரத்தைப் பாது காக்கின்ற கோட்டை கொத்தளமாக இருக்கின்றது. அது முஹம் மதிய்யா றப்புடைய அறுஷில் பதினான்கு லோகங்களுக்கும் வெளிச் சந் கொடுக்கும்படியான கிந்தீல் என்னும் மணி விளக்காயிருந்த கோலமானது. இன்னும் அதில் நின்றும் ஜெபறூத்தின் திக்றை உச்சரித்து ஐனும் கண்ணுக்குள் நினைவை உயர்த்திப் பார்த்தால், அந்த சிங்காசன கொலு மகாமண்டபத்தில் முஹம்மதென்னும் மஉஷூக்கானவள் இருந்து அரசு செய்வதைக் காண்பாய். எ-று.

இருந்தார் பதினாலு நாற்பத்தொன்று யிதுதான் யாகுத்தா முடலுக்குள்ளே, பொருந்தியை னெனுங் கலிமாத்தன்னைப் போதம் பிசகாம லிருத்திப் பார்க்கிற், சிறந்த நுக்கத்தது அலிபினாலே சிறப் பாய்ப் பதினொரு விலாயத்தோடே, யுறைந்த ஆகூத்து முடலுக் குள்ளே யொன்பது வாச லடைத்துப்பாரே. (545)

(இ-ள்):—இவ்விதம் முஹம்மதியா சொர்க்கத்தில் வீற்றிருந்த தைத்தான் யாஹூத்தென்கின்றது, இது ஐந்தாவது மகாமாக இருக் கின்றது. இந்த மகாமில் தரித்து ஐன் என்கிற விழியில் கலிமாவை இருத்தி நோக்கினால் நுக்கத்தும் அலிபும் பதினொரு விலாயத்துடன் கலந்திருந்த சூறத்து வெளியாகும். ஹாஹூத்தென்னும் சரீரத்தில் உள்ள ஒன்பது நவதுவாரங்களையும் அடைத்துப் பார்க்க வேண்டியது. எ-று.

பாரமக்காமான தேழுமது பாரி லுரைத்தது தம்கூத்தினி, நூறுமுஹம்மது மிறையுமுன்னாள் நுக்கத்தி லொளிவான நூறிலங் கும், வேறே பிறிந்தவ தாரமாகி வேணவிதமெல்லா முருவெடுத்துப், பாரின் முஹம்மதாய்ப் பிறந்தவள்ளல் பாங்கா யருனான்கு சிபத்த தாமே (546)

(இ-ள்):—ஆறுவதுமகாம்தம் ஹூத்து. அந்த மகாமில் றப்பும் முஹம்மதும் ஆதியில் நுக்த்தாவில் இருந்த நீங்காப் பிரியமுள்ள சொரூப வொளிவானது தோன்றும். அந்த நுக்கத்திலிருந்து வெவ் வேறாய்ப் பிரிந்த பிறகு முஹம்மதானது, அநேக யுகாயுகங்களில் அக்தாநக்தம் வடிவுகளை எடுத்து கடைசியாக இந்தப் பூலோகத்தில் மனுஷ அவதாரங் கொண்டு வந்தது இருபத்து நான்கு சிபத்தாக இருக்கிறது. எ-று.

அறுகான்கு விதஞ் சிபாத்ததெல்லா மறுகான் கக்ஷர மமைந்த தாலே, யுருவா யிருந்தல்லோ வுலகையாண்டு முருவி னொருபாலி னுண்டை சென்று, திருவிற் பிறந்துருத் திருவிற் சேர்ந்து திருவு முருப்பண்டு போலொன்ருகி, யுருவாய்த் திருவைதான் திறக்கும் போதி லொருவன் றிருமுன்னே முஹம்மதென்றும். (547)

(இ-ள்):— இவ்விதம் இருபத்தெட்டுவித சிபத்துகளுங்கூடி, இருபத்தெட்டு அட்சரங்களாகி அவைகள் சரீரமாகிச் சமைந்து வந்து உலகை சீர்திருத்தம்பண்ணி ஆண்டு அப்பால் திருவாகிய ஹுவில் நின்று அவதரித்து வந்த மூத்தாகிய நபியவர்கள் அந்த திருவுடன் சென்று ஒன்ருகிக்கலந்து. எ-று.

என்று மூப்பான முஹம்மதென்று மேகன்றிரு முன்னே யெவர் பிழையுங், கொண்டு பொருத்துமன் ருடுமெங்கள் குதாயு முஹம்மது மொன்றேயாகும், விண்டுவுருரண்டு மொன்றே பொருள் விளங்கும் தம் குத்து வுடலுக்குள்ளே, யன்று கருகாத னொளிநினைவு மது தானிறப்பமா யாகுத்தானே. (548)

(இ-ள்):— அவ்விதம் தன்னுடைய உகப்பாகியும், சிருஷ்டிப் படைப்புகளுக்கெல்லாம் முதிய ஒளிவாகவும் உள்ள நமது நபி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மஹ்ஷரில் மன்ருடும் போது அவர்கள் திருமுகத்துக்காக வேண்டி றப்பு நம் முடைய பிழைகளைப் பொருப்பான். நமது நபியவர்கள் அல்லாவின் சிர்றில் உள்ளவர்கள், அவர்கள் சிர்றில் நின்றுந்தான் சகல படைப்பு களும் வெளியா யிருக்கின்றன. இந்த இரண்டு ஒன்ருன கோலத்தைத்தான் தம்ஹூத்தென்று அறிய வேண்டியது. இதுதான் கருவிந்து நாதனுடைய ஒளிவு நிறப்பமாகின்றன. எ-று.

ஆகமெழுப்பிய கருநினைவும் ஆதமுஹம்மதின் னட்சரமா, மாக வெழுப்பிய கருநினைவு மகத்திற்குடி கொண்டே யிருக்குமது, ஆகந் தனைக்கருவஃதெழுப்ப வந்தக்கரு வகத்துள்ளிருந்தே, ஆகாக்கரு நினைவா யிருக்கும் ஆதமுஹம்மதென் றறியுமதை. (549)

(இ-ள்):— மேற்படி கருவிந்து நாதனுடைய ஒளிவானது ஒரு நினைவாக இருக்கின்றது. அது ஆதமுடைய அட்சரமாகவும், இருதயத்தில் குடிகொண்டதாகவும், நினைவுகளைத் தாண்டக் கூடிய ஞாபகக் கருவியாகவும், இன்னும் தாண்டாக் கருவியாகவும், ஆகிய

அது முஹம்மதிய்யத்தான ஒளிவுடன் கலந்து விரவினதாகவும் இருக்கின்றது. எ-று.

அறியப்பெரிதான முகுதிதாத்தை யணுவுங்குறையாம லறிய வேணு, மறியுமுச்சுடர் வணக்கமொன்று யதுதா னுருக்காபு நிலையு மாகு, முறையாக்கடற்பத்தி வணங்கும்வாது முரீது நிலையென்றே மொழியலாகு, மறியுந்தாலிபு மெக்கினின் மயிலரிய தவஞ்செய்யு மதலைகாலே. (550)

(இ-ள்):— இந்த முஹ்த்திதாத்தை ஒரு அணுவாகிலுங் குறைவுபடா வண்ணம் அறிந்து இருதயத்தில் திட்டப்படுத்த வேண்டும். இதுதான் முச்சுடர் வணக்கம் என்று சொல்வது. ஞானவான்களான பெரியோர்கள் காபு நிலை என்று சொல்கிறதும், இதுதான் கடவுடைய வணக்கமும் இதுதான், இதுவே முரீது நிலையுமாகின்றது. இனி உபதேச சீஷர்கள் அறிய வேண்டியது எக்கின் மரத்தில் மயிலாகநபி இருக்கும்போது அந்த மயிலைச் சூழ்ந்த பிள்ளைகள் காலுமாக இருக்கும். எ-று.

நாலாம் வேதத்தி லிறைவகுத்தா னபியா முஹம்மதும் அலிக் குரைத்தார், பாலகிரு பேர்க்கு மலியார் சொன்னார் பாரிற் குருமார்க ளனைவோருக்கு, காலும்மதுகபுக்காருக்கு காலிமாம் நபியும்மத் தோர்க்கும், ஆல நபிவழி யொலிகுத்தாபா னவர்க்கும் ஹசனுசை னுரைத்ததாமே. (551)

(இ-ள்):— இதைப்பற்றி அல்லா குர் ஆனில் ரகசியமாகத் தன் ஹபீபாகிய நமது நாயகம் அவர்களுக்குச் சொல்லி சயிக்கினை செய்தான். அதை நபியவர்கள் தங்கள் மருமகனாகிய அலியவர் களுக்குச் சொல்லினர்கள். அதை அலியவர்கள் தங்கள் குமாரர் களான ஹஸன் ஹுஸைன் இருவர்களுக்கும் உபதேசஞ் செய்து வைத்தார்கள். அதையவர்கள் உலகத்திலுள்ள குதுபுகள், அக்தாபுகள், ஒளலியாக்கள், ஷெய்குமாரர்களான சற்குருமார்கள் முதலான எல்லோருக்கும் உபதேசித்தார்கள். எ-று.

உரைத்த பதினைவு குருவின்மார்க்கு முண்மை அசனுசைன் குருவுமாகும், வரத்தைப் பொருந்திய விருபாலர்க்கும் வள்ளலலிப்புலி குருவுமாகுங், கருதிப்பெரியவ னலிப்புலிக்குக் காட்சி முஹம்மதே குருவுமாகு, மொருத்தரறியாமல் முஹம்மதுக்கு முடையோன் ரகசிய முரைத்ததாமே. (552)

(இ-ள்):— ஆனபடியாலே ஞானத்தில் கடைசி முடிவாக இருக்கின்ற பதினான்கு கான்வாதாக்களின் பீர்மார்களாகிய நாதாக்கள் பதினான்கு பேர்களுக்கும், ஹஸன் ஹுஸைனே சற்குருவாக இருக்கிறார்கள். இவர்களுக்கு அலியவர்களே சற்குருவாக இருக்கிறார்கள். அலியவர்களுக்கு நபியவர்களே சற்குருவாக இருக்கிறார்கள். நபியவர்களுக்கு அல்லாஹுத் தஆலாவுடைய திருவுளம் சொல்லி இருக்கின்றது. எ-று.

உரைத்தரகசியங் குருமுறைதா னொருபத்து நாலு மொழுங் காய்ச்சொல்லிக், கருத்தில் வழியான பாதையாறுங் கனதிமக்காமைந்தும் வணக்கமெட்டுங், குறித்தமேலான குருமுறை தான் கூறினேனிதி லொன்றதிகம், பொருத்து முஷாஹதாப் பதினாலுக்குட் பொலிவு முஷாஹதா ஆறுகுமே. (553)

(இ-ள்):— இவ்விதமுள்ள ஞானந்தான் குரு முறையாக இருக்கின்றது. இதிலே பதினான்கு வகைப்பட்ட விதங்களையும், ஆறு விதப்பட்ட பாதைகளையும், ஐந்து வகைப்பட்ட மகாம்களையும், எட்டு வகைப்பட்ட வணக்கங்களையும், சரிவர வரையறுத்துச் சொல்லிவிட்டேன். ஆனால் இவைகளில் ஒன்று அதிகம் பதினாலு முஷாஹிதாக்களில் உயர்த்தியானவை ஆறுவகை இருக்கின்றன.

ஆறு முஷாஹதா அந்திரமா மதின்மே லிருநான்கு தவ நிலையாங், கூறுமிருநான்கு முஷாஹதாவிற் குறித்த முஷாஹதா வொன்றதிகந், தேறுமிருபத் தெட்டியாதிற் றெளிவுநிலையாது மொன்றே சொன்னேன், ஆறுமறிந்தொலிமார்களாக வரியதவமினி யருள்வதாகும். (554)

(இ-ள்):—ஆறுவிதமான முஷாஹிதாக்கள் அந்திரமாகவும், அதன்மேலே எட்டு முஷாஹிதாக்கள் தவநிலையாகவும், அதில் ஒரு முஷாஹிதா அதிகமாகவும், அவைகளில் இருபத்தெட்டு யாதுகள் உள்ளமையாகவும், அதிலொன்று நப்பைச் சேர்க்கதாயும் இருக்கிறது. இவைகளை சந்தேகமில்லாமல் உணர்ந்தவர் தான் ஒலிமார்கள் என்பது. இனிமேல் தவநிலைகளைச் சொல்கின்றேன். எ-று.

ஆகும்பறுலோடு சுன்னத்தையு மரியதவநிலையாரின் நிலை, ஆகங் கடந்தோர்கள், பாவந்தீர வாதிபெரியவன் தோஸ்துமாக, வேக

பெரியவன் வணக்கங்கோடி யெதுக்கு மிதுதானே முதன்மை யென்றும், வருகுபெறுமொலித்தன முண்டாகும் வணக்க முஷாஹிதா வழியைக்கேளே. (555)

(இ-ள்):—பறுஅ சுன்னத்துகளான தொழுகையில் தரிபட்டிருப்பது, தவநிலையும், ஆரிபுகளுடைய நிலையுமாக இருக்கும். மனிதர்களுடைய பாவங்களையும் தீர்த்துவிடும். அல்லாவும் ஹபீபாக இருப்பான். இன்னும் இதுவே கோடாகோடி வணக்கங்களிலும் முக்கியப்பட்டது. இதுவே ஒலித்தனத்திற்கும் அடி மூடாக இருக்கிறது. இதில் செய்ய வேண்டிய முஷாஹிதாக்கள் என்ன வென்றால்:— எ-று.

வழியாந்தொழுகையைத் தொழுதுக் கொண்டு வாய்மையுசும் பாமலிருந்துகொண்டு, தெளிவாய் மனதுக்குணிவினாலே தீர்க்கமாகவேயுலுவுஞ்செய்து செழியாத்தொழுகையை நினைவினாலே நினைத்துத் தொழுதுதான் முடிந்தபின்பு, சுழியாமுனைமேலே மூளையின் கீழ் சோதிநெற்றி கீழ்புருவத்தோடே. (556)

(இ-ள்):—உலுச் செய்யும் போது, மனதில் தியானித்தும், தக்பீர் கட்டும்போது, சரீரத்தைப் பனவாக்கி எல்லாம் அவன் என்ற நினைவில் தரித்து றுக்கூவு, ஸுஜூதுகள் செய்து முடிந்த பிறகு சுழிமுனைமேல் நினைவைப்பொருத்தி அதன் கீழையும் நினைவை விட்டு, புருவமத்தியை கோட்டமிட வேண்டியது. எ-று

புருவத்திடை நடுமுகந்தனிலே பொங்கியிலங்கிய வொளிவை நோக்கி, வருடிக்கலிமாவின் அல்லாவென்று வருமுதல் அலி பெழுத்ததனைப், புருவக்குழி தொட்டு நெற்றிமட்டும் போதநினைவினில் நிலைநிறுத்தி, யுருவா முஹம்மது முதல்மீம் தன்னை யுற்ற குழிதொட்டுக் கீழேநீட்டே. (557)

(இ-ள்):— அப்படியே பழகிவரும்போதே புருவமத்தியில் ஒளிவு தோன்றும், அதைக் கண்டவுடனே இது என் றப்புடைய நூறு என்று கலிமாவைச் சொல்லிக்கொண்டு நூறை சரீரமெல்லாம் பிரகாசிக்கச் செய்ய அலிபை நினைவில் வைத்துப் பாராட்ட வேண்டும். எ-று.

நீட்டித்திலமேலுங்கால் கீழுமாய் நோய் மூக்குடகொழுந்து மட்டுங், தேட்டமாகிய அல்லாவென்று செப்பும்லாமதில் முதலாம்

தன்னைக், கூட்டிமீருடவாலைத்தொட்டுக் கோர்வையாகக் கீழ்த்தாழ் வரயமட்டும், பூட்டியிறசூலினு றைத்தறேயைப் பொருத்தி யெழுத் தோடே கீழேவாங்கே. (558)

(இ-ள்):—அலிபை அவ்விதம் நீட்டி நினைவை தலை மேலும், கால் கீழுமாக மூக்கின் முனை வரையிலும் பொருத்தி அல்லா என்கிற தேட்டத்துடன் திக்றுசெய்து, அப்பால்மீமை நினைத்து திக்றுசெய்து, றசூல் என்கிற றேயை நினைவுடன் இழுத்து கீழே வாங்கவேண்டியது. எ-று.

கிழாங்குரவளை நெஞ்சாங்குழி யதின்கீழ் இல்லென்றலாமை காட்டி, யாஹுங் கமலத்தினடு நிலையி லலிபினிலையொளி வாக வெண்ணி, மீனுஞ்சுழலாக வெழுந்தமூச்சை வீணுய்ப்போகாம லெழுத்தைக்கூட்டிச், சுழுமூலத்திலிருந் தெழுப்பிச் சொருகி விழியோடே சுடரை நோக்கி. (559)

(இ-ள்):— கீழே எந்தமட்டும் என்றால் குரவளையிலிருந்து நெஞ்சாங்குழி வரையிலும் இல் என்கிற லாமை காட்டி இருதயக் கமலத்தில் அலிபின் நிலையுடைய ஒளிவை தியானித்து அதற்கப்பால் சுழன்று வருகின்ற மூச்சை வீணாக்காமல் கலிமாவில் நிறுத்தி வைத்து மூலத்திலிருந்து எழுப்பி இரண்டு கண்களுக்கும் இடையில் சொருகிப் பார்த்தால் ஒளிவு தோன்றும். (எ-று.)

சுடராமிருவிழி நடுவிலாடுஞ் சோதிபெரியவ னிலையுமாகித், திடமாய் வருமூச்சை மூலந்தனிற் றிறத்திலிருத்தியே யெழுப்பி நெஞ்சில், அடவாய்ச்சரத்தோடே யெழுத்தைப்பூட்டி யந்தவெளி யிலேவிழியை நாட்டி, யெடுத்தசரத்தை யாஹூவல்லா வென்றிலங்கு மொளிவிலே சொருகிப்பாரே. (560)

(இ-ள்):—இருவிழிகளுக்கும் நடுவே நடனஞ் செய்கின்றபிர்ம ஜோதியை றப்பு என்று உறுதிகொண்டு மூலத்தில் இருந்து எழும்புகிற சுவாசத்தை இருதயத்திற்குக் கொண்டுவந்து கலிமாவைப் பொருத்தி விழியை அத்துடன் கொழுகி, அத்துடன் நினைவை யாஹூ அல்லா என்று ஒன்று படுத்திப்பார். எ-று

பார்வை சோராமற் சரமேயாமற் பாங்காய்ச்சரத்தை முன் னிறுத்தும்போது, தேருந்திருச்சொல்லு வென்றிருத்தித் தெளிவாய் கூவென்றுவீசவேணும், எறுஞ்சரத்திலே நினைவைப்பூட்டி யிலங்கு

மொளிவிலே விழியைநாட்டிற், கூறு முஷாஹதாவிது போவில்லைக் குணமர்யறுக்திதையிருந்துபாரே. (561)

(இ-ள்):—அடேமகனே! நீ அவ்விதம்செய்து பார்க்கும்போது உன் கண்கள் சோர்ந்து விடக்கூடாது. நீ விடுகின்ற சுவாசங்களும் ஓயக்கூடாது. அதில்நிறுத்தி ஞாபகத்தையும் நழுவவிடக்கூடாது. இவ்விதப் பத்தியத்துடன் செய்து நீ இருக்கும்போது, ஹா, என்கிற திருச்சொல்லை இருதயத்தில் இருத்தி ஹூவென்று வீசவேண்டும். உடனே மேலேறுகின்ற வாசி நிலையில் நினைவைச் சேர்த்துவிட வேண்டியது, உடனே உன் றப்புடைய வெளிச்சத்தைக் காண்பாய். இதுபோல ஒரு தெளிவான முறையை உனக்கு எவரும் சொல்ல முடியாது, இதை உறுதிகொண்டு அப்படி இருந்து பார்த்துக்கொள்.

இருப்பி லுறக்கம்போற் காணும்போதி விருந்தவிடத்திலோ ரொளிவுதோன்றுந், தருப்பில்லாதவனி புலீசென்றுந் தன்னைமறந் திடும்வலது பக்கஞ், சிறப்பாய் வருமொளி முஹம்மதென்று சிரசு பணிந்திடும் புவியைநேக்கி, நிரப்பிவருமொளி சந்திரனு நீண்ட முடிமேலே கண்டதானல். (562)

(இ-ள்):— அவ்விதம் இருக்கும்போது ஒரு விதமான அசதியுடன் நித்திரையைக் கொண்டு வந்துவிட்டு ஒளிவுவொன்று தோன்றும், அது லஅனத்துப்பெற்ற இபுலீசானவனுடைய ஒளி வென்று கண்டுகொள்ளவேண்டியது. இனிதன்னை மறந்து தன் நினைவுடன் ஒரு ஒளிவானது வலது பக்கமாகத் தோன்றும், அதை நூறுல் முஹம்மதிய்யாவின் ஒளிவென்று திட்டப்படுத்த வேண்டியது. அந்த ஒருமையான நினைவுடன் தலையை சாய்த்து ஸுஜூது செய்யும்போது பூரண சந்திரன் ஒளிவைப்போல் வெளியாகும் பட்சத்தில், அது றப்புடைய ஒளிவென்று அறிந்து நினைவை மருளவிடாமல், அதனிடத்தில் கேட்கக்கூடிய முனஜாத்துக்களைக் கேட்கவேண்டியது. ஏ-று.

கண்டவொளிறப்பில் ஆலமீனுங் கருணைப் பதங்கண்டு தொழுதுகொள்ளும், விண்டு ஆயிரந்தேன்மலராய் விரிந்தேயிலங்கி நின்றுடும் போதில், வண்டுமலராட வடங்கும்போதி லதிலே அலி பென்ற வெழுத்தைக்காணு, நன்றாய் நோக்கிப்பாரெழுத்தருகி னல்லவான மும்புவியுங்காணும். (563)

(இ-ள்.):—அப்படி றப்புடைய திருமணி வெளிச்சமானது வெளியான உடன் சற்று நிமிஷங்களுக்கெல்லாம் ஒருவித அமிர்தத் தடாகம் தெரிந்து அதனடுவே பொற்பிரகாசம் பொருந்திய ஆயிரத்து எட்டு இதழ் தெய்வத் தாமரையானது விரிந்து வெளிவரும். வந்து அதன் ஒவ்வொரு இதழ்களுக்குந் துளிக்கின்ற தேவாமிர்தங்களை உன் வாயில்கொண்டு வந்து ஊட்டும் ஊட்டிய உடனே நின்றது நிற்க அது பளீரென்று வெட்டி மறைந்துவிடும். அப்பால் ஒரு அலிபு வெளியாகும் அது உருகி ஆகாயமாகவும், பூமியாகவும் ஆகிப் படரும். எ-று.

காணு மாகாய முலகந்தனிற் கண்ணுமணிக் குத்துபுதயங் காணு, மூணிப்பார்க்கவே விண்டத்துக்கு ளுருவந்தெரியவே கண்ணுடியிற், ருேணுமவரவர் சுரூபம்வருந் துய்யபீங்கானிற் பாலு மேந்திப், பேணிக்கொடுக்கவே குடிக்கக்கண்டாற் பெரியோன் முஹப்பத்திலானதாமே. (564)

(இ-ள்.):—அந்த ஆகாயத்திலும் பூமியிலும் குதுபு பிரகாசமானது எழுந்து ஜொலிக்கும். அதில் கண்ணுடிபோல ஒரு பளிங்கியானது வந்து நிற்கும், அந்தப் பளிங்கியைக் கூர்க்கப் பார்த்தால் உன்னுடைய சொரூபம் தெரியும். அப்படி நீ கண்டவுடன் ஒரு பீங்கானில் பால்வந்து உன் வாயருகில் மணக்கும். அதை நீ சாப்பிட்டவுடன் அப்பதான் முஹப்பத்தென்னும் மஉஷூக்குடன் கலந்து ஒன்று பட்ட அடையாளம் நிறைவேறும். எ-று.

தாகமோகங்க ளின்ப துன்பந் தாத்தைவெறுத்தொருபாத்தை நாடி, மேவிச்சிலையுடமூச்சினுலே விளம்பும்விழியன்பா லெழுத்தை யேற்றிப், பாவக்துலைந்தபின் கிழுறுநபி பார்த்துக்கருத்தோடே பலன் பெற்றோர்க்கு, வேகனவுலியாக்குத்துபே யென்று மின்னமொலி யென்ற நிலையிலாகும். (565)

(இ-ள்.):—நீ அந்த அமிர்தத்தை சாப்பிட்டவுடன் உன் காம விகாரங்கள் கபடு வஞ்சனை இருவினை முதலான பாமரச் செயல்கள் யாவற்றும் உன்னை விட்டும் விலகிவிடும். உன்நோக்கமானது றப்பு உடைய ஹலரத்தையே நாடிக்கொண்டிருக்கும். அந்தக்காலத்தில் ஹயாத்து நபியாகிய கிழுறு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வந்து உன்னிலையைத் தரிபாடாக்கி உன் பதவியின் தரம்போல் குதுபு,

அக்தாபு, ஃஒலியா, ஒலி என்னும் பட்டங்களை சூட்டி அந்தந்த தரஜாக்களில் உயர்த்தி விட்டுப்போவார்கள். எ-று.

ஆகம் பொருந்திய பீர்நிலைமை யறிவாலறிவோர்க்கிங் கறிவு சொல்வேன், ஏக இருதாரை யொருதாரைக்கு ளிலங்கு மிநினொளி யிருபாகமும், வாகாமை னெனும் கலிமா நிலை வானஞ் சுழற்றியே யிருத்தியேற்றி, யேகநிலையிலேயேற்றி மூட்டி யிருத்திப் பார்க்கவே யிலங்குந்தானே. (566)

(இ-ள்.):—இனிசற்குருவின் தோற்றரவு காண்கவேண்டு மென்று நினைப்பவர்களுக்குச் சொல்லுகிறேன். இரண்டு கண்களி லும் தெரிகிற பாப்பா என்னும் ஒளிவை ஒரு கண்ணுக்கிடையில் வரச் செய்து ஐன் என்கிற கலிமாவில் ஆகாய நினைவைப் பொருத்தி உயர ஏற்றி ஒரே நிலையாகக் கதிற் முனைபோல எண்ணத்தை வைத்து உன் பீரை ஒரு மையாகச்சாதிப்பாயானல், உடனேஷெய்கு டைய சூறத்து வெளியாகும் பார்த்துக்கொள். எ-று.

இலங்கும் ஜெம்கூத்தினிலையைப்பாரு இதழு மலராக விரிந்த சோதி, துலங்குமாயிரந் தேன் மலராய்த் தோன்று நடு நிலை நுக்கத் துமாக, விலங்கு நுக்கத்தைப்பார் அலிபுமாக விருக்கும் மீமென்ற வெழுத்துமாகுந், கலங்கிமீமுடதலைவிரிந்து காணுந்தோஸ்தம் பொற்கணையாளியாம். (567)

(இ-ள்.):—அவ்விதம் இலங்குகின்ற ஜெம்ஹூஅத்தாக இருக் கும். அது ஒரு அழகிய செந்தாமரை மலராகவிரிந்து அதன் நடுவே ஒரு நுக்தாவானது ஒரு அலிபும் ஒரு மீமையும் சுமந்ததாகத் தோன்றும். அதில் அலிபு அருவமாகவும், மீம் அழகிய சூறத்தில் சுரூபமாகவும், விரலில் கணையாளி மோதிரந்தரித்ததாக இருக்கும்.

கணையாளிக்குள்ளே அகாரவட்டம் கண்டபனிரண்டு மொன் ருகவே, யிணையுங்காபு கூகியுமாகு மிருக்குமீமைந்து மெழுத்துமாகு மணையுமீராறெழுத்துமொன்று யடங்குத்திருட் சூட்ச மதுவுமாகு, மிணையில்லாச் சுடருதயங்காணு மென்னுலினிச் சொல்லவிளங்க வில்லை. (568)

(இ-ள்.):—அந்த மோதிரத்திற்குள்ளே முச்சுடர்வட்டம்வெளி யாகும். அது கலிமா முதல் பன்னிரண்டு அட்சரங்களும் நிரப்பி

நிற்கும். அது ஹா ஹீ ஹூவாக இருக்கும். மீமானது ஐந்து எழுத்துக்களாகப் பிரிந்து நிற்கும். அந்த மீமே கலிமா இருபத்தி நான்கு அட்சரங்களும் ஒருமிக்கப் பொதிந்ததாக இருக்கும். இதுவே ஞானத்திற் கடையாளம் அமையாத சூட்சாதி சூட்சமா யிருக்கின்றது. நான் இதற்கப்பால் என்னதான் சொல்லப்போகிறேன், இதற்கந்தப்புறம் பேச்சென்ன இருக்கின்றது. எ-று.

இல்லமிலங்கிய அலிபிரண்டு மீணையும் ஐனெனுங் கலிமாத் தன்னை, மெல்லவிளக்கியே மௌனமூட்டி மூடியிருத்திப்பார் மூச்சடக்கி, வெள்ளிமாமதிகதிரிற்சூட்டி விருத்தம் விளங்கிய வேகத்தாலே, இலாஹி யென்பது ரேயைப்பூட்டி யெழுதி நாற்பத்து மூன்று கோணம். (569)

(இ-ள்):— இன்னும் ஒருவித முஷாஹிதாச் சொல்கிறேன், பிரிய மிருந்தால் செய்து பார். இருதயத்தில் பூண்டிருக்கின்ற அலிபென்கிறதை, ஐன் என்ற கலிமாவில் வைத்து மெதுவாக மௌனமாக எழுப்பி மூட்டி சுவாசத்தை அடக்கிற விதமாக அடக்கி இருத்திப்பார். ஒருவித வெள்ளைச் சந்திரன் போல கதிர் காட்டும் அந்த வேகத்தோடே இலாஹி என்பது நாற்பத்து மூன்று கோணங் களாக வெளியாகும். எ-று.

கோண நாற்பத்து மூன்றுமாகக் குறிகொண்டாடிய மண்ட பத்திற், ரூஹு நுபுவ்வத்து நிலைகின்றுடுக் துலங்கு நவரெத்னத் தோடு சாமாம், நூறு பொருந்திய தேசுஷமாக நுக்கத்து பொருந்திய கடுநிலையு, மாணிக்கமுத்துப் பவளம்பச்சை மக்காமன் மகுமூதர் சிலைதெரியும். (570)

(இ-ள்):— நாற்பத்துமூன்று கோணங்களுடன் அந்த உஜூது குடிகொண்டிருக்கு மணி மகா மண்டபத்தில் நுபுவத்துடைய தோற்றங்கள் நின்று நடனமாடும். அதிலே ஒன்பது வகை ரத்ன கஜிதங்களின் பிரகாசமும் வெளியாகும். இன்னும் அதிலே நுக்கத் துடைய ஜலாலியத்துகளும், முத்து, பவளம், பச்சை, மாணிக்கம், என்னும் மகாமன்மகுமூது வெளியாகும். அப்போது முஹம்மது உடைய வெளிச்சம் தோன்றப் பார்ப்பாய். எ-று.

தெரியுமொளிவாக இலங்கும்வட்டத் தெளிவாய் கடுநிலைசுறுமா வட்ட, முறையுங்கண்ணுடி யொளிவுக்குள்ளே முகவரையில்லா

விளம்பாலனும், வரையுஞ்சிபத்ததைப் பொருந்திப்பார்த்தால் வள்ளல் முஹம்மது வடிவுதோன்றும், அறியும்பீர்நிலையிதுவே நிச மனே கவிதஞ்சொல்வார்க்குபிராகுமே. (571)

(இ-ள்):— இன்னும் அந்த மண்டபத்தில் ஒரு பீடம் வந்து தோன்றும், அதிலொரு சுருமாவட்டம் வெளியாகும், அந்த வட்டத்தில் ஒரு பளிங்கிக்கண்ணாடி வந்து நிற்கும், அதற்குள்ளே முஹம்மதானது, முகவரை கிராத இளம்பாலிய வடிவில் இருந்து பிரகாசிக்கும், அடே மகனே! பீர்நிலை என்பது, இதுவே சரியான முறை. இதைப்பற்றி இன்னும் அநேகர் அநேக விதங்களுஞ் சொல்வார்கள் அவைகள் எல்லாம் குபிரியத்தாகவும், ஷைய்தான் உடைய ஏமாற்ற வழிகளாகவும் இருக்கும். மாட்டிக்கொள்ளாதே ஞாபகம். எ-று.

குவியுமூலத்திற் சுழன்றவாய்வு கோணமாறுக்கும் கருநிலையில், எவ்விஎவ்வியே வருகுமூச்சு யாகூவெனச்சொல்லி யெழுந்த மூச்சு, ஒவ்விவிருக்குயாமைந்தெழுத்து மோதும் யாகூவும் வாவும் சீமும் செவ்வி விழிநாசி வாயடைத்துச் சேர வெழுத்தைந்து மிருத்திப் பாரே. (572)

(இ-ள்):— இன்னும் குவித்திருக்கின்ற மூலக்குகையில் நின்றும் ஒரு மூச்சானது சுழன்று பிராணவாயு உள் வரும். அது ஆறு கோணங்களுக்கும் கருநிலையான மகாமில் வந்து எவ்வி, எவ்வியே பாயும், அது யாஹூ என்கிற திக்ரை உச்சரிக்கும். அப்போது நீ யாஹூவையும், வாவையும், சீமையும் நினைத்து, கண்களையும், நாசியையும், வாயையும், அடைத்து மேற்படி அட்சரங்களை யாதுடன் இருத்திப்பார். எ-று.

இருத்திச்சடத்தை யுள்ளடக்கும்போதி லெல்லா மறந்திடு மிலங்குமொளி, தரித்த கமலத்தினடுநிலையிற் றருத்தன்றெழுதிய பத்தெழுத்தி, னிறத்த குதறத்தின் மலரின் மேலே நீதியெழுத் தெல்லாம் பொருந்தி யொன்றாய் வகுத்துந் தவிசின்மேல் வாலிபனாய் வகையில்லா முகத்தொளிவு தோன்றும். (573)

(இ-ள்):— அப்படி நீ வியாபகத்துடன் இருத்தி இருதயக் கண்ணாடியில் அடக்கும்போது உலகத்தின் செயல்கள் முற்றும் மறந்து விடுவாய். அங்கே வெளிவந்து தோற்றக்கூடிய ஒளிவானது இருதயக் கமலத்தில் உள்ள பத்து வகையான எழுத்துகளுடன்

கலந்து குதுறத்தென்கிற தாமரையின் மேலே மேற்படி எழுத்து களுடன் பொருந்தி ஒன்று பட்டு, அந்த சிங்காசன மேடையின் பேரில் இணையில்லாத வஜீகரத்தையுடைய முகசௌந்திரிய வாலிபனாகத் தோன்றும். எ-று.

தோன்று மொளிவாக அலிபு நிலை துலங்கும் ரூபத்தின் மடியின் மீதிற், கூண்டு பருதிபோலொளி சிறந்து குதுறத்திலங்கிய நுபுவ் வத்தின் மேற், பூண்டு பணியாடை யணிந்திலங்கப் பொன்னின் குடம் போலே தனமிலங்கக், கூண்ட குழைக்காதி லணிந்ததோடு குமரி ரூபமாங் குழந்தை போல. (574)

(இ-ள்):— அப்படி தோன்றுவது அலிபுடைய நிலையாக இருக்கும். அந்த வாலிபனுடைய மடியின் மேலே இளஞ்சூரியப் பிரகாசம் போல் ஒளிவு வீசவும், நுபுவத்துடைய குதறத்துகள் சூழ்ந்து நிற்கவும், இரத்தனங்கள் இழைத்து பதினெண்ணாயிரம் ஆலங்களையும் தோற்கடிக்கின்ற மதிப்பிலடங்காத அநேகவித ஆபரணாதிகளையும், முத்தாடைகளையும் அணிந்து, பொன் குடங்கள் போன்ற ஸ்தனபாரங்கள் குலுங்கவும், இரண்டு காதுகளிலும் இரத்தனத்தோடு என்கிற குண்டலங்கள் ஆடித்தொங்கவும் ஆன ஒரு வாலிபப் பெண் குழந்தை சுரூபத்தில் வெளியாகும். (இன்னும்)

குழந்தை கரத்தினிற் குருனிருக்குங் கூவென்றோதியே குயின் மொழியு, மெழுந்தகுதறத்தின் மடியின் மீதி லிருக்குமகுகூக்கு முஹம்மதியா, வெழுந்த குதறத்தினோசை யெல்லாம் ஆமீனாமின் என்றெழும்புமது, தெளிந்த ஆஷிக்குமகுகூக் கொன்றாச் சேர்ந் தங்கிருப்பதை நினைவு கண்டால். (575)

(இ-ள்):— அவள் கையில் குர்ஆன் என்கிற காலாம் வேதம் இருக்கவும், அவள் வாயில் குயிலின் குரலோசையில் ஹூவென்று திக்று சப்தம் மகா இனிமையாகக் கேட்கவும், மேற்படி ஆஷிக்கான குதுறத்தானதின் மடியில் வைத்து தாராட்டவும், மஉஷூக்கென்ற முஹம்மதியாவானது, வீற்றிருக்கவும் காண்பாய். அப்போது அந்த முஹம்மதியாவானது, ஆமீன் ஆமீன் என்று சொல்லும். அந்த நேரத்தில் உன் நினைவைக் கொண்டு அந்த ஆஷிக்கையும், மஉஷூக் கையும், ஒன்று படுத்தி விரவிப்பார்த்தால் அந்த இரண்டு சொரூபங்களுங் கூடி உன்னையன்றி வேறே எதுவையும் நீ கண்டதே யில்லை. எ-று.

கண்டாருலகத்தின் காக்ஷிகாணுர் கமாலுல் எக்கினென்ற காட்சியாலே, கொண்டாராசையு நபுசுநாலுங் குறித்த நினைவல்லா வென நிறுத்தி, நின்ற நினைவெல்லாம் கூவேடல்லா நினைவு ழுாகுல் லாமூச்செனவே, கண்ட குதறத்தி னிலைக்குங் கீழே காணும் பாரத்தீனிலையுமாமே. (576)

(இ-ள்):— அவ்விதங்காண்கிறதைத் தான் கமாலுல் எக்கின் என்று சொல்லுகிறது. அந்த காக்ஷிகளைக் கண்ணுற கண்டவர்கள் இந்த பொய்யான பூலோகத்தின் காட்சிகளைச் சட்ட பண்ணிப் பார்க்கவே மாட்டார்கள். அவ்விதங்கண்ட தோற்றரவுகளுடன் உன் நப்ஸுகள் நாலும் றப்பென்ற உறுதிக் கொண்டு நினைவுடன் நிறுத்தி மற்ற நினைவுக ளெல்லாம் ஹறு வென்றும், அது வாசியின் பெருமை என்றும் கண்டு அந்த குதுறத்து நிலைக்கு கீழே காண்கிறது தீனிலை என்று கருத வேண்டியது. எ-று.

நிலையா நுபுவ்வத்து நின்றிலங்கு நினைவிலறிந்திடத் தெளிந்த விழி, கலக நிறைந்திடு நரகந்தன்னைக் காணு தொருநாளுங் கனவிலுமே, யிலங்கு நுபுவத்துப் பாகூத் தென்னு மிது தான் மக்காமன் மகுமூதென்று, முலகு நிலையெல்லா நிறைந்திருக்கு முலமா முஹம்மது நபியுஞ் சொன்னுர். (577)

(இ-ள்):— அந்த தீனிலையில் நுபுவத்துடைய பிரகாசங்கள் வீசிக் கொண்டிருக்கும். அதைக் கண்ட பெரிய மனுஷரின் கண்கள் ஒரு காலத்திலும் கனவிலுங்கூட நரகத்தைக் காண மாட்டா. அந்த நுபுவத்து தான் பாஹூத் தென்கிற மகாமன் மகுமூதாக இருக்கும், என்று ஆதிஞான மூலக் கருத்தாவாகிய நமது நபியவர்கள் திருவாய் மலர்ந்து சொல்லி இருக்கின்றுர்கள். எ-று.

சொன்னுர் முஹம்மது நபியிறசூல் சூபில் ஜெம்கூத்து நிலை தெரியு, மண்ணின் மலிக்கென்னு மாலீக்கென்னு மக்காமன் மகுமூது நிலைக்கு மேலே, சொன்னேன் ஜெம்கூத்து நிலையாவது சுல்தானசீரு வென்றெவர்க்குக் தோன்ற, வின்னங் குதறத்தில் ஆரிபீனு மெங்கள் முஹம்மது நபியுஞ் சொன்னுர். (578)

(இ-ள்):— இன்னும் இக்த மகாமில் ஜெம்ஹூத்துடைய நிலையும் தெரியவரும். மேற்படி மகாமன் மகுமூது நிலைக்கு மேலே வந்த ஜெம்ஹூத்தாவது சுல்தானன் நஸீருவாக இருக்கும். இது

தான் குதுறத்து ஆரிபீன் என்கிறது, என்று நமது நபியவர்களும் உறுதி சொல்லி இருக்கிருர்கள். எ-று.

நபியா முஹம்மது வுலகோர்க் கெல்லா நல்ல மகிழ்ச்சியாலேது சொன்னர், புவியிற்பொருளெல்லா மொளித்த பொருள் பொருளை வெளியாக விழித்துச் சொல்வேன், கவியாதிருக்குதென் றிருக் கொணுது கண்ணின் மணிபோல கருத்தில் வைத்துப், புவியிலறிந் தோர்க்குத் தாள்விலையே போது மிதற்குமேற் பொருளிலையே. (579)

(இ-ள்):— இன்னும் நமது நபியவர்கள் உலகத்தார்களுக்கு சொன்னதாவது, ஓ மனிதர்களே! இந்த உலகத்தில் நீங்கள் வருத்தப் பட்டு எவ்வளவோ பொய் பித்தலாட்டங்களுஞ் செய்து தேடி வைக்கும் பூஸ்திகளெல்லாம், உங்கள் கண்பார்க்கத் தடமாடி இன்னொருவன் கையில் போய் விடும்படியான பொய்யானதாக இருக்கிறது. ஆனபடியாலே அநித்தியமான பொருளை உதறி விட்டு நித்தியமான பொருளைத் தேடிக்கொள்ள எவ்வளவும் பிரயாசை எடுத்துக் கொள்ளுங்கள், என்று சொல்லி யிருக்கிருர்கள். என்னுடைய மஅரிபத்து மாலையில் இல்லாத உபதேசம் யாருடைய கிதாபுகளிலும் கிடைக்காது. அல்லா உடைய இருலோகத்து கஜானுகளை இந்த மாலையில் அள்ளியள்ளிச் சொரிந்து விட்டிருக் கின்றேன். யாரப்பா கூர்மையான புத்தியுள்ளவனே! தமிழ்பாஷையின் கவிதைகளாய் இருக்கிறதென்று அசட்டை பண்ணுமல் உன் கண்ணுக்குள் இருக்கின்ற மணிபோலப் பாவித்து உன் சரீரமென்கிற உயிர்கூண்டை விழுத்தாட்டிப்பிய்த்து நீ இல்லாமல் போய் விடாமல் தப்பிப் பிழைத்துக்கொள். அடமகனே! இவ்வளவே போதுமானது இதற்குமேல் உனக்கு எவன் சொல்லப் போகிருன். எ-று

இல்லென்றுரைப்பது மிறையினுமை யில்லா விளங்கிய ஜெம் கூத்திலே, சொல்லுமலராட்டங் குதறத்தாகும் சுல்தா னசீருவும் நுக்கத்துமாகும், இல்லென்றெழுத்தது மலிபுவாகு மிருத்த மீமுலே மிருதிதாத்து, வல்ல மீம்தலை கமலமாகும் வானந் தெறியாத ஆகாயமே (580)

(இ-ள்):— இனி முடிவைச் சொல்கிறேன். இல் என்பது றப்புடைய திருநாமம். இல்லா என்பது ஜெம்ஹூஉத்தில் உள்ளது ஆயிரத் தெட்டிதழ் உடைய தெய்வத்திரு மணமுடைய வெளிச்சம்

சுல்தான்னன் னசீருவாக இருக்கும். அதன் கருத்து நுக்கத்தாக இருக்கின்றது. இல் என்பது அலிபாக இருக்கிறது. வாசியில் வைத்து இருத்துகின்றது, மீம் உடைய தலையாக இருக்கும் அதோ, இருதயக் கமலத்தின் நாட்டமாக இருக்கும். அதுவே யாருக்கும் தெரியப் படாத ஆகாய வெளியாகவும் இருக்கின்றது. எ-று.

ஆகாயந்தனிற் குதுபுதய மதுதான் றூகென்று மறியலாகு, மேககதிரொளி குதுசியாகு மிருகோணம் பிறை முச்சுடராம், வாகாய்த் தலைசூடி யிருப்பதுதான் வல்லோன் காவோடு கியுமாகு, மாகும் கலிமாத்தான் கண்ணுடிபோ லறியும் அல்லாஹுவென்ற கூட்டில். (581)

(இ-ள்):— அந்த ஆகாயத்தில் குதுபுதையம் பிரகாசிக்கும், அதுதான் றூஹுகள் என்று உணர்ந்து கொள். அந்த வெளி யெல்லாம் ஏகது விதமாகிய ஒரு ஜோதி நின்று பிரகாசிக்கும். அதுதான் றூஹுல் குதுஸி யென்று அறிந்துக்கொள். இரண்டு கோணங்களிலும் ஒரு சந்திர வெளிச்சந் தெரியும், அவைகளே முச்சுடர்களின் கோலம் என்று அறிந்துகொள். உலகமெல்லா வற்றிலும் ஒரு வஸ்துவையும் விடாமல் பொருந்தி இருக்கும். ஹா ஹீ என்கிற கலிமாவென்று திட்டப்படுத்தி நீ என்கிற கிளைவை அல்லாஹுவென்கிற கிளிக்கூண்டில் பிடித்து அடைந்துக் கொள்வாயாக. எ-று.

கூட்டும் பொருளெல்லாஞ் ஜம்கூத்திலே கோலம் பாகூத்தைக் கொழுகிப்பார்க்கி, லாட்ட மலரெல்லா துபுவ்வத்தோடு மந்தக்கடலிலே கல்புமாகுஞ், சூட்டும் ஓங்கார வட்டமீமாஞ் சூழ்ந்த நிறம் வெள்ளை நடுநிலையி, லாட்டம் வைரம் பொன் பவளம் பச்சை யதுதான் மக்காமன் மஹ்மூதுமே. (582)

(இ-ள்):— நீ காணக்கூடிய தோற்றப் பொருட்களெல்லாம் ஜெம்ஹூத்துடையதாக இருக்கிறது. அதை உணர்ந்து அப்பால் பாஹூத்தை ஏறிப்பார்த்தால் எல்லாம் நுபுவத்துடைய ஆட்ட மாகவே காண்பாய், அது ஒரு கடல் போன்ற வடிவாய் இருக்கும், கருத்து கல்பாக இருக்கிறது. இனி மகாமன் மஹ்மூதென்பது, ஓங்கார வட்டம் என்று சொல்கிறது, அது மைரெங்கு வெள்ளையாக இருக்கின்றது, நடுவே வைரம், பச்சை, பவளம், பொன் இவைக ளெல்லாம் அதிலுள்ளது. எ-று.

இதுதான் மக்ாமன் மஹ்மூதுமா மிதுக்கு நடுநிலை சுறுமாகிற,
மதுதான் முஹம்மது வடிவுமாகு மதுக்கு நடுவே நின்றிலங்குசுட,
ரதுதான் குதரத்துல் ஆலமீனு மந்தவொளி வல்லாஹு வெனவே,
யதினமாய் வந்து மூடியிரு னருளில் லாக்கள்ள னிபுலீசுமே. (583)

(இ-ள்):—இதுதான் மகாமன்மஹ்மூதென்று அறிந்துக்கொள். அதுவே முஹம்மதுடைய வடிவென்பது, இதற்கு நடுநிலையானது சுறுமா உடைய ரெங்குள்ளது, அந்த சுருமாவுக்கு நடுவே ஒரு ஒளிவானது பிரகாசிக்கும். அது றப்புல் ஆலமீனுக இருக்கும். அந்த ஒளிவானது அல்லாஹு வென்று சொல்லும். இப்படி யில்லாமல் ஏக இருளாக வந்துமூடி வெளியாகுமே யாகில் திட்டமாக அது இபுலீசுடைய செயலாக இருக்கும், என்று உணர்ந்து விலகிக்கொள். எ-று.

கள்ள னிபுலீசைத் தவுபாவெட்டுங் கண்டாலிறையே யுன் கலிமாநிலை, கொள்ளுமீமானு மிதுதான்சொன்னேன் கோலமிசுலா மூமிது தான்சொன்னே, னள்ளத்தொலையாத அல்லாபொருளாத மனிதர்க்குக் கொள்ளையாக, வுள்ளபடியேதா னொளிப்பில்லாமுலமா முஹம்மது நபியுஞ் சொன்னர். (584)

(இ-ள்):—அவ்விதம் வெளியான கருமத்தை நீ வென்றுக் கொள்ளவேண்டுமானுல் உடனே தௌபாவை வாயால் சொன்னுல் அதுவே ஒருவாளாக வந்து அவனை வெட்டி நாசமாக்கிவிடும். இது தான் ஈமானும் இசுலாமுமாக இருக்கும். அல்லாவுடைய கஜனுவாகிய இவைகளை உலகத்தார்க்குச் சொல்லிவிட்டேன், அள்ளி அநுப வித்துக் கொள்ளுங்கள். எ-று.

சொன்னபதினுலு முஷாஹதாவுஞ் சுழியி னிருபத்தெட்டியாது, மென்னயாதாக விருப்பதானு மெழுத்தை மாற்றியே தலைகீழாக, முன்பின்னுய் மாற்றிப் பிடிக்கறியார் மூடர் படும்பாடுநாடா மென்று, மின்னம்பெரிதாகு முகுதிதாத்து மெழுத்தை யிருத்தினுலிது போதுமே. (585)

(இ-ள்):—மேலே சொன்ன பதினன்கு முஷாஹிதாக்களின் விபரங்களையும் அதன் அடிமூடுகளையும் சொல்லிவிட்டேன். இனி அதில் இருபத்தெட்டு யாதுகள் இருக்கிறது, அதை மாற்றி தலை கீழாகவும், முன் பின்னுகவும், பின்முன்னுகவும் வரமாற்றிப்

பிடித்துக்கொள்ள வகை தெரியாத மனிதர்களெல்லாம் காலை மரண நேரத்தில் திருட்டுப்பயல்களைப் போல் பறக்கப் பறக்க முழிப்பார்கள். அப்போது, எவ்விதம் முழித்தாலும் ஒரு பிரயோஜனமும் அவர்கள் காணகப் போகின்றதே கிடையாது. கமலத்தை வெளிச்சமாக்க வேண்டியது முக்கிய காரியம். எ-று.

போதமாகிய வணக்கந்தன்னிற் பொங்கி யுடலெல்லாம் பொதுமி மீறி, யாதியருளினூ லைந்துபோரா யாவிவொளிவாகி வணங்கி நிற்கு, நீதிபெரியவன் றனையுகாண்பா னினைவு பெருமையு மறியலாகுஞ், சோதிவணக்கந்தா னிதுபோலில்லைச் சுவர்க்கம் பலதெல்லாம் விழியிற் றோன்றும். (586)

(இ-ள்):—இவ்விதம் வணங்குகின்றதால் தவமானது அதிகப் பட்டு சரீரத்தின் கருவி கரணங்களெல்லாம் தன் வசப்பட்டு கூடி நிற்கும். அப்போது ஐந்து றூஹுகளும் ஒளிவாகப் பெருகி வணங்கி நிற்கும்படியான றப்புடைய தோற்றரவையும் காண்பாய், நீதி பெரியவன் தன்னையுங் காண்பாய். உன் நினைவுகளுடைய சொருபங்களையும் கண்டு கொள்வாய். றப்பைக் காண்கிறதற்கு இது போலொரு வணக்கமும் கிடையாது. சுவர்க்கத்தையும் அதிலுள்ள காட்சிகள் பலவகையும், உன் கண்ணிற்கண்டு கொள்வாய். எ-று.

தோன்றப் பணிவிடை செய்யும்வகை சொன்னேனிதுக் கொரு சூக்ஷங்கேளீர், ஊண்ட அசனத்தை நாளுக்குநா ளொவ்வோர் பிடியாகக்குறைப்பதுவும். விண்டுவெளியாக்கு மூச்சையெல்லாம் வீணாய்ப்போகாம லெழுத்திற்சேர்க்க, வண்டருலகு பாதாளஞ் சென்று மவனிவன் மீளும்வேறதாமே. (587)

(இ-ள்):—ஆனால் இந்த தவங்கள் கைகூடி வரவேண்டுமானால் நான் ஒரு உபாயஞ்சொல்கிறேன், கேள். நீ தின்றுவருகிற சாப்பாட்டை நாளுக்குநாள் சிறிது சிறிதாகக் குறைத்துக்கொண்டு வருவதுடன், நீ விடுகின்ற மூச்சிலும் ஒன்றையாவது பழுதாக்காமல் உன் நினைவில் பூரணமாக்கிக்கொண்டு வரவேண்டியது, அவ்விதம் வரும்போது உலகமெல்லாம் உன்னில் வந்து கலந்து ஒன்றுபட்டு விடும். எ-று.

ஆகும் வணக்கந்தா னுறங்கும்போதி லசதி வருகாமலிருக்க வென்றால், வாகாய்வரு மூச்சைத்தவறிடாமல் வருந்தி யாகூவைவா

சிலாக்கிச், சாவுமரணமு மணுகிடாது சற்குருகிலுகினை வொளிந்திடாது, வாகாம் வணக்கந்தா னுலகத்தோர்க்கு மனதுவாக்குடன் உரைத்திட்டானே. (588)

(இ-ள்):—அவ்விதம் தவஞ் செய்யும்போது, உன்வசம் இபுலீசானவன் அசதிகளையும், நித்திரையையும் கொண்டு வந்துவிடுவான், அதற்கொரு உபாயம் சொல்கிறேன். மூலத்தில் இருந்து வருகிற சுவாசத்தை வறவிடாமல் யாபகத்தில் நிறுத்தி அத்துடன் யாஹூ என்கிற கலிமாவைப் பொருந்தி வாசிலாக்கி விட்டாயாகில் மேற்படி கருமங்கள் உன்னை விட்டும் விலகிவிடுகிறதும் அன்றி எமனுடைய உத்தியோகமாகிய மரணமும் உனக்கில்லவே இல்லை. ஒரு நிமிஷநேரமாவது நினைவைவிட்டும், நீங்கி இருக்காதே ஞாபகம், சொன்னேன். எ-று.

உரைத்தகுருமுறை யுலகுதனி லொருநூறு கோடிவிதங்களுண்டும், பொருளெல்லா மறிந்து பார்த்தேன்வழி நானடந்தவாறிஃதாகுமே, யெழுத்திலடங்காதே யினிச்சொல்ல நானிதுபோது மறிவுள்ளோர்க்கெல்லாம், வருந்தி நிலையான முப்பாலையும் வணக்கமுஷாஹதாத் திட்டமெல்லாம். (589)

(இ-ள்):— அடமகனே! என் மஅரிபத்து மாலையை ஒரு மதிப்பிடாத ஆணிமுத்து மாலையாக உன் இருதயத்தில் அணிந்துக் கொள். குருமுறை! குருமுறை என்று இந்த உலகத்தில் கோடா கோடியான முறைகள் உண்டும், அவைகளெல்லாம் ஒரு பக்கமிருக்க இந்த முறைதான் அல்லாஹுவும், அவனுடைய றஸூலும் சொன்ன முறை, இதுதான், நான், முரீதுபெற்று, தவஞ்செய்து இந்தக் கடல் சூழ்ந்த அகன்ற உலகத்தின் கண்ணே நீண்ட காலங்களாக இருந்த முறையாக இருக்கும். இன்னும் இந்த முறைதான் நம்மளில் உள்ள அநேக பாரதுரமான ஒளலியாக்கள், குதுபுகள், கௌதுகளெல்லாம் எடுத்துச் செய்த தவங்களாக இருக்கும். நானும் இந்த முறையை இலேசில்காண்க இல்லை, நானும் எவ்வளவோ முறைகளையெல்லாங் கண்டு அவைகளில் ஒன்றும் காணமல் கடைசியாக, இந்த அரிய பெரிய முறையால் தான் வஸ்த்தைத் தெரிந்தேன். நான் கண்ட பயனை மனதில் இரக்கம் வைத்து உங்களுக்கும் சொல்லிவிட்டேன். இதைப்பற்றி விரித்தக்கால் இந்த உலகந்தண்டியில் ஒரு புஸ்தகம் எழுதினாலும் அடங்காது. ஆனதால் அறிவுள்ளவர்களுக்கு

இவ்வளவு போதுமானது. எல்லா முஷாஹிதாக்களும் என்னுடைய முப்பாலில் அடங்கிவிட்டன. எ-று.

திட்டமாகவே; நிலைக்கச் சொன்னேன்; தீன்தீன் முஹம்மது மஹரிபத்தை, மட்டில்லாமலே கடலாய்ச்சொன்னேன்; மக்கா முஹம்மது மஹரிபத்தை, வொட்டில்லாமலே யுதறிச்சொன்னே னுண்மை முஹம்மது மஹரிபத்தை, வெட்டி வெட்டியே பிளந்து சொன்னேன் வேதமுஹம்மது மஹரிபத்தை. (590)

(இ-ள்): —எங்கள் கருணைக்கோடிக் கடலாகிய தீன்தீன் முஹம்மதுடைய மஅரிபத்தை நான் சொல்வதில் முடிவைச் சொல்லி விட்டேன். மட்டிலடங்காத கடலாகவும் சொல்லி விட்டேன். யாதொரு மூடியும் இல்லாதபடி வெட்டவெளிச்சமாகச் சொல்லி விட்டேன். இன்னும் மஅரிபத்தென்கிற வாசனை சந்தன விருட்சத்தை ஏழை ஜனங்களுக்காக வேண்டி வெட்டிவெட்டிப் பிளந்து வைத்து விட்டேன். எ-று.

புட்டுப்புட்டல்லோவகுத்துச்சொன்னேன்; புறுக்கான்முஹம்மது மஹரிபத்தை, சட்டமாகவே விரித்துச்சொன்னேன்; சாகாமுஹம்மது மஹரிபத்தைக், கட்டுமட்டாகப் பிரித்துச் சொன்னேன்; ஹபீபு முஹம்மது மஹரிபத்தை, யெட்டுவிதத்திலே யறியச்சொன்னே னெங்கள் முஹம்மது மஹரிபத்தை. (591)

(இ-ள்):—நமது வள்ளலாகிய உலகமகா குருநாயகம் முஹம்மது நபியவர்களின் மஅரிபத்தின் முறைகளை அப்படியே புட்டுப் புட்டு வைத்திட்டேன். இன்னும் அது சொல்லும் சட்ட திட்டம்போல நல்ல ஒழுங்காகச் சொல்லிவிட்டேன். எட்டுக் கோட்டைகள் வளைந்து, அதனுள் பதினான்கு விதமான பட்டணங்கள் உற்பத்தி செய்து, அதனுள் நபிநாயகம் அவர்களின் சங்கைபெற்ற மஅரிபத்துல்லாவை யடைத்து நிரப்பிவிட்டேன்.

சொன்னார் முஹம்மதரொசியத்தாகச் சூழ்ந்த புவித்தீனரெல் லோர்க்குத்தான், முன்னாலுரைத்திடுந் தவநிலையை முகியர் வணக்கத்தின் வணங்கினாலு, மென்னவிதத்தாலுஞ் ஷறகைவிட்டா லென்னையிகழ்ந்தவ னிபுலீசாவா, னின்னத்தவம் பாழாகாகானு வானெத்தன் ஷபாஅத்துமவர்க்கிலேயே. (592)

(இ-ள்):—அத்துடன் நபியவர்கள் ஞானிகட்குச் சொல்லி இருக்கிற ஓசியத்தாவது, எப்பேர்ப்பட்ட தவத்தை யுடைய ஞானியானாலும், என்னுடைய ஷரீஅத்திற்கு மாற்றஞ்செய்வானே யாகில் அந்தப்பாதகன் என்னை இகழ்ச்சி செய்த இபுலீசாக இருப்பான். அவனுடைய தவங்கள் எல்லாம் பாழாகி நரகத்திற் சேருவான் என்பதே. எ-று.

எந்தன்ஷறகான வணக்கமெல்லா மிறையோன் குறுஆனிலிறக்கி வைத்தா, னிந்தனை செய்து ஷறகைத்தள்ளி நிலைக்குத்தவமெந்தன் மறையிற் சொன்ன, னெந்தன் ஷறகைத்தா னிகழ்த்திட்டானு மெவர்க்குள் ஷறகேநிங்கெனச் சொன்னானு, முந்தப்பெரியவன் முனிவுபெற்ற மூதேவியென்று முடுகிவெட்டே. (593)

(இ-ள்.):—என் ஷறகுக்காக வேண்டி வந்தது, குர்ஆன். குர்ஆனிலிருந்தது, ஞானம். ஆனதால் ஞானத்திற்குத் தாயுக் தகப்பனும் ஷரீஅத்தாக இருக்கும். ஓ சினேகிதர்களே! எந்த ஞானியாகிலும் என் ஷறீஅத்திற்கு மாற்றம் பேசுவார்களாகில் அந்த வார்த்தைகளை காதில் கேட்டவர்கள் அந்த மூதேவிகளை நாயனுடைய லஃனத்துப் பெற்றவர்கள் என்றுவாளால் வெட்டுங்கள் என்று நபி நாயகம் அவர்கள் சொல்லி இருக்கிறார்கள். எ-று

வெட்டுங்கரத்தின் வாளினைத்திடாமல் வீச்சொன்றுடனுண்டாய் விழத்துணித்தா, வெட்டுச் சுவர்க்கமு மவனுக்கீய்ந்தே னிறைக்கு மெனக்கு மேதோழனவான், வெட்டா திருந்தாலென் றும்மத் தோர்க்கு வேதமுஹம்மது பிணையுமில்லை, மட்டில்லாக்குரு னயத் தொன்றின் மன்னனிறைசொன்னான் மயக்கந்தீர. (594)

(இ-ள்.):—ஆனல் ஒரு வெட்டில் இரண்டு துண்டங்கள் விழும்படியாய் வெட்டி அவனுடைய உயிரை வதைப்பவர்களுக்கு. அல்லாஹுத்தஆலா சுவர்க்கத்தைச் சொந்தமாக நன்கொடை கொடுப்பான். அதல்லாமல் அவர்கள் கேட்குக் துஆக்களையும் கபூல் செய்வதுடன், என்னையும் என் றசூலையும் தன்னுடைய ஹபீபாய் காண்பான். அப்படிகொற்ற வார்த்தைகளை கேட்டும் வெட்டாமல் விட்டு விடுவானுகில் அவனுக்கு என் முஹம்மதுடைய ஷபாஅத்தும் இடையாது என்று றப்பு திருவுளமானன். எ-று.

மயமாங்குறுஆனி லிறையோன் சொன்னன் மனுடவிசுலாத்திற் ரொழுகைவிட்டாத், பயமத்துபோனகாபிராகும் பயஹாம்பர் பல ஹதீதுஞ் சொன்னர், கயமாங்காபீரும் காபிலோடு கயமாரோசலிக் குத்துபுலகத்தோறுஞ், ஐயமாஞ்ஷறகைத்தான் றறுக்குச் செய்தாற் சம்சயமில்லைக்காபிரானர். (595)

(இ-ள்.):—குர்ஆனில் ஒரு ஆயத்தில் ஹக்தஆலா சொல்லி இருக்கிறதாவது, எவனாகிலும் ஒருவன் என் றசூலின் ஷறகிற்கு மாற்றமாகத் தொழுகையை விட்டிருப்பானாகில் திட்டமாக காபிராக இருப்பான், என்று நபியவர்களும் சொல்லி இருக்கின்றார்கள். எ-று.

காபிரிசுலாமுஞ் சரிதானென்பார் கத்தபெரியவ னமைத்தா னென்பார், பாவநன்மையுஞ் சரிதானென்பார் பலதுமவனிது செயலே யென்பார், கோவியாமலே மார்புதனிற் குளிர்ந்த சந்தனந் தன்னைப்பூசி, யாவி யெழும்பவே மழுவைக்காய்ச்சி யழுந்திச் சொருகிடுமேழுதாரையில். (596)

(இ-ள்.):—காரியமிப்படி இருக்க, உலகத்தில் சிலபலமூடாத்து மாக்கள், காபிரும், இசுலாமும் ஒன்று தான், எல்லாரையும் றப்பு தான் படைத்தான் என்றும், நம்மையுந் தீமையுஞ் சரிதான் என்றும், நாம் நடத்தும் செயல்கள் யாவும் அவனுடைய செயலல்லாது வேறில்லை என்றும், சொல்லித் திரிவார்கள், அவர்களுடைய மார்பில் சந்தனத்தைப்பூசி, அதில் இரும்பை நன்றாக காய்ச்சி சேர்த்துப் பாருங்கள், அவன் சும்மா இருப்பானேயாகில் அவன் சொல்லப் பாத்திரவாளன் தான் என்று எண்ணிக்கொள்ளுங்கள். எ-று.

இட்டமழுவோடுசந்தனமு மிரண்டுஞ்சரியாக விருக்குமானாற், கெட்டபயல்சொன்னான் பலஞானத்தைக் கெடுமை புகழ்ச்சியும் சரீ யென்னலாம், எட்டுவிதத்திலே தெரியச்சொன்னே னின்னமெது சொலக்கேட்பவர்க்குப், பட்டா லினிவந்து பலன்பெறுமோ பாரில் வணங்காரேபாவியாகும். (597)

(இ-ள்.):—ஓ, எளிய அறிவுள்ள மனிதர்களே! நான் இந்த மஹுரிபத்துமாலையில் எல்லா ஞானத்தின் அந்தத்தையும் எட்டே விதத்தில் சொல்லிவிட்டேன், இதை நம்பாத வீணர்களெல்லாம் அநியாயமாகக் கைசேதப்பட்டு முழிப்பார்கள். எ-று.

பாரில்வணங்காதோர் பாவியென்றும்படித்துப் பொருள்கண்டு வணங்கவென்றுங், கூறினேனிதை மஹுரிபத்துக் குணமாமெனச் சொல்லியுலகத்தோர்க்கு, ஆரும்பொருள்கண்டு தவமே செய்யா வறியார்தமக்கெல்லா மெளிதாமின்னம், வாருக ஞானரெத்னகுர வஞ்சி வகையையுறைத்திட்டே னறிந்துபசரே. (598)

(இ-ள்.):—இந்தமாலையைப் படிப்பவர்கள் பெரியோர்களல்ல. என்கிலும், அதன் அர்த்தப்போகின்ற பாதையைத் தனித்திருந்து அறிந்துபோகவேண்டும். இதன் மூடிகளையெல்லாங்கூட்டித்திரட்டி என்னுடைய ஞானரத்னக் குறவஞ்சியில் சொல்லி விட்டேன், நுழைந்து பார்த்தறிந்துக்கொள். எ-று.

அறிந்துபாருங்காண்ஞானரெத்ன மதினுமதிகமாம் பிசுமில் குறம், இறந்துபோகுமுன் நீனோர்களே யான் சொன்ன பிசுமில்க்குற மதனைப், பொருந்தியதிலுள்ள பொருளைப்பாரும் பூவிலாருண்டும் பொருளுரைக்க, வருந்தியதின் படி வணக்கஞ் செய்தால் வல்ல பெரியவனருளிலாவார். (599)

•(இ-ள்):— என் ஞானரத்னக் குறவஞ்சியிலும் அதிகமான பொருட்களைப் பிண்டம் பிண்டமாகக் கட்டவிழ்த்து என்னுடைய பிஸ்மில் குறத்தில் சொல்லி விட்டேன். ஓ அற்பமதியுள்ள மனிதர்களே! நீங்கள் இருக்கின்ற கனவிலிருந்து வீணேசெத்து மடிந்து உங்கள் சரீரத்தை விட்டு விடுவதற்கு முன்னமே என் பிஸ்மில் குறத்தை எறிட்டுப் பார்த்து ஆளாகிப் போங்கள். என் பிஸ்மில் குறத்துக்கு அருத்தம் சொல்ல இந்தப் பூமியில் ஒரு ஆண் பிள்ளை பிறந்தும் இருக்கின்றானா? அதன் படி நடந்துக் கொள்வார்கள் அடையும் சந்தோஷத்தை நான் ஏன் இப்போது சொல்ல வேண்டும். எ-று.

வல்லோனருள்கடற் கடுகிலான வாக்கு முனதுடனோர்மையாகச், சொல்லுங்காவிய மிதுமூன்றையுஞ் சுருக்கியானந்தக் கலிபாவொன்றி, லெல்லாப் பொருளையுங் கடுவொன்றுக்கு ளேழுகடலுள்ளே யடைத்தவாறாய், அல்லாவடியாரினபியுமத்தி லறிந்தோர் ரொலியாகக் கூறினேனே. (600)

(இ-ள்):— இந்த மூன்று ஞானக் காவியங்களையும் ஒருங்கே திரட்டி நம்முடைய ஞான ஆனந்தக் கலிப்பா என்கிற சிறிய நூலில் அடக்கி விட்டேன். எப்படியானால் ஒரு கடுகைத் துளைத்து அதனுள்ளே ஏழு கடல்களையும் அடைத்த வண்ணமாகச் சொல்லி விட்டேன். நபியுடைய உம்மத்தில் அதை அறியும் கெட்டிகாரர்கள் அறிந்து ஒலிமார்களாவார்கள். எ-று.

கூறும் பொருளான ஷறகறியேன் குதாயே பொருளாஞ் தொழுதறியேன், வேறும் பெரியோர்களிடஞ் சென்று யான்றேர்ந்து படித்திடும் பொருளறியேன், பாரிற் கொடிதான பாவமெல்லாம் பாவிமுழுதுமேசுமந்தபயல், பீரு முஹம்மதென் றெளியபயல் பெரிய பிழை யெல்லாஞ் செய்த பாவி. (601)

(இ-ள்):— இந்தக் காவியங்களைப் பாடியவன் எப்படிபட்டவன் என்றால், நபியவர்கள் சொல்லிய ஷறகில் ஒரு சிறிதும் அறிய மாட்டேன், றப்பை ஒரு நாளாவது தொழுதும் அறிய மாட்டேன், ஞானவான்களான நாதாக்களைப் பின் துடர்ந்தும் அறிய மாட்டேன், தமிழும் படித்தறிய மாட்டேன், இந்த உலகத்தில் என்ன எவ்வித பாவங்களும், தடை யில்லாமல் செய்து அள்ளிச் சுமந்தப் பாவியான அடிமைத்தன முடையவன், பீர் முஹம்மது என்கிற பேர் உடைய வனுக இருக்கிறேன். எ.று.

பாவியான் செய்த பெரும் பாவங்கள் பதிஞலுலகு போற் பதிஞயிரம், பாவியான் செய்த பிழை யனைத்தும் படைத்த பெரியோனே பொருத்தருள்வாய், பாவிப்பயலையும் மற்றோரையும் படைத்தோ னிருபதி தனில் வாழ்விக்கப், பாவியானுந்தான் பாதம் பணிந்தே ஞ பணிந்தேன் பாவி தானே. (602)

(இ-ள்):— இலாஹியாகிய றப்பே! இப்பாவியாகிய நான் செய்த பெரும் பாவங்கள் பதிஞலு உலகத்தையும் நிரப்பி இருக்கின்றது, அவை எல்லாவற்றையும் பொறுக்கும் கிருபையாளன் உன்னை அன்றி யாரும் கிடையாது. ஆகையால் உன் சிற்றடிமையான என்னையும், மற்ற தீனோர்களையும் ஆதரித்து பிழை பொறுப்பது உன் தயாள கடனுக இருக்கும், அதற்காக நான் உன்னைப் பணிகின்றேன். எ-று.

பாவியாகாம னுலகத்தோர்க்குப் பாரக்கடலதனை யுடைத்து விட்டே, னுவிலழியுமுன் றனையறிந்து மறியாப்பரத்தையு மறிந்திடுங்காள், காவியாவிலே யழியாமலே ஹபீபு முஹம்மது ஷறகின்படி, யாகு மூமின்கடவமுஞ்செய்தாலவனே யிவனுகுந் தானவனே. (603)

(இ-ள்):— வஞ்சனைக்காரப் பாவி என்று என்னை உலகம் தூற்றுமல் ஞான மென்கிற கடலை உடைத்துக் காட்டி விட்டேன். அறிந்தவன், அடிமைத் தனத்தை விட்டும், றப்புடைய சிபத்தில் ஒன்று படுவான் இவனே அவனுகவும் இருப்பான். எ-று.

தானே தானவனு முன்னவன் தம்பி ரானவ னெம்பிரானும், ஆன வகையோடே பொருந்திப் பார்த்தே யறிவினாலறிவறிவிற் கூட்டு, மீனமாகவே யவனென்று லிபுலீ சிற்கெட்ட இபுலீசாகு, மானங்குலையவே கணவாயைந்து மரித்து நரகத்திற் றுஞ்சுவரே. ()

(இ-ள்):— அறிகின்ற திறமையாளர்களான புண்ணியவான்கள் எல்லாம் றப்புடைய சூறத்தில் விரவிக் கொள்வார்கள். இந்த அகமியத்தை மௌனஞ் சாதியாமல் வீதிதோறும் வாய் பினத்திக் கொண்டு திரிகின்ற நாய்க ளெல்லாம் காபிராகி நரகயாதனைக்குட் படுவார்கள். நபியுடைய ஷபா அத்தும் அவர்களுக்குக் கிடையாது. எ-று.

துஞ்சுஞ் சக்கறுத்துக் கணவாயொன்று தோன்றுங் கபுரினிற் கணவாயொன்றங், கஞ்சுமகுசறிற் கணவாயொன்றே யறியதிராசினிற் கணவாயொன்று, மிஞ்சும் பாலத்திற் கணவாயொன்று மெத்தத் தளம்பியே நரகானுவான், பஞ்சமனுடரே பகாக்கேனும் பரத்தை யறியார்க்குத் தனிமையாகும். (605)

(இ-ள்):— சக்றுத்தில் ஒரு நெருப்புமலை, கபுறில் ஒரு நெருப்பு மலை, மஹ்ஷரில் ஒரு நெருப்புமலை, மீஸானில் ஒரு நெருப்புமலை, சிறுத்துல் முஸ்தகின் பாலத்தில் எத்தனையோ நெருப்பு மலைகள் வந்து தோன்றும். கலிமாவின் பொருளை கண்டறியாதவர் களெல்லாம் அகப்பட்டு எரிந்து நரக வேதனையடைவார்கள். எ-று.

ஆகுமுலகத்திற் றனிமையாகு மரியசக்கறுத்திற் றனிமையாகு, மேகுங் கபுறினிற் றனிமையாகு மிருவர் கேள்விக்குத் தனிமையாகும், வாகு மஹ்ஷரிற் றனிமையாகும் வறையு மேட்டினிற் றனிமையாகும், பாகுத்திராசினிற் றனிமையாகும் பாலங்கடக்கவுந் தனிமையாகும். ()

(இ-ள்):— ஒவ்வொரு மனிதனும், உலகத்திலும், சக்கறுத் திலும், கபுறிலும், இருமன் காத்தீபின்களுடைய கேள்விக்கும் மஹ்ஷரிலும், மீஸான் தராசிலும், சிறுத்துல் முஸ்த்தகின் பாலத்திலும் தனித்தவனாகவே இருக்கிறான். எ-று.

ஆகுந் தனிமைதா னறிந்திலார்க்கு மருவினருளெல்லா மறிந்த பேர்க்கும், ஏக னிறையவ னருளினாலே யெல்லாத் தனிமையு மெளிதா மின்னம், வாகுபெருமழிப்பதிதனிலே வாழ்வா ருலகத்தார் தானறியத், தாகு முப்பாவின் வகைகளெல்லாந் தாணியறியவு முரைத்த முத்தே. (607)

(இ-ள்):— றப்புடைய தவத்தைக்கண்டு ஒழுங்கு போலச் செய்த காதாக்களுக்கு ஒரு தனிமையுங் கிடையாது. அவர்கள் அநேகத் துணையுடன் இருந்து சிறப்படைவார்கள், சதாவும் சுவர்க்க லோகத்தில் வீற்றிருப்பார்கள். எ-று.

முத்துப் பவளமு மாணிக்கமு முறையுட்ப ராகம் கோமேதக, மற்றக்கதையல்ல மஹரிபத்தை மகிழ்ந்து சரமாகத் தொடுத்த மாலை, யெற்ற தெவர்க்குமே யுலகத்தனி லிறையோ னருள்பெற்று லேற்று மெற்றும், வித்தை மதமல்லப் பொய்யுமல்ல வேதாம்பர் சொன்னரிதின் பெருமை. (608)

(இ-ள்):— முத்து முதலிய ரத்தினாதிகளால் தொடுத்திருக் கின்ற மாலைகளைப் போல் என்னுடைய மஹரிபத்து மாலை என்பதை எண்ணி விடாதீர்கள். அது உங்களை விட்டும் விலகிவிடக் கூடியது. இந்த மாலையோ உங்களை ஈடேற்றம் பெரும்படி செய்வது. இதன் பெருமை நபியவர்களைக் கொண்டும் தெரிந்திருக்கின்றது. எ-று.

பெருமை யுரைக்கவும் வலுப்பமில்லாப் பெரியோர் படிக்கவுங் கேட்டிருந்தா, லொருவர் மனதுக்குட் டரித்தபல னொருகோடி ஹச்சுப்பலனுமாகும், பிரியமாகவே முழுதுங் கேட்டாற் பெரியோ னபிமார்கள் கோடிபலன், வரிசைப் பொருளிலே கொஞ்சங் கொஞ்சம் வலுமையவர்மட்டும் படித்தபேர்க்கு. (609)

(இ-ள்):— இத்தனை அருமை பெருமைகளை யுடைய இந்த நூலானது, இருலோகங்களுக்கும் ஸாஸனமாக இருக்கின்றது. ஒருவர் இதைப்படிக்க அதை மற்றவர்கள் கேட்ட பலனானது, கோடி ஹஜ்ஜு செய்த பலனைப் பார்க்கிலும் அதிகம் உள்ளது. இதைப் படிக்க முழுதுங்கேட்டால் ஒரு நபிக்குரிய தறஜாத்துக் கிடைக்கும். கேட்கும் போது இதன் பொருளை கொஞ்சம் மனதில் பதியவைத்தால் உடனே யவர்களுக்கு நரகம் ஹறுமாக இருக்கும். எ-று.

படித்த பேர்க்கெல்லா நரகம் ஹறும் படைத்தோன் ரகசியங் கடனைதால், முடித்து முழுதுமே படித்தார் பலன் முகியாதெழுது வரிமையோ ரெல்லாம், படித்த பொருட்கண்டு பலபேர்க்கெல்லாம் படைத்தோனிடத்திலே தோஸ்துமாகும், அடித்தான் மனையிலே வெள்ளிதிங்க ளதபாவுலுவுடன் திட்சை செய்தால். (610)

(இ-ள்):— இதைப்படித்த பலன், கேட்ட பலன், அதனால் அர்த்தம் தெரிந்த பலன், இவைகளால் றப்புடைய முஹப்பத்திற் குரியவனாவான். தீனானவர்கள் தங்கள் வீடுகளிலும் இதை வைத்துப் படித்து வருவார்களானால், அந்த வீட்டார் யாவரும் ரமிலானக ஷெய்கின் கையில் முரீது பெற்ற பலன் உண்டாகும். எ-று.

செய்த உபதேசம் பாத்தியாவைச் சிறப்பா யோதிய பேர்கட் கெல்லா, மெய்யாயவர் செய்த பாவமெல்லா மேனிதனை விட்டுக் கழன்று போகும், வைய மனுவோடு வாழ்ந்திருப்பார் வாழ்வாருலகூழி காலமட்டு, மைய மறிவேதா னுலகத்தோர்க்கு மறியவுரைத்திட்டேன் ஆமீன்! ஆமீன். (611)

(இ-ள்):—இதைப்படித்து முடித்து பாத்திஹாதனாது முதலியவைகள் செய்தவர்கள் செய்த பாவதோஷங்கள். எல்லாம் அவரவர்கள் சரீரங்களைவிட்டும் உதிர்ந்துவிடும். நபியுடைய உம்மத்துக்களுடன் சுவர்க்க நாட்டில் வாழ்ந்திருப்பார்கள். ஆனால் றப்புடைய கிருபையைக் கொண்டும், றசூல், முஹியித்தீன் உடைய கிருபையைக் கொண்டும், படித்தவர், கேட்டவர்கள், இதன் பொருளை அரும்பிரயாசை யெடுத்து எழுதி முடித்த செவ்வல்நெயினா முஹம்மதுப் பாவலனும், இதனை அரும்பிரையாசையுடன் அச்சிட்டு வெளியாக்கிய ஸ்ரீ மான் எம். ஏ. ஷேக் மதார் சாஹிப் அவர்களும், அவர்களின் சந்ததியார்களும் எங்காளும் சுகமாக வாழ்ந்திருக்க றப்பு துணை செய்வானாகவும். ஆமீன் யாறப்பல் ஆலமீன் யாஅர்ஹமர்றுஹிமீன்.

மஅரிபத்துமாலை பொழிப்புரை
முற்றிற்று



Printed at Shahul Hameedia Press, Madras.

# அரிதாய் வெளிவந்த ஞான உரைகள்

சுமார் முன்னூறு வருடங்களுக்கு முன் மலையாள மண்டலத்தைச் சார்ந்த தற்கலையில் வாழ்ந்திருந்து அநேக அற்புதங்களைக் காட்டிய, மெஞ்ஞான சொரூபராகிய காமிலொலி ஹஜரத் பீர்முஹம்மது ஸாஹிபு ஒலியுல்லா அவர்கள் திருவாய் மலர்ந்தருளிச் செய்த மெஞ்ஞானத் திருப்பாடல் மூலம் முழுமையும் உரை எழுதப்படாமல் பெருங் குறையா யிருந்ததினால், அக்குறையை நீக்கும் பொருட்டு அநேக மஹான்களின் ஞான ஆராய்ச்சியின் கருத்துகளைக்கொண்டும் மெஞ்ஞான அருள் நிறைந்த மஹா வித்வான்களைக் கொண்டும் உரை எழுதி தெளிவாய் அச்சிட்டு வெளியாக்கப் பட்டிருக்கிறது.

இந்நூலானது ஹகாயிகு மஅரிபாவின் விஷயங்களை நன்கு வரை யறுத்துக் காட்டுவதோடும், அஹது, உஹது, வாஹிது அதாவது அடி, முடி, நடு என்னும் உண்மை ஞானக்கருத்துகளையும், அதை அடையும் சாதனங்களான முரீது, நாட்டம், தேட்டம், வாசி யேற்றம், இரக்கம், கல்வத்து, தவம், சாதனை முதலிய வழிபாடு களையும் நுலக்கமாய் எடுத்துக் காட்டும்.

பிஸ்மில் குறம் ஞான விளக்கவுரை விலை ரூ. 1–15—0

ஞானரத்தின குறவஞ்சி உரையுடன் கிளேஸ் காகிதம் விலை ரூ. 1–15—0

ஞான முச்சுடர் பதிகம் (அவதாரிக உரை) விலை ரூ. 1—9—0

ஞானக் குறம் பகுத்தறிவுரை விலை ரூ. 1—4—0

ஞானப் பால் அகமிய உரை, ஞானப்பூட்டு திரவுகோலுரை ஆப்பைண்டு விலை அணா. 0–15—0

ஞான ஒப்பாரி திருகட்டளை உரை, கருஆரார் பூஜாவிதி தீர்ச்சி உரை ஆப் பைண்டு விலை அணா. 0–15—0

---

கிடைக்குமிடம்:—

ஹாஜி எம். எ. ஷாஹுல் ஹமீது அண்டு ஸன்ஸ்,
20, ஷைரோட், திருவல்லிக்கேணி,
மதறாஸ் 5.